காகத்தின் சத்துருமித்துரு.

102 பழியானகாகத்தின் சத்துருவைக்கேளு
பாலகனேபசுமயிலும் கோழிஆகும்
வழியானமித்துருவைச் சொல்லக்கேளு
வளர்ஆந்தைவல்லூறும் உறவாய்நிற்கும்
றெழியானஎவ்வகைக்கு மித்துருவேவேண்டும்
சீவனென்றுங்கூடிரண்டாய்த் திரமாய்வாழும்
அழியாமல்இருக்க சத்துருஆகாது
அப்பனேசத்துருவின் பயன்சொல்லாதே. 42

வல்லூரின்சத்துருமித்துரு.

103 பலனனவல்லூரின் சத்துருவைக்கேளு
பார்தனிலேவாழுகின்ற கோழிஆந்தை
நலமானமித்துருவைச் சொல்வேன்மக்காள்
நல்லமயில்காகமென்ன நவிலலாகும்
துலையானமித்துருவால் வாழ்வார்கோடி
துர்ச்சனனும்சத்துருவாற் கெட்டார்கோடி
வலனனமித்துருவே உறவதாச்சு
வாறுனசத்துருவாற் பகையுண்டாச்சு. 43

மித்துருவின் பலாபலன்.

104 ஆச்சப்பாமித்துருவால் உலகம்வாழும்
அப்பனேஒருவனைத்தான் அடுத்துக்கொண்டு
பாச்சப்பாகிளைகோடி மகிழ்ச்சிபெற்று
பதிவாகயிருந்துஉற வாடிக்கொண்டு
போச்சப்பாயினச்சேர்க்கை யாகவாழ்வார்
பொல்லாங்குவொன்றுமில்லை மித்துருவைத்தொட்டு
வாச்சப்பாமித்துருவால் சேர்ந்தநேரம்
மனமகிழ்ச்சியாயிருந்து வாழ்வார்பாரே. 44

இதுவுமது.

105 பாரப்பாமித்துருவாய் இருந்தநேரம்
பார்தனிலேவரவுசெய்தார் பலன்உண்டாகும்
நேரப்பாயெந்தெந்த தொழில்செய்தாலும்
நேர்மையுள்ளமித்துருவிற் செய்தாயானல்
காரப்பாஎவ்வகையும் கைகூடும்பார்
கலந்துவுறவாடியல்லோ பொருள்கள்சேரும்

ஆரப்பாஅறிவார்கள் மித்துருவின்நேர்மை
அப்பனேயறிந்தவர்க்குப் பகைதான்போச்சே. 45

இதுவுமது.

106 போச்சுதடாபகைபோச்சு பொருள்உண்டாச்சு
பூமிதனில்எவ்வகையும் பலிதம்ஆச்சு
வாச்சுதடாதனச்சேர்க்கை மகிழ்ந்தசெல்வம்
மங்களமாய்சோபனங்கள் வாழ்வுநன்று
ஏச்சுதடாகூடிஅங்கே செய்யுநேரம்
என்மகனேமித்துருவாய் இருக்கவேண்டும்
தாட்சிஒன்றும்இல்லாமல் எல்லாம்ஆகும்
சண்டாளசத்துருவை அகற்றிச்செய்யே. 46

107 அத்திலேசத்துருவும் மித்துருவும்உண்டு
அப்பனேயதனால்சந்தோஷம்துக்கம்
செகத்திலேஅதுபோல எண்ணவேண்டும்
தீவினையும்நல்வினையும் செனனங்கூறு
சுகத்திலேஇருந்தவர்க்கு இரண்டுபோச்சோ
துன்பவினையணுகாமல் அற்றுப்போச்சோ
சுகத்திலேஈப்புகுந்த வாறுபோலே
சஞ்சலமும்சுகம்இரண்டும் சரிதான்பாரே. 47

இதுவுமது.

108 சரியானமித்துருவும் சத்துருவும்ஒன்று
சடலத்தில்சந்தோஷம் கோபம்ஒன்று
விரிவானஇடம்வொன்று நலம்பொலனும்ஒன்று
மேதினியில்நன்மைதன்மை இரண்டும்வொன்று
குறியானபஞ்சகர்த்தம் இருந்தஇடம்வொன்று
கூறியேகுவித்தெழுந்த வாசிநிலைஒன்று
நெறியானசிவசெந்தைப் படைத்தபொருள்ஒன்று
நிலையிருந்தஇடத்திலல்லோ இடாஉண்டாச்சே. 48

இதுவுமது.

109 இடரானசத்துருவின் பகைபொல்லாது
எண்ணியதோர்காரியங்கள் கூடுவதும்இல்லை
படரானபொருள்சேதம் உறவுபகையாகும்
பார்தனிலேசத்துருவின் பலன்தானப்பா

கடவானசோபனமும் முடியாதையா
கனிவாகமுடிந்திடினும் வாழ்வதில்லை
வடமானபொருள்சோரம் ஆகும்பாரு
வழக்கிலேபோனாலும் வெல்லார்தானே. 49

இதுவுமது

110 தானென்றசத்துருவால் முடியாதொன்று
தரணிதனில்நன்மையால் இருப்பதில்லை
கோன்யென்றசிவன்செயல்என் றுலகம்பேசும்
கொடுமையுள்ளநேரம்யென்று அறியமாட்டார்
வானென்றநேரமேது அறிந்தபெரியோர்கள்
வழியானநேரமென்று மகிழ்ந்துகொள்வார்
ஆனென்றமனமிடைஞ்சல் வாராமல்தான்
அப்பனேநேரமதை அறிந்துகொள்ளே. 50

இதுவுமது.

111 அறிந்துகொண்டுசத்துருவைச் சேர்த்தாயானால்
அப்பனேயறுபத்து நாளாகும்ஆகும்
தெரிந்துகொண்டுயெதிரியிடம் பட்சிக்கப்பா
சினமானசத்துருவைச் சேர்த்துக்கொண்டு
தரிந்துகொண்டுசெய்கிறவன் பட்சிக்கப்பா
தண்மையுள்ளமித்துருவைச் சேர்த்தாயானால்
பரிந்துகொண்டுசெய்தொழில் பலிக்குமப்பா
பார்தனிலேயிதைவிட்டால் பலியாதுபாரே. 51

இதுவுமது

112 பலியாதேசத்துருவைச் சேர்க்காவிட்டால்
பங்கமறுமங்கத்தாற் பழுதேயில்லை
வலியாதேமித்துருவைச் சேர்த்துக்கொண்டால்
மனம்நினைத்தபடியங்கே முடியாதையா
சலியாதேசாஸ்திரத்தைப் பழுதென்றெண்ணி
தான்நினைத்தபடிசெய்தால் பலிக்குமோசொல்
கலியாதேகைபாகம் செய்பாகம்தப்பிக்
கண்டபடிசெய்ததினால் கனிவாகாதே. 52

இதுவுமது.

113 கனியாதுமனத்திற்கு ருசிகொள்ளாது
கற்போலேயிருந்துவிடும் கடக்கத்தள்ளு
பணியாதுகருக்குருவும் காணாவிட்டால்
பாவைபோல்இருந்துவிடு பலிதம்இல்லை

குனியாதுநிமிராது குணம்செய்யாது
குணமாகமாட்டாது சத்துருவைவிட்டால்
தனியாதுஅஷ்டகன்ம வித்தைஐயா
தானுடமாட்டாது தணிந்துபோமே. 53

இதுவுமது.

114 தணிந்துபோம்பட்சிவித்தை பலிதம்இல்லை
தனதானமித்துருசத் துருவைவிட்டால்
குணிந்துபோம்எத்தொழிலும் குணம்செய்யாது
கூடிவரப்போரதில்லை அறியாவிட்டால்
தணிந்துபோம்நன்மையிலே நன்மைசெய்யும்
கடிதானதீமையிலே தீமைசெய்யும்
அணிந்துபோம்நேரமங்கே முன்பின்னுக
அசதியாய்ப்போகாமல் அறிவாய்த்தீரனே. 54

பொதுப்படலம் - முற்றிற்று.



உ

ஆரூடகாண்டம்.

## சிந்தனைப்படலம்.

(o)

அசுவனியின் பலாபலன்.

115 சொல்லுவேன்அசுவினிதான் உதயமானல்
சோர்வானஜனவரத்தும் பொருள்வரத்தாம்
வெல்லவேநினைத்தபொருள் கைவசமேசேரும்
வெல்லவரும்பகைகுருமோ உறவுவரும்பாரு
நில்லவேசோபனங்கள் கூடுவதுதிண்ணம்
நினைத்ததொருசிந்தனைதான் மஞ்சள்நிறமாகும்
மல்லவேபட்சிபகை இல்லாவிட்டால்
பலிக்குமடாநாள்எட்டுக் குள்ளேபாரே. 1

116 உள்ளானஊண்பகையே ஆடுங்காலம்
உத்தமனேவிலைதணிந்த பொருளுமாகும்

வெள்ளானகிழங்குவகை என்றுசொல்லு
மேதினிபிற்பிறர்வருவார் செலவுகாணும்
தள்ளானபின்னுதவி சந்தம்இல்லை
சஞ்சலங்கள்மனதிற்குத் தானேதோன்றும்
கொள்ளான இப்பலநாள் பதினைந்துக்குள்
குணம்ஆன நன்மைதின்மை கூடுகாணே. 2

இதுவுமது.

117 காணுமேஅரசுபகை ஆனால்மந்தா
கைப்பொருளேசெலவாகும் வரத்தோன்றில்லை
தோணுமேகிளைஞர்களிற் சேதம்உண்டு
சொற்பெரியபிரபுபகை ஆகும்பாரு
வேணுமேபெண்டுபிள்ளை பகையும்ஆகும்
விலையில்லாப்பொருள்என்று சொல்லல்ஆகும்
ஆணுமேயிரண்டுபத்து நாளைக்குள்ளே
அணுகுமடாயிப்பலனை அறிந்துபாரும். 3

இதுவுமது.

118 அறிந்துபார்ஊன்அரசு பகையேஆனால்
அப்பனேநினைத்தபொருள் ஒன்றும்இல்லை
தெரிந்துபார்அப்பொருள் கைவசப்படாது
சிக்குவதுஒன்றில்லை சேதம்ஆகும்
சரிந்துபோம்நோய்வரும்பின் பகையுமுண்டு
தள்ளிவிடுபலிதம்இல்லை என்றுசொல்லு
நெரிந்துபோம்மூன்றுபத்து நாளைக்குள்ளே
நிலைதவிரும்நன்மையெல்லாம் துன்மையாமே. 4

இதுவுமது.

119 துன்மைஒன்றும்இல்லைபப்பா பகையில்லாவிட்டால்
தினம்ஐந்துக்குள்வரத்து மெத்தஉண்டு
நன்மையென்றகாரியங்கள் மிகவுங்கூடும்
நடக்குமடாநினைத்ததெல்லாம் நன்றாய்த்தானே
வன்மைஎன்றதங்கம்என்று சொல்லல்ஆகும்
மனமகிழ்ச்சிசோபனங்கள் திண்ணஆகும்
மென்மைஎன்றகரவுஉற வாகும்பாரு
மேன்மைஎன்றால்சொல்லப்போமோ உறவநன்றே. 5

பரணியின்பலன்.

120 உறவானபரணிதான் உதயம்ஆனால்
உத்தமனேகருப்சிவப்பு நிறமும்ஆகும்
திறம்ஆனநிலங்கள்வரும் உறவுசேர்க்கை
செம்மையுடன்மறுதேசம் போனார்மீள்வர்
கறம்ஆனஅரசர்உற வாகும்பாரு
கனத்ததொருகெர்ப்பம்அது ஆணேஆகும்
சிரப்ஆனிசோபனங்கள் கூடும்நல்ல
செய்திடுகேட்கலாகும் தினந்தான்பத்தே. 6

இதுவுமது.

121 தினம்ஆகஊண்பகையே ஆகாதுபாரு
சிவந்தகருப்பாம்பதுவும் விலைஅதிகம்அப்பா
கனமானசோபனத்திற் குலைவுவரும்திண்ணம்
கனத்ததொருபூமியிலே வருமானகொஞ்சம்
இனமாகயிருந்தாலும் பகையதாகும்
இடம்நாடிப்போனவர்கள் இடைஞ்சலிலேநிற்பார்
மனமாறப்பசிவேளை பசிப்படைத்தல்இல்லை
வந்திடும்பார்நாள்மூன்று அஞ்சுஆமே. 7

இதுவுமது.

122 அஞ்சாதஅரசுபகை யானால்கேளு
அப்பனேநினைத்தபொருள் விலையோயில்லை
மிஞ்சாதஉறவும்இலை பொருள்வரத்தில்லை
வேந்தன்உறவொருநாளும் விரும்புவதில்லை
நஞ்சாகிஊர்வழியிற் போனபேர்கள்
நன்மையாய்ஒருபோதும் வருவதில்லை
பஞ்சாகிப்பொருட்சேதம் ஆகும்பாரு
பலன்வருவதிரண்டுபத்துநாள் இதாமே. 8

இதுவுமது.

123 நாளானஊண்அரசுபகை இல்லாவிட்டால்
நலம்பெறலாம்விலையதிகம் எல்லாம்சேரும்
தாளானசோபனங்கள் கூடும்பின்பு
தரணிதனிற்பிறந்தபிள்ளை தரணியாள்வான்
வாளானவினைவருவ தில்லைபாரு
மனமகிழ்ச்சிமெத்தவுண்டு உறவுசேர்க்கை

கேளானநாள்எழிற் குணமதாகும்
கூடிவரும்செல்வமெனக் குறித்துசொல்லே, 9

இதுவுமது.

124 குறித்துநின்றஊண்அரசு பகையேயானால்
கூடிவரப்போறதில்லை பகையும்உண்டு
கறுத்துநின்றமனம்போல வருவதில்லை
கனவுகண்டகாட்சியைப்போல் ஆகும்பாரு
தரித்துநின்றுபோனவர்கள் மீள்வதில்லை
தான்நினைத்தகாரியமும் மணம்கூடாது
மரிந்திரந்துபோய்விடும்பார் பிறந்தபிள்ளை
மாளுமேநாலைந்துக் குள்ளேபாரே. 10

கார்த்திகையின் பலாபலன்.

125 பாரடாகார்த்திகைதான் உதயம்ஆனால்
பண்புடனேநினைத்தபொருள் கருப்பாம்பாரு
தேரடாபெண்பெருவள் செலவுநேரும்
தேடியதோர்பொருள்வரத்து இல்லைஇல்லை
காரடாஉடலில்வந்த பிணிதீராது
கணியாறுபிரபுவா வாகாதையா
சேரடாஈட்பாம்பர் போலேமக்காள்
சிதறுமேநாள்பத்தில் சிதறும்பாரே. 11

இதுவுமது.

126 சிதறுமேஊண்பகையே ஆகும்காலம்
சிந்தைதனில்நினைத்தபொருள் கல்மண்ஆகும்
பதறுமேஉடல்உயிரும் திளையும்தேகம்
பகைவரும்பார்உண்பதுவும் இல்லைஇல்லை
அதிரவேபிறந்தபிள்ளை இறந்துபோகும்
அகலவேபோனவர்கள் மீள்வதில்லை
கதறுமேமூவைந்து நாளைக்குள்ளே
கலங்காதமனங்கூடக் கலங்கும்பாரே. 12

இதுவுமது.

127 கலங்குமேஅரசுபகை ஆனால்மக்காள்
கருத்திலேநினைத்தபொருள் கரிஎருவும்ஆகும்
இலங்குமேஊர்வழிதான் போனபேர்கள்
இனிவருவதில்லையென்றே இயம்பலாகும்

மலங்குமேநினைத்தபொருள் கைகூடாது
மனதிலேதுயரம்அல்லால் மகிழ்ச்சியில்லை
துலங்குநாளெட்டில் பலிதம்ஆகும்
துடிஆனஅரசுடகை பொல்லாதென்னே. 13

இதுவுமது.

128 பொல்லாதஊண்அரசு பகையேயானல்
புத்திதனில்நினைத்தபொருள் பொற்கரும்பாம்
நில்லாதுசோபனங்கள் நேர்வதில்லை
நினைத்தொருகாரியமும் வசப்படாது
கொல்லாதுசெல்லும்அடா உயிரைத்தானும்
கூடிவரல்ஒன்றும்இல்லை செலவுமெத்த
எல்லாரும்பகையாவர் நாள்அஞ்சுக்கு
இனிதானசொல்லுமில்லை இவன்பிழைப்பதரிதே. 14

இதுவுமது.

129 அரிதானஊண்அரசு பகையில்லாவிட்டால்
அப்பனேநினைத்ததுதான் விலைவுள்ளகருப்பு
நெரியாகப்போனவர்கள் வருவார்பின்பு
நேசம்இல்லைமனதிற்குத் துயரம்இல்லை
குறிஆனமனம்கூடும்குலைவனவும் ஆகும்
கூடியிருப்பார்பின்பு பிரிந்துபோவார்
சரிதானநாள்ஐந்திற் பலிதம்ஆகும்
தாம்நினைத்தபடியவர்க்கு முடியாதுபாரே. 15

உரோகணியின் பலன்.

130 முடியுமோஉரோகணிதான் உதயம்ஆனல்
முழுமனதாய்நினைத்தபொருள் வெள்ளைப்பூவாம்
கடிஆன்மணம்செய்ய நன்மைஆகும்
கடைத்தேறப்போனவர்கள் வருவார்இப்பேர்
மடிவாகப்போனதுவும் கைவசமேஆகும்
மனத்துயரம்எள்ளளவும் வருவதில்லை
படிவாகநாள்ஏழில் நினைத்ததெல்லாம்
பலன்கூடும்சொல்கேட்க ஓலைவரும்பாரே. 16

இதுவுமது.

131 ஓலைவரும்ஊண்பகையா இருந்தால்ஐயா
கூளம்நினைத்தபொருள் அதுதான்அழுக்குள்வேளை

சாலைவரும்மணம்கூடும் உறவுசேரும்
தனிவழக்குஉண்டாகும் சலனம்இல்லை
காலைவருதிரேகத்திற் பிடையுண்டு
கசிந்தபலன்இல்லையென்று க்ருதலாகும்
மாலைவரும்பெண்பொருவள் பயமும்கொஞ்சம்
மனதிற்குசந்தோஷம் இல்லைதானே. 17

இதுவுமது.

132 இல்லையடா அரசுபகை யிருந்தால்ஐயா
இருதயத்தின்நினைத்தபொருள் கறுத்துவெள்ளை
கொல்லைஅடாகூடிவர்ப்போரதில்லை
துன்பவினைசூழ்ந்துகொண்டு துயரம்செய்யும்
கல்லைஅடாபொருட் தேசம்ஆகும்
கனிவானஉறவில்லை பகைஉண்டாச்சு
சள்ளைஅடா அரசுபகை பொல்லாதப்பா
தனில்லொன்றும்வருவதில்லை சடம்நேர்வாமே. 18

இதுவுமது.

133 நேர்வாகும்ஊண்அரசு பகையேஆனல்
நொய்யமனம்நினைத்தபொருள் சரியேயாகும்
மாவாகும்பலன்லொன்றும் இல்லைஅப்பா
வந்தவினைதீராது பழியேசெய்யும்
தேவகும்மனுஉதவி சற்றும்இல்லை
ஜெடம்அலைந்துபோவதல்லால் பலன்உண்டோ
காவாகும்பகைத்தபேர் வெல்லார்இப்போ
கண்டபடிநான்உரைத்தேன் கருதிக்கேளே. 19

இதுவுமது.

134 கருதிக்கேள்ஊண்அரசு பகையில்லாட்டம்
கனிவாகநினைத்தபொருள் விலைபெற்றவெள்ளை
கருதிக்கேள்மணம்செய்ய நன்மைஆகும்
துலைதூரம்போனவரும் வந்துபோவார்
பருதிக்கேள்போனபொருள் வந்துசேரும்
பகையில்லைஉறவாகும் உட்பகையும்போச்சு
சருவிக்கேள்நாள்யேழிற் பலிதம்ஆகும்
தான்நினைத்தபடிமுடியும் தப்பாதென்னே. 20

மிருகசீரிடத்தின் பலாபலன்.

135 தப்பாதமிருகசிரம் உதித்ததானால்
தான்நினைத்தபொருள் இலையின் பச்சைஆகும்
ஒப்பாதுநினைத்தபடி முடியாதப்பா
ஊர்வழிப்போனவர்கள் சஞ்சலத்தால்மாய்வர்
அப்பாலும்மணம்இல்லை ஊண்பகையேஆனால்
அதனாலும்வரும்என்ற பயன்ஒன்றில்லை
செப்பாதநாள்பத்தில் தீமைவருந்திண்ணம்
ஜெயமாகமாட்டாது எல்லாம்தீதே. 21

இதுவுமது.

136 தீதென்றஅரசுபகை இருந்ததானால்
செயமாகப்போரதில்லை வரத்துஇல்லை
தூதென்றஓலைவரும் பொருட்சேதமாகும்
துயரமுமேகூடி விளையாடும்பாரு
வாவென்றஇருவர்பகை இல்லாவிட்டால்
மனத்துயரம்வெகுகொடுமை இல்லைஇல்லை
தானென்றநாள்பத்தில் பலனைக்காட்டும்
தப்பாதுநன்மைஇல்லை தின்மைஆமே. 22

திருவாதிரையின்பலாபலன்.

137 தின்மையென்றசொல்இல்லை ஆதிரைக்கு
சிந்தைதனில்நினைத்தபொருள் நீலவர்னம்
வண்மையென்றபொருள்துகை வசமேஆகும்
மக்களேஊண்பகைதான் இருக்கொண்ணாது
தன்மையென்றஊர்பயணம் போனபேர்கள்
சடுதியிலேவருவதில்லை அரசுபகையானால்
உண்மையென்றபொருட்சேதம் உறவுபகையாகும்
உத்தமனேஇருவர்பகை இருக்கொண்ணாதே. 23

இதுவுமது.

138 ஒண்ணாதஊண்அரசு மித்துருவாய்நின்றால்
உத்தமனேவருமரணம் என்னசொல்வேன்
தன்னாலேகூடிவரும் உறவுசேரும்
தண்மைஉடன்பிரபு வுபகாரமாகும்
சொன்னாரேபிரதேசம் போகநன்று
தொடுத்துமணம்செய்யநன்று சோபனங்கள்கூடும்

எண்ணுதேயிளையில்லை நன்மைஉண்டு
எடுத்ததொருகாரியங்கள் பலிதம்ஆமே. 24

புனர்பூசத்தின்பலாபலன்.

139 பலிதமடாபுனர்பூசம் சேர்க்கஉண்டு
பண்புடனேநினைத்தபொருள் சிவப்பதாகும்
வலிதமடாஊர்வழிதான் போனபேர்கள்
வருவார்கள்பொருள்உடனே பணமுங்கூடி
கலிதமடாஊன்பகையால் இருக்கொண்ணுது
கனிவானவருமானம் கால்வரிசைகுறையும்
வலிதமடாஅரசுபகை ஆகும்போது
நாடிவரும்பொருள்உடமை கஷ்டம்ஆமே. 25

இதுவுமது

140 கஷ்டம்இல்லைஆண்அரசு பகையில்லாவிட்டால்
நலமானகாரியங்கள் முடியும்பாரு
தொட்டதெல்லாம்கூடிவரும் மங்களங்கள்கூடும்
தூரத்தின்ஓலைவருஞ் சுகமதாக
வட்டமுலைமாதுகணை உண்டுபாரு
மக்களேசிவகலையால் வந்துகூடும்
இட்டமுடன்நாள்அதுதான் இருபதுக்குள்
இசைந்துவரும்நிலங்கொள்க இனிதாம்பாரே. 26

பூசத்தின் பலாபலன்.

141 இனிதானபூசம்அது உதயம்ஆனல்
இருதயத்தில்நினைத்தபொருள் கறுத்தவெள்ளை
கனிவானசல்லியமுஞ் சிறுகும்உண்டு
களவாகப்போனபொருள் கைவசப்படாது
தனியானஊண்பகைதான் மிகுந்தசல்லியந்
தன்மையுள்ளஅரசுபகை ஆகாதையா
துணிவானஇருவர்பகை மோசம்மோசம்
தொட்டதொன்றும்வாழ்வதில்லை துயரம்தானே. 27

இதுவுமது.

142 துயரமதுஊண்அரசு பகையில்லாவிட்டால்
சோரமாய்பொருள் பாதிகாணும்
பயிரதுவும்மணங்கூடும் அலைச்சல்ஆகும்
புகைஉறவுநெடுநாளா இருக்காதையா

வயிரமுடன்பிறமனுஷர் வருவார்இப்போ
வந்ததினால்பொருட்சேதம் உறவுபகையாகுங்
கயில்அதுதான்நாள்ஐந்திற் பலனைக்காட்டும்
கலங்கும்அடாதுயரத்தால் கலகம்ஆமே. 28

ஆயிலியத்தின் பலாபலன்.

143 கலகமடாஆயிலியங் கண்டபோதே
கருத்திலேநினைத்தபொருள் கரிசல்வெள்ளை
விலகும்அடாபோனஉயிர் திரும்புவதேயில்லை
மேதினியில்நோவுகொண்டார் எழுந்திருப்பதில்லை
இலகும்ஒருசோபனங்கள் கூடுவதுபோல
இருக்கும்அடாஒருபோதும் நடப்பதில்லை
சிலருளதாம்ஊண்பகைதான் இருந்தால்மோசஞ்
சிந்தித்தபடிநடப்ப தில்லைதானே. 29

இதுவுமது.

144 இல்லையென்றும்ஊண்அரசு பகையில்லாவிட்டால்
இருதயத்தில்நினைத்தபொருள் பலிக்குங்கொஞ்சம்
கொல்லையென்றுபயிர்செய்தால் பலன்உண்டாகுங்
கோதையரைமணஞ்செய்யில் வாழ்வதில்லை
தொல்லையென்றஒருபொழுதுஞ் செயலொண்ணாது
தொட்டதெல்லாங்கூடிவர மாட்டாதையா
எல்லையென்றநாள்யிருபத் தைந்துக்குள்ளே
இப்பலனைக்கண்டவர்தான் ஏங்குவாரே. 30

மகத்தின்பலாபலன்.

145 ஏங்காதேமகமதுதான் உதயம்ஆனால்
என்மகனேநினைத்தபொருள் குங்குமத்தின்வர்ன்னங்
தாங்காதேபோனபொருள் கைவசமேஆகுங்
தப்பாமல்போனபேர் வருவார்இப்போ
பாக்கியைத்தான்கொள்வதற்குப் பலன்உண்டாகும்
பாகமுடன்மணஞ்செய்ய நன்மையாகுங்
தூங்காதேஊண்பகைதான் மாகாதையா
சொல்லொண்ணாதரசுபகை கூடாதுபாரே. 31

இதுவுமது.

146 நாடாதஊண்அரசு பகையில்லாவிட்டால்
கொண்டுசொல்லஉறவுபகை யாவதில்லை

தடாதுநினைத்தபொருள் கைவசமேஆகும்
தேசத்திற்போனவர்கள் ஜெயமாகவாழ்வார்
நாடாதுமணம்செய்ய நன்மையாகும்
நடந்துமொருபிறர்உதவி அதிகமாகும்
வாடாதுநாள்பத்தில்பலன் கைக்கூடும்
வலிமையுள்ளமாதர் உறவாகும்பாரே. 32

### பூரத்தின்பலாபலன்.

147 பாரடாபூரமதுஉதயம் ஆனால்
பண்புடனேநினைத்தபொருள் பசியபச்சை
நேராடஊர்ப்பயணம் போனபேர்கள்
நேசமாய்வருவதில்லை மணமும்இல்லை
தேரடாபொருள்உடமை சேர்வதில்லை
திடமானசொல்இல்லை உறவும்இல்லை
ஆரடாஊண்பகையே ஆகும்காலம்
அப்பனேகூடுவது அறிதுதானே. 33

### இதுவுமது.

148 அரியாதஅரசுபகை ஆகும்காலம்
அன்புடனேநினைத்தபொருள் கைகூடாது
தெரியானஊண்அரசு பகையில்லாவிட்டால்
நினைவிலேநினைத்தபொருள் சிறிதுகூடும்
வரிதானஉயிர்சேதம்வருமே அப்பா
மணம்இல்லைவுறவில்லை மகிழ்ச்சியில்லை
எரியானநாள்யிதற்கு முப்பதுக்குள்
எண்ணியதோர்பீடையது விலங்கும்பாரே. 34

### உத்திரத்தின்பலாபலன்.

149 விலகுமேவுத்திரந்தான் உதயம்ஆனால்
வினவுபொருள்கருஞ்சிவப்பு விரைவித்தாகும்
பலருமேபோனபொருள் அசதியிற்காணும்
பழகினபேர்வருவார்கள் பகைவுரவாகும்
இலகுமேசம்மந்தம் கூடும்பாரு
என்னசொல்வேன்ஊண்பகைதான் இருக்கொண்ணாது
அலகில்லாஅரசுபகை இருந்தால்ஐயா
அப்பனேசஞ்சலத்தில் அழுந்துவானே. 35

இதுவுமது.

150 அழுந்துவானேஊண் அரசு பகையில்லாவிட்டால்
அசதியான்போனபொருள் அடுத்தவரால்வருகும்
எழுந்துதான்ஊர்ப்பயணம் போனபேர்கள்
எண்ணியதோர்கருமமுடன் பொருட்சேதம்ஆகும்
கொழுந்தாநீநினைத்தபடி முடியாதையா
கோதையாற்சல்லியமாய்க் கோபமுடன்வருவார்
நுழைந்தாகும்மூவைந்து நாளையிலேபலிதம்
நொந்துமனம்புண்ணாகி இடைஞ்சல்வரும்பாரே. 36

அஸ்வத்தின் பலாபலன்

151 வருமானகாயங்கள் அஸ்தமாகில்
மனதிலேநினைத்தபொருள் பலநிறமும்ஆகும்
உருவானபிறதேசம் போனபேர்கள்
உண்மையுடன்மணம்கூடி வருவார்பாரு
தருவானபொருட்சேதம் களவுபோகுந்
தப்பாமல்ஊண்பகைய தாகும்ஆகில்
கருவானபோனபொருள் வருவதில்லை
சண்டாளர்அரசுபகை ஆகாதுபாரே. 37

இதுவுமது.

152 ஆகாதுஊண்அரசுபகை இல்லாவிட்டால்
அப்பனேபொருள்கூடுந் திண்ணம்ஆக
ஏகாதமனம் வாழ்வதில்லையப்பா
எடுத்ததொருகாரியமும் நேர்வருவதில்லை
போகாதேசஞ்சலமாம் இருந்தபேர்கள்
புனிதமுடன்எழுந்திருந்து வாழ்வதில்லை
நோகாதேஏழஞ்சி நாளைக்குள்ளே
நுவலும்இந்தபலன்கள்எல்லாம் நேரும்பாரே. 38

சித்திரையின் பலர்பலன்.

153 நேர்ந்துபார்சித்திரைதான் உதயமானல்
நினைத்தபொருள் சிவப்புவெள்ளைமஞ்சளாகும்
கூர்ந்துபார்நினைத்தபொருள் வருவதில்லை
கெலுத்திடுமேசிலுக்கு சண்டைமனம்கூடாது
சாந்துபார்ஊண்அரசு பகையேயானல்
தப்பாதுபொருட்சேதம் உயிரும்சேதம்

கூர்ந்துபார் இவருடப்பகை இல்லாவிட்டால்
கூடிவருங் குறைவதுவும் இல்லைத்தானே. ௩௯

இதுவுமது.

௧௫௪-இல்லையேபொருளுடைமை வருவதில்லை
எதிர்க்கதனால்ஜெயமாகப் போறதில்லை
தொல்லையேஅனுசரித்து சஞ்சலங்களாகி
தொல்புவியிற்சொற்குறைச்சல் பேருண்டாகி
சள்ளையேமனுஷனுதவி இல்லாமல்தான்
சஞ்சலத்தால்வெகுதூரம் வந்துசேரும்
கொள்ளையேநாளுபத்து நாளைக்குள்ளே
கூடிவரப்போறதில்லை குணத்தைப்பாரே. ௪௰

சுவாதியின்பலாபலன்.

௧௫௫-குணத்தைப்பார்க்கவாதித்தன் உதயமானால்
கூடுதன்னில்நினைத்தபொருள் தங்கம்தங்கம்
மணத்தைப்பார்ஊர்வழியிற் போனபேர்கள்
மனமகிழ்ச்சியெத்தவுண்டு மங்களம்கூடும்
இனத்தைப்பார்ஆண்குழந்தை பிறக்குமென்று
எண்ணியதோர்மருமமெல்லாம் கைவசமேயாகும்
சனத்தைப்பார்ஊண்அரசு பகைஆகாது
தான்நினைத்தபடிஅங்கே முடியாதுபாரே. ௪௧

௧௫௬-முடியாதோஊண்அரசு பகையில்லாவிட்டால்
மொய்குழலாள்பூமடந்தை கிருபையாலே
படியாதேநினைத்ததெல்லாம் கைவசமேயாகும்
பசுமையுள்ளபொருள்கூடும் உறவுமாகும்
கடியானசோபனங்கள் கூடும்பாரு
கடல்கவிழ்ந்தபொருள்கூடும் கவலைஇல்லை
வடிவானஈரைந்து நாளைக்குள்ளே
மக்களேகூடிவரும் மகிழ்ந்துபாரே. ௪௨

விசாகத்தின் பலாபலன்.

௧௫௭-மகிழ்ந்துபார்விசாகமங்கே உதயமானால்
மனதிலேநினைத்தபொருள் கசப்புள்ளவர்க்கும்
நிமிழ்ந்துபார்போனபொருள் வசமேயாகும்
நேரானசோபனங்கள் கூடுவதும்இல்லை
நகர்ந்துபார்ஊண்பகையாய் இல்லாவிட்டால்
நன்மையின்மை இரண்டுண்டு நயந்துபாரு

தகர்ந்துபார் அரசுபகை யாகநின்றால்
தப்பாது தீமையென்று தானசொல்வாயே. ௪௩

இதுவுமது.

௧௦௮-சொல்லாதவன் அரசு பகை இல்லாவிட்டால்
சொன்னபடி தப்பாது நோயில்மாய்வன்
இல்லாமல் வெகுதுயரம் பட்டுதேறி
நேர்மையுள்ள காலன்வரும் என்றுசொல்லி
பொல்லாதநேரம்யென்று சொல்லுவார்கள்
புதுமையுள்ள கருத்தறிந்த காலம்பாரார்
எல்லாரும்பகையாகும் நாலைந்துக்குள்
இதுபலனைக்கண்டறிந்து இயம்புவாயே. ௪௪

அநுடத்தின் பலாபலன்.

௧௦௯-இயம்புவாய் அநுடமங்கே உதயமானால்
யெண்ணியதோர்பொருள் வெள்ளி யென்றுசொல்லு
நயம்பிவேறனதுவும் பகையேயானால்
நலமில்லை நக்கனை வெள்ளி என்றுசொல்லு
பயம்பிவேறன் அரசு பகையேயானால்
படிகமென்றபின்காணும் பதிவாய்ச்சொல்லு
தயம்பிவேறன் அரசு பகையேயானால்
தய்யவெள்ளியென்றுசொல்லி துணிந்துபாரே. ௪௫

இதுவுமது.

௧௧௰-துணிந்துபார்பொருளுடைமை கூடிவரும்போது
துணையானபோசனங்கள் நடக்கும்பாரு
அணிந்துபார்பிரதேசம் போலபேர்கள்
ஆள்மோசம்வாராமல் வருவார்கிபபோ
தணிந்துபார்சடலத்தில் நோயோ இல்லை
தான்நினைந்தபடி முடியும் தப்பாதப்பா
மணிம்பிவேமூனுடைத்து நாளுக்குள்ளே
நலமாகக்கூடிவரும் நயந்துபாரே. ௪௬

கேட்டையின்பலாபலன்.

௧௧௧-அறிவதுதான்கேட்டையங்கே உதயமானால்
அப்பனைநினைத்து பித்தளையும் () காறல்
எறிவதுதான்வன்பகையே ஆகும்ஆதல்
என்சொல்வேன் அப்பிரகாரம் என்றுசொல்லு
சரியதுதான் அரசுபகை யாகநின்றால்
தப்பாதுமஞ்சள்நிற மானவோடு
() காறல் தானகமாம் கெந்தினனிலும் ஒக்கும்.

முறிவது தான் ஊண் அரசு பகை இல்லாவிட்டால்
மொழிந்த பொருள் சொன்னதுபோற் சொல்லுவாயே. சஎ

## இதுவுமது.

கசுஉ-சொல்லுவாய் நினைத்த பொருள் கூடுவதும் இல்லை
சுகமான மணம் இல்லை உறவும் இல்லை
மல்லதுவாய்ப் போன பொருள் வாராதப்பா
மறுதேசம் போனவர்கள் வந்துறவும் இல்லை
கொல்கிறது திண்ணம் என்று நின்ற நிலை பார்த்து
குறிகுணங்கள் ஆராய்ந்து செல்வாய் மைந்தா
அல்லது கேள் நாலெட்டு நாளைக்குள்ளே
அப்பனே இதுகளினால் அறிந்திடப்பாரே. சஅ

## மூலத்தின் பலாபலன்.

கசுஉ-அறிந்துபார் மூலம் அங்கே உதயம் ஆனால்
அப்பனே நினைத்த பொருள் நிலம் கறைகள் ஆகும்
நெறிந்துபார் ஊண் பகையே ஆகுமாகில்
நேரான மாடுமாடென்று சொல்லி
தெறிந்துபார் அரசுபகை யாகநின்றால்
திடமாகச் சொல்லுவது சொற்பலாபம்
எறிந்துபார் ஊண் அரசு பகையில்லாவிட்டால்
என்ன சொல்வேன் பொருளுடமை என்று சொல்லே சகூ

## இதுவுமது.

கசுச-என்று சொல்லு நினைத்த பொருள் கைவசமே சேரும்
இனிதான மணம் கூடும் பிறபு உறவாகும்
அன்று சொல்லு ஆள் வரத்தால் பொருள் கைசிக்கும்
அன்பனே சொல் கேட்டு சந்தோஷம் ஆகும்
நன்று சொல்லு தன் கிளையின் ஆண் குழந்தை ஆகும்
நலம் பெறலாம் அதனாலே மகிழ்ச்சியுண்டு
கண்டு சொல்லு ஐயைந்து நாளைக்குள்ளே
கனிவான சொல் கேட்கக் கருதலாமே. ருய

## பூராடத்தின் பலாபலன்.

கசுரு-கருதலாம் பூராடம் உதயம் ஆனால்
கருத்திலே நினைத்த பொருள் கல் மண் ஆகும்
நிருகமாய் ஊண் பகையே ஆகும் ஆகில்
நேரான எருவாகும் சாம்பல் ஆகும்
இருநிலமாம் அரசுபகை யாகநின்றால்
எழும்பியதோர் பறவையுட இறகதாகும்

அருமையாய்வன் அரசுபகை யில்லாவிட்டால்
அப்பமிலைகல்இல்லையும் அறியச்சொல்லே. ௫௧

## இதுவுமது.

௧௧௬-சொன்னுவதுநினைத்தபொருள் கூடுவதொன்றில்லை
சோபனங்கள்செய்தாலும் வாழ்வதில்லை
மன்னுவதபோனவர்கள் வருவதில்லை
மனதிலேநினைத்தபடி நடப்பதில்லை
சொல்லுவதுவிஷதிஷ்டி யாலேமக்காள்
கூடிவரப்போறதில்லை நினைத்ததெல்லாம்
அன்னுவதுஆறெட்டு நாளைக்குள்ளே
அப்பனேஇப்பலனை அறிவாய்தானே. ௫௨

## உத்திராடத்தின் பலாபலன்.

௧௧௭-அறிவாயேஉத்திராடம் உதயமானால்
அன்பாகநெஞ்சில்லொன்றும் நினைத்ததில்லை
சரியானவன்பகைதான் இருந்தாலென்ன
தரணிதனில்அரசுபகை ஆனாலென்ன
கிருதாகனெஞ்சதனைச் சோதிஎண்ணி
கேட்டதல்லாற்கேட்டதிலோர் பொருளுங்காணேன்
இருநிலத்தில்இப்பலனை எண்ணிப்பாரு
எளிதாகத்தோணும்இதை இசைத்திடாயே. ௫௩

## இதுவுமது.

௧௧௮-இசைத்ததொன்று இல்லைஇல்லை
இனிதாகசோதிப்பாய் நாமென்றெண்ணி
விசைத்துதான்வினவிநின்ற தல்லால்மைந்தா
வேறேதும்இல்லைஅடா வெளியிட்டோம்பார்
வசைத்துநான்இப்படி யாகச்சோதித்து
மறுபடியும்கேட்டமன்று வந்தாய்என்றும்
உசந்திரியில்லை அற்கொ கரன் ஆருப்பான்றும்
உரைத்தவினைஒட்டிவிடு உறுதிதானே. ௫௪

## திருவோணத்தின் பலாபலன்.

௧௧௯-உறுதியென்ற திருவோணம் உதயமானால்
உன்பலநில்நினைத்தபொருள் செல்லும்புல்லும்
கருதகின்றவன்பகையே ஆருமாகில்
கலந்துசெல்லுகவ்பெண்மை தெறிதான்
பருதியெ[illegible]ற அரசுபகை [illegible]கின்றால்
[illegible]தருமல் அதிலணிக்க [illegible]

சுருதியெனவூண் அரசு பகையில்லாவிட்டால்
சொல்லுவாய்உயர்ந்ததனைச் சொல்லுவாயே. ௫௫

இதுவுமது.

௱௭௰-சொல்லுவாய்நினைத்தபொருள் மங்களங்கள்கூடும்
சோரனால்பயம்உண்டு பொருள்உடைமைபோகும்
அல்லுவாய்போனபொருள் கைவசமேயாகும்
அப்பனேதொலைதூரம் போனால்மீள்வார்
வெல்லுவாய்பகைஉறவாய் வந்துகூடும்
மேலானஜாதியிலே உறவுசேரும்
நல்லுவாய்எழுமூன்று நாளைக்குள்ளே
நடந்துவரும்இப்பலனை நாடிப்பாரே. ௫௬

அவிட்டத்தின்பலாபலன்.

௧௭௧-நாடிப்பார்அங்கே உதயமானால்
நலமாகநினைத்ததெல்லாம் விளக்குஞ்சோதி
தேடிப்பார்ஊண்பகையே ஆகுமாகில்
சென்றதொருநாணயத்தில் தணிவுசொல்லு
ஓடிப்பார்அரசுபகை யாகநின்றால்
உத்தமனேஅதில்தணிந்த நாணயமேயாகும்
தாடிப்பார்ஊண்அரசு பகையில்லாவிட்டால்
துகையுயர்ந்தநாணயமாய்ச் சொல்லுசொல்லே. ௫௭

இதுவுமது.

௧௭௨-சொல்லுவாய்பொருள்உடமை கைவசமேசேரும்
சோபனங்கள்உறன்முறையார் தொந்தமாகும்
வெல்லுவாய்பிரதேசம் போனபேர்கள்
வேணபடிசெல்வர்களாய் வந்துசேர்வார்
மல்லுவாய்பிறமனிதர் உதவியாலே
வந்திடுமேபால்பழ வர்க்கங்கள்மைந்தா
வெல்லுவாய்ஆறைந்து நாளைக்குள்ளே
வேணபடிபொருள்வரத்து விளையும்பாரே. ௫௮

சதயத்தின் பலாபலன்.

௧௭௩-பொருள்வருமேசதயம்அங்கே உதயமானால்
புத்திரனில்நினைக்கபொருள் பயிருபச்சை
இருள்வருமேஊண்பகையே யாகுமாகில்
எண்ணியதோர்வர்க்கத்தில் தணிவுமாகும்
அருளலெனும்அரசுபகை யாகநின்றால்
அதிற்குறைந்தவர்க்கவகை அறிந்துகொள்ளு

சருள்பொருளுண் அரசுபகை இல்லாவிட்டால்
தணிந்தவிலே இல்லையடா சார்ந்துபாரே. ௫௬

இதுவுமது.

௧௭௪-சார்ந்துபார்பொருள்வரத்தே அதிகம்இல்லை
சஞ்சலங்கள்ஒன்றும்இல்லை தணியும்இல்லை
சேர்ந்துபார்போனவர்கள் துயரத்தாலே
திருவசிக்கமாட்டாமற் பிணியால்நொந்து
கூர்ந்துபார்கைப்பொருளும் சேரம்ஆக்க
கூடியஉறவாயிருந்தோர பகையதாக்கி
நேர்ந்துபார்எழுஞ்சி நாளைக்குள்ளே
திரும்பிடுவார்இப்பலனைத்தெளிந்துபாரே. ௬௰

பூரட்டாதியின் பலாபலன்.

௧௭௫-தெளிவானபூரட்டாதி உதயமானால்
சிந்தைதனில்நினைத்தபொருள் ஊர்நம்பூச்சி
வழியானஊண்பகையே ஆகுமாகில்
மன்னவனேசிறுபூச்சி என்றுசொல்லு
கொழுவான அரசுபகை யாகநின்றால்
கொடுமையுள்ளபூச்சென்றே கூறலாகும்
தழுவாதிஊண் அரசு பகையில்லாவிட்டால்
தண்மையுள்ளபூச்சாகச் சொல்லுவாயே. ௬௧

இதுவுமது.

௧௭௬-சொல்லுவாய்செலவதிகம் வரவுகொஞ்சம்
தொடுத்ததொருவியாஜ்ஜியமும் தோல்வியாகும்
வல்லுவாய்ஊர்வழிதான் போனபேர்கள்
வழக்கலேதோல்வியால் இடைஞ்சலுண்டாம்
வெல்லவேபொருளுடமை களவுபோகும்
வேந்தனால்தண்டனைகள் வருமேபாரு
அல்லவேஏழுஞ்பத்து நாளைக்குள்ளே
அப்பனேஇப்பலனும் அறிந்துகொள்ளே. ௬௨

உத்திரட்டாதியின் பலாபலன்.

௧௭௭-கொன்றுவதுஉத்திரட்டாதி உதயமானால்
கூடுதனில்நினைத்தபொருள்குளிர்ந்தபச்சை
என்றுவது அரசுபகையேயாகும் ஊண்ஆகில்
எண்ணியதோர்அழுக்குள்ளே பச்சையாகும்
இன்றுவது அரசுபகை யாகநின்றால்
அடியானகளிப்புள்ள பச்சையாகும்

தள்ளுவதுவூண் அரசுபகை இல்லாவிட்டால்
சாற்றியதோர்குளிர்ந்தபச்சை ஆகுங்காணே. சுங

இதுவுமது.

களஅ-காணுமேசிலுகுசண்டை களவுபோகும்
கள்ளாறால்பயம்வுண்டு கனிந்தஉறவில்லை
வேணுமொருசம்பந்தம் பகைபதாகும்
மேலானபிரபுவினால்சல்லியங்கள்உண்டு
ஆனுமேபோனவுயிர் திரும்பாதையா
அப்பனே அதனாலே பொருளுடைமைதோல்வி
தோணுமேஎண்ணஞ்சு நாளைக்குள்ளே
தொடுத்திடுங்கால் அப்பலனைச் சொல்லுவாயே. சுச

இரேவதியின் பலாபலன்.

களகூ-சொல்லுவாய்இரேவதிதான் உதயம்ஆனால்
தொடுத்தபொருள்மூத்துவகை எனறுசொல்லு
வெல்லுவாய்ஊண்பகையே ஆகும்ஆகில்
விலைதணிந்தரத்நவகை ஆகவேண்டும்
மல்லுவாய் அரசுபகை யாகநின்றால்
வசம்இல்லைசொட்டையென்றுவகுத்துச்சொல்லு
சொல்லுவாய்ஊண் அரசு பகையாகநின்றால்
தொகைஉயர்ந்தவர்க்கம்என்று தொகுத்திட்டாயே. சுரு

இதுவுமது.

கஅ௰-தொகுத்திடுவாய்பொருள்வரத்தோ மெத்தவுண்டு
சோபனங்கள்கூடும்அப்பா சொல்லக்கூடா
வகுத்திடுவாய்போனபேர்கள் மணமாய்வந்து
வாழ்ந்திருப்பார் இனத்துடனே மகிட்சியாக
அகத்திடுவாய்இரண்டுபிள்ளை மிகுந்தசெல்வம்
அவனிலையும்பெருகிவளர்ந் தோங்கும்பாரு
நிகழ்ந்திடுவாய்நினைத்ததெல்லாம் கைவசமேசேரும்
நேரான அறுமூன்று நாள்தான்பாரே. சுசு

சிந்தனைக்கூறுதலின்புத்தி.

கஅக-பாரட்டாநின்றநிலை பரிந்துபாரு
பதிவாகமுகம்நோக்கும் திசையும்பாரு
நேரடாமுன்சொன்ன எழுத்தோடெல்லாம்
நினைவுதடுமாறாமல் நிறுத்திக்கொண்டு
சேரடாநட்சேத்திரஞ் சொல்லக்கொண்டு
திசையாமற்சொன்னபடி தெரிந்துணர்ந்து
மாரடாமௌனமென்கிற எழுத்தைஓது
மகத்தானசோசியத்துட் பிறப்புஞ்சொல்லே. சுஎ

சிந்தனைப்படலம்-முற்றிற்று.

——(*)——



## ஜாதகப்படலம்.



ஊண்முதல்விநாடியின்பலன்.

கஅ௨-சொல்லுகிறேன் ஊணதிலே முதல்விநாடி
துலங்குகின்றகுழந்தையது பிறந்ததானால்
அல்லலென்றதொன்றுமில்லை சுகமாய்வாழும்
அப்பனேவயதிவனுக் கறுபத்தஞ்சாம்
கல்லல்லனுந்தபிணியில்லை துன்பமில்லை
கவடில்லைவஞ்சகம் எக்காலும்இல்லை
நல்லபுகழ்உடையவனாய் ஆயுள்மட்டும்
நானிலத்தில்வாழ்ந்திருப்பான் நன்மையாமே. க

ஊண்-௨-ம்-விநாடியின்பலன்.

கஅ௩-நன்மையென்றஇரண்டாம் விநாடிதன்னில்
நன்றுமெத்தஉற்பனத்தில் நலமேயாகும்
வன்மையென்றபூமியும் கைவசமாய்ச்சேரும்
வாழ்ந்திருப்பார்அறுபதுவாம் வயதுமட்டும்
சென்மையென்றவசிகரமும் திரமும்மெத்த
தேகம்உள்ளமட்டும் ஒருபிணியேஇல்லை
தன்மையென்றதாய்தந்தை பிறப்புச்சேதம்
சற்றும்இல்லைசுகமாக வாழ்வார்பாரே. ௨

ஊண்-௩-ம்-விநாடியின் பலன்.

கஅ௪-வாழுமேமூன்றும் விநாடிதன்னில்
மக்களேமதலையது உதித்ததானால்
கேளுமேவயதுதான் அன்பதானால்
கெர்ப்பமுதல்வயதுபதி னைந்துமட்டும்
கோளுமேபிணிகள் உண்டாம் சுகமோகொஞ்ச
குவலயத்தில்அதிகசுகம் இல்லைபாரு
தாளுமேகூடிவரமாட்டாதப்பா
சஞ்சலமும்சுகமதுவும் சரிதான்பாரே. ௩

ஊண்-௪-ம்-விநாடியின் பலன்.

கஅ௫-சரியானவிநாடி அங்கே நாலதாகித்
தான்பிறந்தால்வயதது தானாற்பத்தொன்று
குறியானஜடலமது உள்ளமட்டும்
கொண்டிடும் ஓர்மணம்இல்லை வாழ்வுகொஞ்சம்
விரிவானபொருள் இல்லைபோகம்இல்லை
வேந்தன்உறவொருநாளும்விபுருதமேவரா

நடையானவிலவேளைப் பொசிப்போ இல்லை
நன்மை இல்லை தீமை இல்லை நாடிப்பாரே. ௪

ஊ௲-ரு-ஆம் விநாடியின் பலன்.

௧௮௬-நாடிப்பார் ஐந்தாம் விநாடி தன்னில்
நலமாகப் பிள்ளையது பிறக்கும் ஆகில்
தேடிப்பார் வயசதற்கு முப்பத்தேழு
செம்மையுடன் சிரமாம் இருக்கும் பாரு
கூடிப்பார் வினைகிதமோ உயிரொன்றாகும்
குணமதுதான் சற்குணமாய் இருக்கும் பாரு
வாடிப்போம் பொருளுடைமை இல்லாமல் தான்
மனத்துயரம் விதிவசத்தால் வருத்தம் பாரே. ௫

ஆதானபலன்.

௧௮௭-பாராடா விந்துதான் பாயும்போது
பண்பான சூரிய கலை நடக்கும் ஆகில்
ஆராடா ஆணாகும் சந்திரகலை ஆகில்
அப்பனே பெண்ணாகும் அறிந்து பாரும்
சாரடா கருமுனையில் தரிப்பதில்லை
தரித்தாலும் அது பிழைக்க மாட்டாதப்பா
கூரடா சாஸ்திரங்கள் யாவும் பார்த்து
குணங்குறிகள் தவறாமல் குறிசொன்னேனே. ௬

நடைமுதல் விநாடியின் பலன்.

௧௮௮-சொன்னேனே நடையிலே முதல் விநாடி
தொல்புவியில் பிள்ளைகள்தான் தோன்றும் ஆகில்
அன்னதனுக்காயசுதான் அன்பதாகும்
அதுதரித்த நாள் முதலாய் சுகமோ இல்லை
பின்னதுகேள் வயசு முப்பதுக்கு மேலே
பிரபலமும் அதிகமில்லை வாழ்வு கொஞ்சம்
தன்னாலே வருவதல்லால் உதவியில்லை
சடமுள்ளவரையிலும் போய் கேள் சொல்வானே. ௭

நடை-௨-ஆம் விநாடியின் பலன்.

௧௮௯-சொல்லவே நடையிரண்டாம் விநாடி தன்னில்
தோன்றினேன் அவன் வயது ஒன்பதைந்து

சொல்லுவோன் சிவசெந்தை அதிகமாக
  கொடுமையுள்ள பொய்களவு வஞ்சம்மெத்த
தள்ளுவான் இசைசேர்க்கை சற்றுமில்லை
  சண்டாளன் என்கிறபேர் படைக்குமையா
துள்ளுவான் எனக்கெதிர்தான் இல்லையென்று
  சொல்லுவான் பிராவன் சொல் தள்ளுவாரே. அ

நடை-ந-ஆம் விநாடியின் பலன்.

கக௰-தள்ளவே நடைதனிலே மூன்றும் விநாடி
  தான் பிறந்தால் வயசதுதான் முப்பத்தேழு
கொள்ளவே வயசதுதான் உள்ளமட்டும்
  கோலைகளவு பொய்சூது கொடுமை மெத்த
மல்லவே பிரமஹத்தி உள்ளமட்டும்
  வருத்தும் வெகுநோயாலே வருந்துவான் பார்
பல்லவே நல்லருசி யுள்ளதெல்லாம்
  பண்புடனே யவன் வாயில் படாதுபாரே. சு

நடை-ச-ஆம் விநாடியின் பலன்.

ககக-படராதுநடை நான்காம் விநாடி தன்னில்
  பதிவாக யுற்பத்தி ஆகும் ஆகில்
கடவாது வயசதுதான் இருபத்தொன்று
  கல்வியுமோ மெத்தவுண்டு களவும் உண்டு
சடியாது பெரியோரைத் தூஷணிப்பான்
  சண்டாளப் பிறவியிவன் ஒருவர்க்கஞ்சான்
தொடர்வான அன்னவஸ்திரம் அதுவும் இல்லை
  தூர்ச்சனன் காண் இவன் நல்ல அறிவில்லானே. ம

நடை-ரு-ஆம் விநாடியின் பலாபலன்.

ககஉ-வழியதனில் ஐந்தாம் விநாடி தன்னில்
  மைந்தனுமுற்பவித்து வந்தானாகில்
நெளிவுள்ளி வயசதுதான் பதினெட்டாகும்
  நினைவுதப்பிப் பித்தவெறி கொண்டுபேசும்
பழியுடையன் பிறர்க்குதவி சற்றும் இல்லை
  பண்பில்லா ள்சனத்துடனே வாசம் செய்யான்
கனியுள்ள இனந்தனிலே இருந்துவாழான்
  கசடனப்பா நற்குணங்கள் இல்லைதானே. கக

அரசுமுதல் விநாடியின் பலன்.

௧௬௩-தானென்ற அரசிலே முதல்விநாடி
தான்பிறந்தான் தன்வயது நூற்றுஏழு
பானென்றபவுஷ்உண்டு பாக்கியம்உண்டு
பால்உண்டுகொளஉண்டு பணியும்உண்டு
தேனென்றசொல்வுண்டு ஜெகர்எல்லாம்தான்
சென்றுவரநடையில்லை ஜெகத்தில்உள்ள
மானென்றவிழிமடவார் மயங்குவார்பார்
மக்களே அவன்வாழ்வை மதிக்கொண்ணாதே. ௰௨

அரசு-௨-ஆம்-விநாடியின் பலன்.

௧௬௪-ஒண்ணாக அரசிரண்டாம் விநாடிதன்னி
லுற்பவித்தால்வயதுதான்தொண்ணூற்றைந்து
எண்ணாதசுகபோகம் சொல்லொண்ணாது
இன்பம்உள்ளவாழ்க்கையென்றால் மதிக்கொண்ணாது
தன்னாலேஞானநிலை நிலைக்கும்அப்பா
தன்மைஉள்ள புருஷர்என்பர் தாணியோர்கள்
சொன்னதொரு அவனுடைய கீர்த்தியென்றால்
சொல்லுதற்குநாவில்லை சொன்னேம்பாரே. ௰௩

அரசு-௩-ஆம்-விநாடியின் பலன்.

௧௬௫-சொல்லுமொடு அரசமூன்றும் விநாடிதன்னில்
தோன்றுவனேலவன்வயது எண்பத்தாறு
வெல்லும் அவன்வாழ்வைஎன்றால் மதிக்கொண்ணாது
வெகுபோகம்வெகுசுகங்கள் உண்டுபாரு
அல்லவேசரீரத்தில் பிணியில்லை
அவன்பவுஷோஅளவிடக் கூடாதுமைந்தா
சொல்லவேஅஷ்டசித்தி அவர்க்கேசித்தி
சொல்லவேகூடாது சுகத்தைத்தானே. ௰௪

அரசு-௪-ஆம் விநாடியின்பலன்.

௧௬௬-தானென்ற அரசுநான்காம் விநாடிதன்னில்
தான்உதித்தால்வயசதுதான் எழுபத்தெட்டு
தேனென்றமொழியுடையோன் சேகரங்கள்உள்ளோன்
தீமைஎன்னசொல்லொருக் காலும்சொல்லான்
தானென்றகுணம்உள்ளான் அல்லதுள்ளான்
சுகமானபெரியோரை வணக்கிநிற்பான்

கோனென்றசிவகளையும் உள்ளோன் ஐயா
கொலையுள்ளவஞ்சகரைச் சேர்வானன்றே. ௰௫

ஆயசு-௫-ஆம் விநாடியின்பலன்.

௧௬௭-ஒன்றாத அரசைந்தாம் விநாடிதனில்
உதித்தவனுக்கேபிரமன் விதித்ததங்கேள்
எண்ணாக அறுபதத்தேழ் ஆகும்மைந்தா
எனவேசொல்லேனிவன்பெருமை இயம்பொண்ணாது
தன்றாதஅன்னைசுற்றம் கிளைஉண்டாகும்
தொலைந்திடுமேபூமிதனிற் செல்வம்உண்டாம்
வண்மையுடன்வாழும்இவன் குடித்தான்அப்பா
மனமகிழ்ச்சிமெத்தவுண்டு மதிக்கொண்ணாதே. ௰௬

சித்திரை முதல்விநாடியின்பலன்.

௧௬௮-ஒன்றாஉறக்கமதில் முதல்விநாடி
உத்தமனேஉதித்தனெனில் வயதேழஞ்சாம்
விண்ணானபாக்கியமோ இல்லை இல்லை
வீணானதுயரமது மெத்தஉண்டு
கண்ணானநோயதுவும் உண்டுபாரு
கலங்குமடா அவனமனது சுகமோகொஞ்சம்
தணலேவித் அமைப்பு உள்ளமட்டும்
தலைமீதுசுமைசுமப்பன திண்ணந்தானே. ௰௭

சித்திரை-௨-ஆம் விநாடியின்பலன்.

௧௬௯-திண்ணமாமதுயில இரண்டாம்விநாடிதனில்
தெரிந்திட்டோமதனைவயது இருபத்தேழு
கன்னம்இடும்களவுகளும் கொலையும்செய்வான்
கண்டவரால்துஷ்டனெனத் திரிவனகண்டாய்
வண்ணமுறும்மனைவியுமே சேரவதில்லை
மகத்தானபாவியென்று உலகம்அஞ்சும்
எண்ணமுறும்துயரமுயிர் உள்ளமட்டும்
இருக்குமதுசிவன்செயலாம் என்றுபாரே. ௰௮

சித்திரை-௩-ஆம் விநாடியின்பலன்.

௨௭-பாரேநீஉறக்கம் மூன்றும்விநாடி
பாரில்உதித்தான்வயதுஎழுமூன்றாகும்
தேரேதேரைடைப்போல் திரைச்சுபோகும்
செடம்அதுதான்உள்ளமட்டும் இனயம்நீங்க

காரேநீதாய்தந்தை வுரவும்இல்லை
கண்டவர்கள் இவனுடனே கலந்துபேசார்
வாரேநீதேசம்விட்டு தேசம்போக
மனம்துணிந்துஅவிடம்போய் மாளுவானே. ௰௯

நித்திரை-௪-ஆம் விநாடியின்பலன்.

௨௱௧-மாளுவான் உறக்கம் நான்காம்விநாடி
வந்துதித்தோன் தன்வயது பதிமூன்றுக்கும்
வாளுவான் அக்குடியிற் பிறந்தாவதென்ன
வருந்துவார் இவன்உயிர்தான் மாளுமட்டும்
தோளானபிணியாளன் துயரம்மெத்த
தெளிமையுள்ளவாங்குரிசி கொள்ளொட்டாது
நாளானநாளுக்கு நாள்தானப்பா
நலங்குவன்சுகப்னென்ப தில்லையாமே. ௨௰

நித்திரை-௫-ஆம் விநாடியின்பலன்.

௨௱௨-இல்லையென்றஇதற்கிளப்பம் உறக்கம்தன்னில்
இயம்புஐந்தாமவிநாடிதனில் வந்துதித்தோன்
தொல்லையென்றவயதுகொஞ்சம் ஒன்பதேதான்
சுகமதுதான் ஒன்றும்இல்லை யினியோமிச்சம்
கல்லல்என்றசடலமது பறகரும்பாரு
கண்டவர்கள் விதிப்பயனே என்றுசொல்வார்
சுள்ளியிலைசுழல்விட்ட பாண்டம்போல
சுழலுவான் மாளுமட்டும் சுகம்இல்லானே. ௨௧

இதுவுமது.

௨௱௩-சுகம்என்பதொருபோதும் இல்லைஇல்லை
சுழித்ததொருகாற்றினிலே துரும்புபோலே
அகமதிலேஒருபோதும் வாழ்வதில்லை
அவன்வாழ்வுநம்மையால் இருப்பதில்லை
செகமதிலேபிணியாளன் போலேமக்காள்
செடம்அழியதல்லாமல் திடமேஇல்லை
பங்கைவருவதலலாது உறவுஇல்லை
பாழானஉரக்கம்ஐந்தின் பலந்தான்பாரே. ௨௨

மரணம் முதல்விநாடியின்பலன்.

௨௱௪-பாரப்பாமரணத்தில் பகல்விநாடி
பண்பானநேரத்திற்பிறந்தான் ஆகில்

வாரப்பா வயதுகொஞ்சம் பனிரண்டாகும்
மக்களே தாய்தந்தை சேசமாகும்
காரப்பா அவன் உடல்தான் நோவுகொள்ளும்
கடைத்தேறலறு நாளும் இல்லை இல்லை
சாரப்பா அவன்சடலம் மடியும்போதில்
தனியனாய் இவன் இருந்து இறப்பான்தானே. உங

மரணம்-உ-ஆம் விநாடியின்பலன்.

உாஅ-இறந்துபோம் மரணமெண்டாம் விநாடிதன்னில்
இனிதான உற்பத்தி ஆகும் ஆகில்
மறந்துபோம் அவன் வயது ஒன்பதுக்கும்
மரணமதுபோல் துடித்து மாய்வான்கோயில்
குறைந்திடநாளுக்கு நாள்தானப்பா
குணம் ஆகமாட்டாது கொடுமைமெத்த
நிறைந்துபோம் செடலமது செத்தால்நன்று
செகந்தனிலே ஒன்றுலகம் சொல்லும்பாரே. உச

மரணம்-ங-ஆம் விநாடியின்பலன்.

உாக-சொல்லுவது மரணம் மூன்றாம் விநாடி
தோன்றிட்டால் அவன் வயது ஏழதாகும்
மல்லுவது நோயதுதான் மெத்தவுண்டு
மரணம்போல் வந்துபின்பு தெளிவுண்டாகும்
தொல்லுலகில் இன்னொருக்கால் இதுபோல்வந்து
சூழுமடா செப்பும் இந்தத் தத்துவம்தேறி
அல்லுவது மேல்உரைத்த வயதில்மைந்தா
அந்தகனாய் உயிர்ச்சேதம் ஆகும்பாரே. உரு

மரணம்-ச-விநாடியின்பலன்.

உாச-ஆகுமே மரணம் நாலாம் விநாடி
அவனியில் வந்துதித்தவர்க்கு வருஷம் ஒன்றும்
சாரும் அந்நாளளவும் இவன்தானப்பா
தனிலெவயிலிற்புழுவதுதான் தவிப்பதேபோல்
வேகும் வெகுவியாதிகளால் மடிந்துநொந்து
வீணாக அழிவதல்லால் சுகமதுண்டோ
சாகும் மரணத்துதித்த தேகந்தானென்னில்
தான்முப்புரித்ததுதான் சுழினையாமே. உசா

மரணம்-ரு-ஆம் விநாடியின் பலன்.

௨௱௮-ஆமென்ற மரணம் ஜாதாம் விநாடி தன்னில்
அப்பனைகுழந்தை அலை தரிக்கும் ஆகில்
போமென்ற இக்குழந்தை தனக்குவேந்தன்
பொருந்திட்ட விதிகொஞ்சம் புகலக்கேளு
தாமென்ற தாய் அலற தந்தைநோக
சகோதரர்கள் பொருமி அழத் தலையேசாய்த்து
ஏமாற ஆறு திங்கள் தனிலேமாயும்
இவைதரித்த சவ்வியனை சுழினையாமே. ௨௭

மரணப்பேற்றின் சத்துருமித்துரு பலன்.

௨௱௯-சுழினை தனில் மிகவருந்தி தானின்றால்
சொன்னபடி சரியாகும் சத்துருவாகில்
அழிவுள்ள மரம்போலே மாளும்மட்டும்
அலைத்துவிடும் வெகுகொடுமை சலடம்நோகும்
எழில் அற்ற உயிரதுதான் தவிப்பான் ஐயா
என்னசொல்வேன் சத்துருதான் விதியழிப்பேன்
சுழன்றலையும் பாய்மரத்தில் ட்சிபோலே
தொல்பிணிகள் வந்துனடம்செய்யும்பாரே. ௨௮

இதுவுமது.

௨௱௰-செய்யவேபொருள் வந்து இல்லை இல்லை
ஜெயமானமணம் இல்லை சேர்க்கை இல்லை
வையுமே உலகம் எல்லாம் வம்பன் என்று
மனைவிமக்கள் உறன்முறையார் மருவல் இல்லை
நொய்யதொருநோயாலே வருத்தமெத்த
நுவலும் அந்தநோயதினால் மெலியும்சீவன்
கொய்யுமொரு சத்துருவின் படைபோல்லாது
கொடுமையுள்ளமரணத்திற் பிறக்கொண்ணாதே. ௨௯

இதுவுமது.

௨௧௧-பிறக்குமிதிற்சத்துருதானை அரசன் ஆகில்
பிண்டமதில்மாண்டுவிடும் ஊனதாகில்
சிறக்கவே பதினைந்துநாளைக்குள்ளே
செற்றுவிடும் தப்பில்லை ஜெகத்தில்மைந்தா
உறக்கவே மாதமூன்றுக்குள்ளே
ஒழிந்துபோம் ஊனதுதான் மித்துருஆகில்

பறக்கவேமாசம்ஒரு ஐந்துக்குள்ளே
பதிக்கரசனுயிர்ச்சேதம் செய்வான்பாரே. ௩௰

நித்திரைப்பேற்றின் சத்துருமித்துருபலன்.

௨௧௨-செய்திடுவான்உறக்கத்தில் மித்ருஅரசாகில்
செனனத்தில்பிர்ம்மலபி உரைத்தமூலசரியே
எய்திடுவான்சத்துரு அரசாகினின்றால்
என்னசொல்வேன்வெகுநோயால் துன்பம்ஆவும்
வைதிடுவான்வருமானம் ஒன்றும்இல்லை
மனம்இல்லைபிரபுதயையும் மகிழ்ச்சியில்லை
செய்திடுவான்பிறந்தாறு திங்களுக்குள்
சூவலயத்தில்வாழ்வதில்லை திண்ணம்ஆமே. ௩௧

அரசட்டேற்றின் சத்துருபலன்.

௨௧௩-திண்ணம்என்ற அரசனுக்கு சத்துருஇல்லை
செயலரும்ஜெயந்தனிலே தொடுத்ததெல்லாம்
வண்ணம்என்றமகிழ்ச்சி வரத்துமெத்த
மனைவிமக்கள்வுறன்முறையார்உதவிமெத்த
எண்ணம்என்றதுயரம் எள்ளளவேனுமில்லை
ஏழைஎன்றசொல்இல்லை ஈசுசிவன்தொழிலாம்
அன்னம்என்றகளஞ்சியம் என்றியாவரும்பூசிப்பார்
அப்பனே இவற்கிணைதான் சொலக்கூடாதே. ௩௨

நடைப்பேற்றின்சத்துரு மித்துருபலன்.

௨௧௪-கூடாதேநடையினில்மித்துருஊண் ஆகில்
கூறியதோர்லிபிதனக்குக் காலதிகம்ஆகும்
நாடாதுமித்துருவே அரசன் ஆகில்
நாட்டியதோர்பிர்ம்மலிபிக்களை அதிகம்ஆகும்
தேடாதசத்துருஊண் ஆகினின்றால்
செப்பும்அதில்கால்வரிசொல்லாய்ப்போகும்
வாடாதசத்துருதான் அரசன் ஆகில்
வழுத்தியதோர்லிபிபிலரை குறையும்பாரே. ௩௩

இதுவுமது.

௨௧௫-குறையானவயதேழுக் குள்ளேமைந்தா
குறைத்திடுவான்கைகாலிற் குற்றம்வரும்படியாய்
திறையாவ இவன்பிறந்து பதினோர்துநாள்
சிரசுமுதல்கண்காது மூக்குநுதட்டில்

குறையாகும் மூன்றுபத்து வயதுக்குள்ளே
கூர்மையுள்ளவேகத்தில் குறைவுசெய்வான்
கரையாகும் பிரமஹத்தி உள்ளமட்டும்
கணக்கில்லாநோயில் அழுந்துவன் கண்டாயே ௩௪

இதுவுமது.

௨௧௬-அழுந்துவது சத்துருவின் பகையுமாகும்
அப்பனே விந்து அது தரித்தநேரம்
கொழுந்துவிட்டெழுந்த அனல் போலேமக்காள்
குடிகெடுத்த சத்துருவும் நிறைந்தாலே
தழைத்ததொரு குருபுதனும் இருந்தாலே
சண்டாளசத்துருபகை ஆனதாலே
செயிக்குவிடுமிரன் சூரியனைவிட்டு
நேராமற்போனதினால் பகையாம்பாரே. ௩௫

ஊன்பேற்றின் சத்துருமித்துருபலன்.

௨௧௭-பகையான ஊன்அதிலே மித்துருவிதாகில்
பாடினதுபொய்யாது பலிக்கும்பாரு
தொகையான சத்துருஅங்கே அரசாய்நின்றால்
துலக்கவுமே மிஞ்சஒட்டான் குறையஒட்டான்
தகையாகவருங்காரியம் தவிர்த்துவைப்பான்
சண்டாளசத்துருவான் தாழ்ந்துபோகான்
வகையானதேகத்தில் பீடைகொஞ்சம்
வருத்தம்வரும்வந்தாலும் வலுச்செய்யாதே. ௩௬

இதுவுமது.

௨௧௮-வலுவான அரசமித்துருவேயானால்
மக்களே பிரமஹத்தி அரை அதிகமாகும்
நலியானதேகத்தில் நலியேயில்லை
நன்மையென்றமணம்போகம் வாழ்வுமிச்சம்
கொலுவாகப்பூமியினம் பலிக்கும்பாரு
கொண்டுவிற்கும்வியாபாரம் குணமதாகும்
வலுவானமன்னர்உறவாகும்மேலும்
மக்களே அதிகபலன் வருகும்பாரே. ௩௭

௨௧௯-பாரடாபட்சிவலு அறியவேண்டும்
பகையானவெழுத்தைவிட்டு மாறவேண்டும்

கோருவதா அவ்வேளை அவ்வேளைக்குக்
குடிகெடுத்தசத்துருவை விலக்கிப்போடு
நேரும் ஒருபட்சிபகை ஆனபேரை
நினைவில்லைவந்து அவருடனே பேசவேண்டு
சேருவதுபட்சிஉறவானபேரைச்
சேர்ந்ததினால்நன்மைஉண்டு திண்ணம்தானே. கஅ

ஆயுட்பிரமாணம்.

உஉ0தான்பென்றபிறப்புக்கு வயதுசொல்வேன்
தன்மைஉள்ளவனுக்கு எழுபதாகும்
மூன்என்றநடைதனக்கு வயதோமைந்தா
மறையவர்தான்விதித்தபடி அன்பதாகும்
தேன்என்றஅரசுக்கு வயதுமெத்த
செப்பவென்றால்நூற்றுபத்து யிருந்துவாழ்வான்
தோன்பென்றஉறக்கத்தின் வயதுகொஞ்சம்
குறைவானபேறைந்து வயதான்பாரே. கக

இதுவுமது.

உஉக-வயசுகொஞ்சம்மரணத்தின் வயசுகேளு
மக்களேபதினைந்து வருஷம்ஆகும்
பயன்உடைய அரசுபகை ஆகாதப்பா
பண்பானஇதற்கதிகம் இல்லைஇல்லை
அபன்என்னும்தந்தை அன்று சேர்ந்தநேரம்
அந்தியமாய்ச்சுழிமுனைதான் முடிந்தநேரம்
வயசதுவே அற்றுவிடும் சனிஇவன்தான்மைந்தா
மருவிமணம்செயுநேரம் நோய்வரும்ஊண்கேளே. 20

ஜாதகப்படலம்-முற்றிற்று.



பிணிப்படலம்.

பொதுவிதி.

பிணிகொண்ட ஊணின்காலபலன்.

உஉஉ-ஊண்யென்றபிருதியில் வியாதிகண்டால்
உத்தமனே மூவைந்து நாளிலேதீரும்
தேனென்றவிநாயகர்க்கு அபிஷேகஞ்செய்துத்
தீபதூபங்காட்டித்து தியானஞ்செய்து

வான்என்றமருந்திதல் செல்வீர் ஆகில்
மக்களேபிராமணர்க்கு அன்னதானம்
கோன்என்றஒருமனதாய்ச் செய்யும்போது
கொடுமைஉள்ளபிடையும்தான் விலகும்பாரே. க

பிணிகொண்டநடையின்காலபலன்.

உஉங-விலகுமேநடைதனிலே வியாதிகண்டால்
விசனம்அதுவுமிகுதிஉண்டாம் மாதம்ஒன்றில்
நலமாகவேலவர்க்கு அபிஷேகம்செய்து
நங்கையரும்கன்னியர்க்குக் களபம்பூசி
பலரும்உண்டஅன்னமது அன்பாய்செய்து
பண்டிதர்க்குஉபசாரம் பலவும்செய்து
இலகவேமருந்திதல் செய்வார் ஆனால்
எழும்பியதோர் அப்பில்வந்த பிணிதான்போச்சே. உ

பிணிகொண்ட அரசன்காலபலன்.

உஉச-போச்சென்றஅரசுதனில் வியாதிகண்டால்
புண்ணியநாள்எட்டில் தீரும்தீரும்
ஆச்சென்றசிவனுக்கு அபிஷேகம்செய்து
அப்பனேஅரசுபிர தட்சணமேசெய்து
வாச்சென்றநோயினர்க்கு மருந்துதானே
வலமாகக்கொடுத்தவனே விளங்கும்பிடை
காச்சென்றஅக்கினியால் வந்தபிடை
கலைவதற்குஓமங்கள் செய்திடாயே. ங

பிணிகொண்டநித்திரையின் காலபலன்.

உஉரு-செய்துதான்உறக்கத்தில் வந்தபிடை
திருவதுமாதம்ஒரு மூன்றுக்குள்ளே
கொய்துதான்சடலத்தை நோகப்பண்ணும்
குலவியதோர்காளிக்கு அபிஷேகஞ்செய்து
வையதுதான்வாயுவினால் வந்ததாலே
மாருதிக்குவடமாலை மகிழ்ந்துசாற்றி
நொய்துவைத்தியனைக் மருந்துஈந்தால்
நொந்துமிகவருத்தம்ஆய்த் தீரும்பாரே. ச

பிணிகொண்டமரத்தின் காலபலன்.

உஉசு-தீருமேமரணத்தில் வியாதிகண்டால்
தீருவதுவெகுவருத்தம் திங்கள் ஆறில்

சிறப்புவிதி

பிணிகொண்டஊண்காலமுதல்விநாடியின்பலன்.

௨௯௰-சொல்லவேஊண்முதலாம் விநாடிதன்னில்
தொடர்பிணிதானாலைந்து நாளில்தீரும்
வெல்லவேநோய்அதுதான் பெலத்தேயில்லை
வெற்றிஆம்அரசபகை இருக்கொண்ணாது
அல்லவேஇவன்பகையிற் பிணிதானேயேதத
ஐங்கரனார்க்கபிஷேகம் செய்தால்மைந்தா
சல்லியங்கள்கொடுத்தாறின்ற பிணிகளாலே
சஞ்சலங்கள்ஒன்றும்இல்லை சவுக்கியம்ஆமே. ௯

பிணிகொண்டஊண்கால-௨-ஆம் விநாடியின்பலன்.

௨௯௧-சவுக்கியம்ஆம்ஊண் இரண்டாம்விநாடிதன்னில்
சரீரத்திறப்பிணிஅதுதானே சாரும்ஆகில்
அவத்தம்இல்லைநாள் ஏழிற் குணமதாகும்
ஐங்கரனார்க்கருச்சனைசெய் தடிபணிந்தால்
சிவகுப ஒருஅரசபகை இராதுமைந்தா
இடம்செய்யமாட்டாது வலுமேவ இல்லை
குவித்திருக்கும்ஒருபிருதி வியாகூறுப்பின்ற
கொளகைகீறுவந்திற்குக் குணம்தான்பாரே. ௰

பிணிகொண்டஊண்கால-௩-ஆம் விநாடியின்பலன்.

௨௯௨-குணமானஊண்மூன்றாம் விநாடிதன்னில்
குறித்தவுடல்வந்தபிணி நாள்ஒன்பானில்
மணமாகத்தீருமே தின்னம்தின்னம்
வழிக்காணைவிநாயகர்க்குப் பூசைசெய்து
கனம்ஆகாதரசபகை இருந்தாலுந்தான்
கண்டிப்புமெத்த இல்லை அரசம்பாதி
இனமானஅரசபகை ஊனில்வலுயில்லை
என்னசெய்வான்கோபம்அது செய்யொண்ணாதே. ௰௧

பிணிகொண்டஊண்கால-௪-ஆம் விநாடியின்பலன்.

௨௯௩-ஒன்றானஊண்நான்காம விநாடிதன்னில்
உடலில்வரும்பிணிஅணிஅதுநாள் பதின்மூன்றுக்குள்
திண்ணமாய்த்தீர்ந்துவிடும் செப்பினேன்பார்
சித்திவிநாயகர்க்கவலும் கடலைத்தேங்கா
வண்ணமாம்பால்பழங்கள் படைத்துமைந்தா
வணக்கமாய்பிராமணோபசாரம்செய்தால்

அன்னைபகையிருந்தாலும்வலுச்செய்யாது
அப்பனைபிரிதிவியின் கூறிதாமே. ௰உ

பிணிகொண்டவுண்கால-ரு-ஆம் விநாடியின்பலன்.

உ௱௪-கூற்றான வூண் அஞ்சாம் விநாடி தன்னில்
கொண்ட பிணிபதினஞ்சு நாளில்தீரும்
வேறான அரசுபகைவேதைசெய்யும்
விநாயகர்க்குஅபிஷேகம்செய்துமேலும்
சாற்றியவேதியற்கு அன்னதானம்
தண்மையுடன்செய்திடவேதணிந்துபோகும்
பாற்றானவூண் அதிலேவந்தரோகம்
பரிதானபிரிதிவியைச்சார்ந்ததாமே. ௰௩

பிணிகொண்டநடைக்கால் முதல் விநாடியின்பலன்.

உ௱ரு-சாந்தம்ஆம்நடைதனிலேமுதல்விநாடி
சரீரத்திற்பிணிஅதுதான்சாரும்ஆகில்
நேர்ந்தபடிசடலத்தைவருத்தம்செய்து
நீக்கும்அட்டநாள்பத்தில்வினையில்லாது
வேந்தன் அவன்பகைத்ததனால்வினையேஇல்லை
மேதினியில்இருவருக்கும்தோழன் ஆகும்
வார்ந்தமயில்வாகனத்தில்ஏறிஆடும்
வடிவேலரைத்தொழுதுவணக்கம்கொண்டே. ௰௪

பிணிகொண்டநடைகால்-உ-ஆம் விநாடியின்பலன்.

உ௱சு-கொள்ளவேநடையிரண்டாம்விநாடிமைந்தா
குறித்தபிணிபதினஞ்சுநாளில்மைந்தா
தள்ளவோசாந்தம்அதாம்மைந்தாகேளு
தண்ணீரிற்பகைத்ததொருபீடைதானும்
கொள்ளவேகொல்வதில்லைசெந்தூர்வாழும்
குமரகுருசெயல்இருக்கிற்குறைஒன்றில்லை
விள்ளவேதிண்ணம்இதுமனிதர்சொன்னார்
வேந்தனிடப்பகைபெரிதாம்சொல்லினேனே. ௰ரு

பிணிகொண்டநடைகால்-௩-ஆம் விநாடியின்பலன்.

உ௱எ-சொல்லவேநடைமூன்றாம் விநாடிதன்னில்
தோன்றினதோர்பிணி அதுநாள் இருபதுக்குள்
சல்லியம் ஆம்பிணிபாலேவருத்தல்மெத்த
சண்முகனார்கருணையில் சாந்தமாகும்

கல்லல்இடும்சத்துருஊன் அரசாகாது
கலங்காதமனந்தையுந்தான் கலங்கச்செய்வான்
தொல்லையிது அப்புவினால் வந்தபீடை
தொலைந்துபோம்தரமிசத்தில் துடிசெய்யாதே. ௰௬

பிணிகொண்டநடைகால்-௪-ஆம் விநாடியின்பலன்.

உ௱அ துடியானநடைநான்காம் விநாடிதன்னில்
தொடுத்தபிணிநாள் இருபத் தைந்தில்மைந்தா
அடிவானசண்முகத்தின் கிருபையாலே
வயித்தியத்தாற்சாந்தியத்தால் தீர்ந்துபோகும்
முடிவானவிந்து அங்கே தரித்தநேரம்
மொழியநின்றநவக்கிரக தோஷத்தாலே
கடுகியேவந்தபிணி தீரின்கூறும்
கலக்கம்இடும்சத்துருவின் பகையாகாதே. ௰௭

பிணிகொண்டநடை கால் ரு-ஆம் விநாடியின்பலன்.

உ௱௯ ஆகாதநடை ஐந்தாம் விநாடிதன்னில்
அப்பனேதேகத்தில் பிணிதான்வந்தால்
போகாது அரசுபகை புகலொண்ணாது
போசனத்தின்பகைஅரையிற் பொல்லாதப்பா
நோகாதுநோகும்அடா தேகம்மைந்தா
நுண்ணிதம்ஆம்பாசம்அது ஒன்றுக்குள்ளே
வேகாதுவெந்தல்லோ நீரதாகும்
வேலவர்க்கு அபிஷேகம் செய்யச்சொல்லே. ௰௮

இதுவுமது.

உ௱௰ செய்யவேமுருகனிட கிருபையாலே
தீராதவியாதியஸ்தன் தோஷந்தீரும்
கொய்யவே அரசுபகை இருந்தால்அப்பா
கொடுமைஉள்ளசனியனுக்கு அபிஷேகந்தான்
நொய்தாகும்நோய்அதுதான் வலுச்செய்யாது
நுவலாதுஎன்னசொல்வேன் ஜலத்தின்கூறும்
எய்யவந்தல்லாமல் வேறொன்றில்லை
பிவனபிழைத்ததயன்எழுத்தின் பெலன்என்பாரே. ௰௯

பிணிகொண்டஅரசகாலமுதல் விநாடியின்பலன்.

உ௱௰௧ பெலமாகஅரசுமுதல் விநாடிதன்னில்
பெரிதாகஉடலில்வந்த பிணிதான்ஐயா

தலமான அக்கினியாற் சூடுகொண்டு
  உடலம்எல்லாம்வெந்தருகி யெழுதும்ஆகி
நலம்ஆன நாள்மூன்றில் குணமதாகும்
  நற்சடையோன் சிவன்தனக்கு அபிஷேகந்தான்
வலம்வந்துசெய்திடவே நோய்கள்எல்லாம்
  மக்களே தீர்ந்திடுகல் திண்ணம்ஆமே. ௨௰

பிணிகொண்ட அரசு-நாள் ௨-ஆம் விநாடியின்பலன்.

௨௪௨ திண்ணம்அடா அரசிரண்டாம் விநாடிதன்னில்
  ஜடலத்தில்வந்தபிணி திடம்செய்யாது
வண்ணமடா நாள்ஐந்தில் தீர்ந்துபோகும்
  வண்மையுள்ள சிவதிருவை ஆனதாலே
சொன்னேனடா அக்கினியும் பகைத்தால்வந்து
  அடியானசனியனிடத் தோஷத்தாலே
எண்ணம்அடா பிணிபைதா விலகும்பாரு
  எள்ளளவும்நோய்பெலனே இல்லைத்தானே ௨௧

பிணிகொண்ட அரசுகால் ௩-ஆம் விநாடியின்பலன்.

௨௪௩ இல்லைஅடா அரசுமூன்றாம் விநாடிதன்னில்
  எழும்பியதோர்தேகத்தில் வந்தநோவு
தொல்லைஅடா என்றுசொல்லி நினைத்திடாதே
  அடியானசிவனுக்கு அபிஷேகம்செய்தால்
சன்னை அடா ஒன்றும்இல்லை நாள்எட்டுக்குள்ளே
  சடலத்தில்வந்தபிணி தள்ளிப்போகும்
பிள்ளைகளே அக்கினியால் வந்ததோஷம்
  பெலம்செய்யமாட்டாது திரும்பாரே. ௨௨

பிணிகொண்ட அரசுகால் ௪-ஆம் விநாடியின்பலன்

௨௪௪ தீரமாய் அரசு நான்காம்விநாடி
  செடத்திலேவந்தபிணி தினம்நாற்பத்தில்
மாறிவிடும்சனியினிட தோஷம்தானும்
  மக்களேசிவந்தனக்குக் குளிர்வைதீ
தீரிவிடும்நோயதுதான் விளைநில்லாது
  நிலத்தரசுஒருவரிடம் பகையுமில்லை
காரிகையாள்பூமடந்தை கிருபையாலே
  கண்டபலன்நான் உரைத்தேன் கருத்தில்வையே ௨௩

பிணிகொண்ட அ௩சகால் ௫-ஆம்-விநாடியின்பலன்.

உ௪௫-கருத்தான அரசஐந்தாம் விநாடிதன்னில்
கண்டபிணிபனிரண்டு நாளில்தீரும்
வருத்தம்அது செய்பாது வலிதுகொஞ்சம
மனமகிழ்ச்சியில்லாது வியாதிபோலும்
பொருத்தம்அது அக்கினியாற் கண்டகூடு
பொருமையுள்ளசிவன் உமையாள் கிருபையாலே
தரிப்பதுவே இல்லை இல்லை நோய்கள்தானும்
தண்மையாய்த்தேகம்அது சவுக்கியம்ஆமே. உ௪

பிணிகொண்டநித்திரைக்கால்முதல்விநாடியின்பலன்.

உ௪௬-ஆமப்பா உறக்கத்தில் முதல்விநாடி
அப்பனே தேகத்தில் பிணிதான்வந்தால்
காமப்பாவாயுவினாற் கண்டதோஷம்
கடினம்அடா திரும்புவது நாள்எட்டுக்குள்
சோமப்பா அரசபகை ஆகாதுபாரு
சொன்னோம்அடா காளிக்கு அபிஷேகம்செய்தால்
நாமப்பா அனுமனுக்கு வணக்கம்செய்தால்
நன்மைதாய்அப்பிணிதான் திரும்பாரே. உ௫

பிணிகொண்ட நித்திரைக்கால்-உ-ஆம் விநாடியின்பலன்.

உ௪௭-இரும்அப்பா உறக்கம் இரண்டாம்விநாடிதன்னில்
ஜெடலத்தில்வந்தபிணி தீர்வதில்லைதே ஆகும்
மாறும்அப்பாலகுவாகித் திரும்பாமின்னும்
மனத்துயரம்சம்பவும்ஆம் அடைஞ்சல்மெத்த
ஆறும்அப்பாகண்டவர்கள் விதிப்பயனென்று
அலறுவார்உலறுவார் அகிலந்தன்னில்
தேறும்அப்பாநாள்அதுதான் பதினைந்துக்குள்
திடம்ஆனைகாளிக்கு அபிஷேகம்செய்யே. உ௬

பிணிகொண்ட நித்திரைக்கால்-௩-ஆம் விநாடியின்பலன்.

உ௪௮-செய்யவே உறக்கம் மூன்றும்விநாடி
செகத்திலேபிணிவந்தால் சேதம்போல
நொய்யவே ஜடலத்தை நோகச்செய்தே
நொருக்கிவிடும்வாய்வினால் வந்ததோஷம்
வையம்அதில்காளிக்குப் பலியும்பொங்கல்
வயிரவர்க்குவடமாலை மகிழ்ந்துசாத்தி

எப்பாவேபண்டிதக்கைமருந்துதந்தால்
இதுதீரஇருபத்துநாள் செல்லும்பாரே. உஎ

பிணிகொண்ட சித்திரைக்கால்-உ-ஆம் விநாடியின்பலன்.

உசகூ-சொல்லும் ஒருஉறக்கும் நான்காம்விநாடி
தீவினை ஆம்பிணிகொண்டால் தேகம்தன்னில்
கொல்லவேவெகுகொடுமை கொள்ளும்கொள்ளும்
கூற்றுவனும் அரசுபகை ஆகநின்றால்
அல்லவேமாதம் ஒரு மூன்றுக்குள்ளே
அல்லாவிட்டால்தீருவது மாதம்மூன்றில்
வெல்லவேகாளிக்கு அபிஷேகம்செய்தால்
வெல்லுவதுதிண்ணமென்றுசொல்லொண்ணாதே உஅ

பிணிகொண்டமரணம்கால்-ரு-ஆம் விநாடியின்பலன்.

உருய-ஒண்ணாதஉறக்கம்ஐந்தாம் விநாடிதன்னில்
உத்தமனேதேகத்தில் பிணிதான்ஆனால்
எண்ணாதசாவதுதான் எய்தும்எய்தும்
இசையாக அரசுபகை இருந்ததானால்
தண்ணாதுதன்னும் அட்டா க்ஷணத்துக்குள்ளே
தன்மையுள்ள அரசுமித்துரு சொல்லொண்ணாது
கண்ணாதுதீரும்என்று சொல்லொண்ணாது
கடினம்அட்டாஅஞ்சுபத்து நாள்தான்காணே உகூ

பிணிகொண்டமரணகாலமுதல்விநாடியின்பலன்.

உருக-நாளானமரணகாலத்தில் முதல்விநாடி
நலமான தேகத்தில் பிணிதான்வந்தால்
கேளாதேகூற்றுவன் ஆம் அரசுபகையானால்
கெணிதமதுமாசம்தான் இரண்டிக்குள்ளே
பாழாகப்போகுமடா ஜடலம்தானும்
பழிகாரன்நோவானால் ஒடுங்கவைப்பான்
தாளாதஆகாச வெளியின்தோஷம்
தன்மையால்வரும்ஆனால் நாசம்ஆமே. ஙய

பிணிகொண்டமரணகால உ-ஆம்-விநாடியின்பலன்.

உருஉ-ஆறுதமரணம்ரெண்டாம் விநாடிதன்னில்
அப்பனேதேகத்தில் பிணிதான்கொண்டால்
தீராதஅரசுபகை பொல்லாதப்பா
தெக்ஷணத்திலேதேகம்விட்டு உயிரைநீக்கும்

தேராபல்சூனியத்தில் சேர்ந்த தோஷம்
திடமாக கூற்றன் அவனைப் பிடிக்கிறது
பாராமல் இவ்வுடலை அழிப்பான் அகோரே
பழியாகுமவருஷம்ஒன்றிற் பாருப்பாரே ௩௧

பிணிகொண்டமரணகால-௩-ஆம் விநாடியின்பலன்.

உ௫௩-ஒன்றானமரணம் மூன்றாம்விநாடி
உத்தமனே உடலதனிற் பிணிதான்வந்தால்
நன்றான ஆகாச வெளியின் தோஷம்
நலமானஊண் அரசு பகையாகாது
சென்றானசூனியத்திற் சேர்ந்தநேயம்
திடமானகங்கையிட சாபம்போல
கன்றான உடல்விட்டு உயிர்போம்அப்பா
கனியாகத்திரும்புவது அரிதாமகானே. ௩௨

பிணிகொண்டமரணகால-௪-ஆம்-விநாடியின்பலன்.

உ௫௪-அரிதாகும்மரணம் நாலாம்விநாடி
அப்பனேஉடலம் அழிக்கவந்தநோயாம்
பெரிதாகும்சத்துருநாள் மரணவேளை
பேணியேஅரசுபகை ஆகவேண்டும்
சரியானதினமரணம் ஆகவேண்டும்
சண்டாளசூனியமும் சேரவேண்டும்
குறியாகஅவனுடலம் அழிந்துபோகும்
குணமாகமாட்டாது வருத்தம்ஆமே. ௩௩

பிணிகொண்டமரணகால-௫-ஆம் விநாடியின்பலன்.

உ௫௫-வருத்தமடா மரணம்ஐந்தாம் விநாடிதன்னில்
மக்களே உடல்அழிந்த வந்தநோய்தான்
கருக்கடா பிதாஆன பிரமன்சேர்க்க
கணக்கென்றதொகைசரிதான் இனிவேறில்லை
விருத்தலென்றாலும் அவன்தானேவந்தால்
வேணபடிபட்டதினால் வருவதேது
மருந்தொருசொல்சொல்லாது உயிர்போம்போது
வாழ்க்கைஎன்ன ஆசையென்ன வருமேபாரே. ௩௪

பிணிகால அளவு.

உ௫௬-வாரப்பா என்றபிணிகால அளவுசொல்வேன்
வழியானஊண்தனக்கு மாசம்ஒன்று

குறைவியதோர்நடைதனக்கு காலம்அப்பா
குலாவியதோர்மாதங்கள் ஆறதாகும்
தருமமிகுஅரசாட்சி தனக்கேஎன்னில்
தன்மைஉள்ளபட்சம ஒன்றாய்ச் சார்ந்துநிற்கும்
மருமம் இல்லை தூக்கத்தில் காலம்மைந்தா
வருஷம்ஒன்றும் இதில்மிகுந்து வாழலாமே. உடு

இதுவுமது.

உ0௯-உயிரதமரணத்தின் காலம்கேளு
மகிழ்ச்சியில்லைவருஷம்அது மூன்றதாகும்
கேளாதபிணிக்கான காலம்ஈராம்
கெடுதியாய்ச்சூனியம் உற்றிருந்ததாலே
மாளாத அரசுபகை ஆனதோஷம்
மக்களேஒன்றுபததாய் வளரும்பாரு
ஆளாத அருள்செய்யும் மாமுனிவன்வாக்கால
அறிந்தபடிஅறிவித்தேன் திண்ணமதாமே. ௩௬

இதுவுமது.

உ0அ-திண்ணமாம்ரோமரிஷி முனிவன்வாக்கு
திண்ணம்என்றுமனதுறுதியாகக்கொண்டால்
எண்ணமாம்காலமுழுதறியலாகும்
எடுத்தகொருகாரியமும் ஜெயமேஆகும்
வண்ணமாம்ஞானவிதி கைவசமேயாகும்
மகததானகன்மம்எட்டும் பலிக்கும்பாரு
கண்ணதாம்வேலைகண்டு முடிக்கவேண்டும்
கண்மணியேசாந்திசொல்வேன் கருதிப்பாரே. ௩௭

சாந்திப்பொது.

உ0௯-பாரடாபாரிலுள்ள மாந்தர்க்கையா
படரும்ஒருபிணிஅதுதான் விலகுதற்கு
நேரடாசாந்திசெய்தால் தீரும்பாரு
நேர்மைஉள்ளபீடையது தீராவிட்டால்
சாரடாபாரைதனில் பாசிபற்றி
தள்ளுவதுபோல்சுருக்கி சரீரம்நோக்கும்
ஏரடாதொடுத்ததிது கன்மபீடை
என்மகனேஅறிவாகும் ஊனைக்கேளே. ௩அ

ஊண்காலப்பிணிக்குச் சாந்தி.

௨௬௰-ஊண்என்றபட்சியினால் வரும்நோய்தீர்க்க
உத்தமனே கணபதியை நிறுத்திமைந்தா
வேணமட்டும்வெள்ளைமலர் சாத்திஎன்று
மேன்மேலும்உபசாரத் துடன்வணங்கி
ஆமென்றஓம்ஸ்ரீம் ஹரிங்ரீம்சங்உங்என
ஐயும்கிலீம்கணபதி சர்வசாப
வாணென்றமசிநசி எனவேமைந்தா
மனதொருமித்தாயிரத் தெட்டுருத்தான்ஓதே. ௩௯

இதுவுமது.

௨௬௧-உருவான அதன்பிறகு கும்பம்வைத்து
ஒருபடிநெல்பரப்பி அறுகோணம்இட்டு
திருவானகாரணபஞ் சாட்சரம்கீறி
செயம்ஆனகாரியபஞ் சாட்சரமுஞ்சேர்த்து
ஒருவானசக்கிரத்தில் சூலம்விட்டு
ஓம் அம் உம் சிவ சிவாஎன்றுநாட்டு
தருவானகும்பத்தில் சலம்நிறைத்து
தண்மையுள்ளமாவிலையை அதன்மேல்வையே. ௪௰

இதுவுமது.

௨௬௨-வைத்தபின்பு அதன்மேலே தேங்காய்வைத்து
வாகான நூல்சுற்றி ஆடைசாற்றி
வைத்ததொருகும்பத்தின் முன்னேஐயா
வஸ்துவுடன்சத்தியும்தான் வைத்துமைந்தா
நெய்த்ததொருவர்க்கவகை மிகப்படைத்து
நேரிருந்து ஓம் ஐயும் கிலியும் சௌவும்
தைத்ததொருபாணம்அடா அங் வுங் என்று
சர்வபீடைகளும் மசி யென்றோதே. ௪௧

இதுவுமது.

௨௬௩-ஓடாத ஆயிரத்தெட்டுருவும்ஆனால்
உத்தமனேஓமகுண்டம் இரண்டுபோடு
வாடாதசமித்துவகை சொல்லக்கேளு
வன்னிமுன்அரசுருகி தர்ப்பைநெல்லு
ஏடாதேஆவின்நெய் ஆகுதிகள்செய்து
என்மகனேகுடத்திற் குபசாரம்செய்து

கோதிலா அட்சரத்தைச் சொல்லக்கேளு
குணமாகமுதல்உறைத்த தெடுத்துஓதே ௪௨

இதுவுமது.

௨௯௪-ஓதியதோர்உருஅய்பா யிரமானால்
உத்தமனேபெலியுடனே பொங்கலிட்டு
கோதில்லாசாம்பல்எல்லாம் குடத்தில்போட்டு
குடத்துநீர் அவன்சிரசில் விடுக்கும்போது
ஆதிதனைச்சிவசிவா யெனநினைத்து
அப்பனே அபிஷேகம் செய்துபாரு
நீதியாம்நாள் அதுதான்பதினொன்றானால்
நிலையாதுபீடையெல்லாம் விலகும்பாரே. ௪௩

இதுவுமது.

௨௯௫-விலகுமேவெள்ளியினால் தகடுசெய்து
வியாதிஉச்சாடனம்விதித் தெழுத்தைமாறி
கலகம்இல்லாதேவியென்ற வாலைபூசி
கைபாகம்தப்பாமல் களிந்துசெய்து
நிலையானமுன்தகட்டை முன்புவைத்து
நிகழ்ந்துஉச்சாடனம்உரு ஆயிரத்தெட்டேஆனால்
விலகாமல்இருந்திட்ட பீடைபோச்சு
மென்மேலும்கன்னிக்கு உபசாரஞ்செய்யே. ௪௪

நடைகாலப்பிணிக்குச் சாந்தி

௨௯௬-செய்துபார்நடையதனிற் பீடைதரும்ஆகில்
தீர்ப்பதற்குவிறுபகரை வைத்துக்கொண்டு
கொய்துபார்குண்டம்ரெண்டு கும்பம்வைத்து
கூறுனசமித்துவகை சொல்லுவேன்மைந்தா
நைய்வான அரசுவன்னி உருவிதர்ப்பை
நல்லவிளாம்அரசுபலா கருங்காலிச்சுப்பல்
நெய்வான நெற்பொரியும் கடலைமொச்சை
நேருகக்கலந்துகொண்டு குண்டம்போடே. ௪௫

இதுவுமது.

௨௯௭-போடவேஆவின்நெய் இலுப்பைநெய்யும்
புண்ணியனேயிரண்டும் ஒன்றாய்க்கலந்துக்கொண்டு
நாடவேவெக்ஙியத்தில் ஆகுதிகள்செய்ய
நல்லதொரு அட்சரத்தைச் சொல்லக்கேளு

ஆடவே ஓம்ஸ்ரீம் ரீம்அங்உங்என
ஐயும்கிலீயும் கணபதிசர்வபீடா
தேடவேசித்தினென்று பதிறுயிர்ந்தான்
செலுந்துய்ப்பொங்கல்பெலி உபசாரஞ்செய்யே. சசு

இதுவுமது

உகஅ-செய்துகொண்டுகுடத்தின் சாம்பல்யெல்லாம்
திரணமும்தாக்கோகாமல் கும்பத்தில்போட்டு
பெய்துநீர்குளுப்பாட்டி சிவாயென்றேதான்
பிரியமுடன் சிவன்பாதம் பெரிதும்போற்றி
செய்துகொண்டாவித்தகடு அதனில்மைந்தா
திரமானதம்பனத்தை எழுதிக்கட்டு
வைதுகொண்டுபோகும்அடா நடையின்பீடை
மக்களேபதினுந்நாள் செய்துபாரே சஎ

அரசுகாலப்பிணிக்குச்சாந்தி

உகக-செய்யவே அரசுதனில் பீடைவந்தால்
திடமானகணபதியை வைத்துப்போற்றி
நெய்யவேகும்பத்தை முன்னேவைத்து
நேர்முகமாய்வாலேத்தினப்பூஜைசெய்து
கொய்யவேகுண்டமது இரண்டுசெய்து
கொளுத்துசமுத்துவகை சொல்வேன்மைந்தா
நைவான அரசு சந்தனமேஆகும்
நன்மையுள்ளநெற்பொருகாரவின்நெய்யே சஅ

இதுவுமது.

உஎய-நெய்ஆன ஆகுதிகள் செய்துக்கொண்டு
நேர் இருந்துஉருஐயா யிரம்நீபோடு
அய்பாதபலிஉடனே தூபம்காட்டி
தோணவேசாம்பல்எல்லாம் கும்பத்திட்டு
கையாலேபிணியாளன் தலைமேல்விட்டு
கருணைஉள்ளசிவபதத்தை கருத்தில்வைத்தால்
மெய்யவேவருகின்ற பிணிகள்ஓடும்
மேலானசுவர்னத்தால் தகடுசெய்யே. சக

இதுவுமது

உஎக-தகடதிலே சிமூத்தை வரிந்துகொண்டு
தப்பாமல்நாள்யேழு பூசைசெய்து

விகடம்இதில்இல்லாமல் போம்போது
மேலானபீடைஎல்லாம் விலகிப்போகும்
சகடம்இதில்சிவன்கிருபை மெத்தவுண்டு
தரணிதனில்அறிந்தவர்கள்வணங்கிப்போற்றி
அகடில்லாதுலகதனில் வாழ்வர்பாரு
ஆகலினால்பீடையிதில் விலகும்பாரே. ௫௰

நித்திரைகாலபிணிக்குசாந்தி.

௨௱௨-பாரடாஉறக்கத்தில் வரும்பீடைதானே
பதிவிடுத்துவிலகுதற்கு பக்குவம்கேளீர்
சோடாவைப்பதிசை வைத்துக்கொண்டு
சேர்முகமாய்வாசலின்முன் கும்பம்வைத்து
தோடாஓமகுண்டம் நாள்தான்போக
உத்தமனேசனத்துவகை உரைப்பேன்ஐயா
கோரடாபால்அரச அத்திஇத்தி
குலவியதேவன்னிமுன்னே உருவிளள்ளே ௫௧

இதுவுமது.

௨௱௩-எள்ளுடனேநவதான்யம் நெற்பொரியும்சேர்த்து
எனமகனேயாவின்நெய் இலுப்பைநெய்யும்
தெள்ளுடனேதேங்காய்நெய் கலந்துக்கொண்டு
தெர்ப்பையினுற்கோரிவிடும் உருஎருமட்டும்
அள்ளுடனேஓம்ரீம்கிலியும் ஐயும்சௌவும்என்று
அப்பனேஸ்ரீம்ஹரீம் அங்உங்சிவாஎன்று
கிள்ளுடனேசர்வபீடைமசிநசிஎன்று
கெடியாகஎழுபதினுயிரம்தான்போடே, ௫௨

இதுவுமது.

௨௱௪-போடடாகுண்டம்ஒன்றில் பேதமைதான்
புகழானமற்றொன்றில் பேதனம்தான்
கேட்டாவித்வேஷணம்தான்மூன்றில்
கெடியானநான்கில்இடு பேதனம்தான்
நாடடாபெலியுடனே தூபங்காட்டி
நலமானகுண்டத்தில் சாம்பல்வாறி
கேட்டாகும்பத்தில் விடுத்துமைந்தா
குளுப்பாடச்சிவன்தனக்கு அபிஷேகம்செய்ய. ௫௩

இதுவுமது.

உளரு-செய்யவேரவிமதியும் சேர்ந்துக்கொண்டு
திரமாகத்தகட்டினில் உச்சாடணந்தான்கீறி
எய்யவேபிணியாளன் தனக்குக்கட்ட
ஓடிவிடும்பீடைஎன்ற தோஷமெல்லாம்
துய்யவளாம்கன்னிக்கு உபசாரஞ்செய்ய
சொற்பெரியவேதியர்க்கு உபசாரஞ்செய்
வையகத்தில்இவைகளெல்லாம் நன்றானன்றாம்
முக்களேமண்டலந்தான் அரையச்செய்யே. ருஎ

மரணகாலப்பிணிக்குச்சாந்தி.

உளசு-செய்யடாமரணத்தின் பீடைவரும்ஆகில்
இரும்புவதுவருத்தம்அடா சிவன்செயலேவேண்டும்
துய்யவனும்கணபதியை வைத்துப்போற்றித்
தொடுத்திடுவாய்வாலையிடம் கும்பம்வைத்து
மெய்யானஓமகுண்டம் எட்டுபோடு
விளம்புகின்றசமித்துவகை சொல்வேன்மைந்தா
தைஅரசுஅத்திஇச்சி உருவில்வன்னி
தனதானகருங்காலி மாவின்கொம்பே. ருஅ

இதுவுமது.

உஉள-கொம்புடனேபுரசுசுப்பல் நெல்விசுப்பல்
கோர்வையாய்நவதான்யம் பொரியுங்கூட்டி
அன்புடனேவேளைநெய்யும் செம்மறியின்நெய்யும்
அப் னே இலுப்பைநெய்யும் தேங்காய்நெய்யும்
தென்புடனேபுன்னைநெய்யும் புங்கன்நெய்யும்
தெளிவானவேம்பின்நெய் பன்றிநெய்யும்
இன்புடனேகேசரியின் நெய்யுங்கூட்டி
எடுத்திடுவாய்எக்கியத்தில் இனிதாம்பாரே. ருகூ

இதுவுமது.

உளஅ-பாரேநீகுண்டம்எட்டில் அன்மம்எட்டு
பாங்காகஜபம்பதினாயிரமேஆனால்
வாறேநீநினையாத பொங்கல்பொலிதூபம்
வேணதும்செய்தெரிந்தனைக் கும்பத்திட்டு
நேரேநீநின்றுசதா சிவத்தைப்போற்றி
நீர்கொண்டுஅவன்சிரசில் அபிஷேகித்தால்

சோராமல்பண்டலம் ஒன்றிவ்வண்ணம்தான்
தொடர்ந்துநின்றதோஷம்எல்லாம் விலகும்பாரே. ௬ள

இதுவுமது.

௬எகூ-விலகுமேஇவ்விதத்தால் வந்ததோஷம்
வேறென்னும்இவ்வண்ணம் சாந்திதானே
சலனம்இல்லைசெய்துகொண்டால் நீங்கும்நீங்கும்
தாணிதனில்சவுக்கியமாய் வாழலாகும்
இலகுவதாம்என்னசெய்யப் போகுதென்று
எனிதாகநினைத்துவிட்டால் இழுத்துக்கொல்லும்
அலையவேமிரமலவி உள்ளமட்டும்
அலக்கழிக்கும்பிணைஇன்னம் தோணும்பாரே. ௬அ

இதுவுமது.

௨அ௰-தோணுமோஉலகில்உள்ள பசாசர்களெல்லாம்
தோணுதுபஞ்சபட்சி சூட்சம்அப்பா
காணுமோகருக்கிடையும் கருமானம்தான்
கருணைவைத்துஆசானே காட்டவேண்டும்
பேணவேமணதுறுதி ஆகவேண்டும்
பிசகினல்பஞ்சபட்சி பிசகிப்போகும்
ஆணவேஅட்சரங்கள் அறியவேண்டும்
அறிவதென்றால்அறிதாகும் உரைப்பேன்ஊணே. ௬கூ

பிணிப்படலம்-முற்றிற்று.

---



## யாத்திரைப் படலம்.

———()———

பொதுவிதி

யாத்திரைக்கு ஊண்காலபலன்.

௨அக-ஊண் அதிலே ப்பிரயணம் புறப்பட்டாலதான்
உத்தமனேஉடலில்லை நபிணியும் இல்லை
தோணவேபோஜனங்கள் வர்க்கவகைஉண்டு
சொல்லரியதோழருடன் பிறப்புஉறவாகும்
தாணுவாய்தன்னிடத்திற் பொருளுடைமைசேரும்
சஞ்சலங்கள்மனத்திற்குச் சற்றும்இல்லை
மாண்புடையஅரசன்தான சத்துருவேஆனல்
வழிநடையில்துயரம்மெத்த வழுத்தலாமோ. க

இதுவுமது.

௨௮௨-வழுத்தவே உடல்தனக்கு வரும் உண்டாகும்
வகையான போஜனங்கள் வாய்த்திடாது
கொளுத்துமோர் சிறுதுசண்டை களவும் ஆகில்
கொடுமையாய் உறவினரை அகற்றிவைப்பான்
தழைத்ததோர் மனதிற்கு எவளவேணும்
சந்தோஷம் சலனம் அல்லால் சற்றும் இல்லை
சுழித்ததோர் சத்துருவின் வலிதாகாது
துணையான மித்துருவின் வலிதுநன்றே. ௨

யாத்திரைக்கு நடைகாலபலன்.

௨௮௩-நன்றல்ல நடையிலே போகொண்ணாது
நடந்தலைவதல்லாது மற்றொன்றில்லை
பண்டுறவாய் இருந்தவரும் பகைவர் ஆவர்
பசிநேரம் பொசிக்கும் அந்தப்பலனும் இல்லை
வண்டுயரம் கூந்தல் நல்லார் சேர்வும் இல்லை
வழக்குகளிற் சென்றாலும் வெல்வதில்லை
கொண்டமனையாட்டியுடன் கொடுமைமெத்த
கூற்றன் என்ற சத்துருவன் அரசர் காலே. ௩

இதுவுமது.

௨௮௪-அரசனைப் மித்துருதான் இருந்தால் நன்று
அலைந்தாலும் பொசிப்புக்கு இனம் உண்டாகும்
சிரசரிபு வந்ததொரு பீடைதன்னை
சிலகுதன்னை நீக்குவைப்பான் சினத்திலேதான்
சரசம் இல்லை உறவதனிற் சொர்ப்பலாபம்
சரீரத்தில் பிணிவந்து தானே நீங்கும்
பரிசம் என்ற பாணம் அதுதான் செய்யொண்ணாது
பகைவந்து ஒருபோதும் வாழார்பாரே. ௪

யாத்திரைகு ஆசின்காலபலன்.

௨௮௫-வாழ்வான அரசுதனிற் பயணம் ஆனால்
மனதிற்கு எவள்வேணும் பீடை இல்லை
கேளிமாம் உறவினர்கள் அனந்தங்கோடி
கெடியான போகபோக்கியங்கள் உண்டாம்
மாளாத சத்துருக்களின் வழக்கை வெல்லும்
மணம்செய்ய நன்றாகப் பெருகிவாழ்வார்
ஏழ்மையில்லாப் பொருளுடன் வஸ்திரங்கள் உண்டு
இன்பம் உண்டு அரசனிடம் இணங்கிப்பாரே. ௫

உஅகூ-பாரடா சொன்னதில் ஓர்பழுதும் இல்லை
பகையில்லை பகைத்தபேர் ஜெயிப்பதில்லை
சேரடா பிறபுஉற வாகும்பாரு
சேர்க்கையுமே மேதவுண்டு மனமகிழ்ச்சி
ஆரடா அரசனைத்தான வெல்லப்போரூர்
ஆராலும்கூடாது சுகம் அதிகமாகும
நேரடா சத்துருவால் இல்லாவிட்டால்
நேர்ந்தபடிவெல்லும் இது திண்ணம்தானே.                    சுா

யாத்திரைக்கு நித்திரைக்காலபலன்.

உஅசு-திண்ணம் அதாம் நித்திரையிற்செல்லொண்ணாது
தீராதநோய்வரும் உண்ணல் தின்னல் இல்லை
தீரதல திண்ணம் அதாம் மூன்று உறவும் பகையதாகும்
வழக்குரைத்சென்றாலும் சேதம் ஆகும்
கண்ணனுமாய் இருந்தாலும் வாராதுகண்டாய்
கடினமடா போனவன மீளார் மீளார்
முன்னமே பட்சிஅது உறங்கிறதையோ
மூடர்களே சத்துருஊண் அரசாகாதே.                    எ

இதுவுமது.

உஅஎ-அரசாகிலச்சத்துருதான் கொடுமைமெத்த
அலக்கழிப்பான் மனப்புண்ணும் நோகச்செய்வான்
சுரமான குடு கொண்டே உடலும்காந்தி
சுழல்வண்டு சுழல்வதுபோல் துன்பம்மெத்த
பரமான ஆபத்துக் காணும் ஆகிப்
பகைத்தவர்கள் நகைத்திடவே பழிகள்செய்வான்
சரமான பிரசண்ட வாய்வுக்குள்ளே
சருகதுவுப் பாம்பின்வாய் தவளை ஆமே.                    அ

யாத்திரைக்கு மரணகாலபலன்.

உஅஅ-தவளையடா மரணத்திற் பயணம் ஆனல்
சத்துருதான் ஊண் அரசு ஆகினான்றால்
கவலைஎன்ன இனிமேலும் சாவுதிண்ணம்
கைப்பொருள்போமற்றொருவர் உதவியில்லை
சவலையால்மனம்கொதித்து நோகும்புண்ணாய்
சண்டாள சத்துருவின் பகைஆகாது

சிவஞ்சொல்முனிவர்சொன்ன இதுதப்பாது
சென்றவர்கள்திரும்பிவர மாட்டார்பாரே. ௯

இதுவுமது.

௨௯௰-மாட்டாதமரணத்தில் மித்துருவலிதானால்
மனம்நினைத்துப்போனதுபோல் வருவதில்லை
தேட்டமாம்பொருளதுவைச் சிக்கிடாது
சிந்தைநொந்துபுண்ணாகிச் செடலம்நோயால்
பாட்டிலேமனத்துயரப் பட்டுநொந்து
பதறுவதும்அல்லாமற் பழிவந்தெய்தும்
நீட்டியதோர்மரணத்தில் யாதொருகாரியமும்
நினைத்தாலும்நிலத்தில் ஆகாதுபாரே. ௰

பொதுவிதி சிறப்புவிதிநிற்கும் வரலாறு.

௨௯௧-ஆகாதெனதும்குறிக்கத் தெளிவாய்ச்சொன்னேன்
அப்பனேபகலொன்று சாமமஞ்சு
நோகாதுஅதைக்குறுக்கி நாழிகையாய்ச்சொன்னேன்
நுணுக்கும்ஆய்விநாடியிலே நுவலக்கேளு
வாகாகவகைவிபரம் ஆகத்தானே
வளமாகப்பார்த்தறிந்து வரிசையாக
வேகாதபொருள்போம் ஞானமார்க்கம்
விள்ளாமல்விள்ளும்அடா ஊணைக்கேளே.! ௰௧

சிறப்புவிதி.

யாத்திரைக்கு ஊண்கால்முதல்விநாடியின்பலன்.

௨௯௨-ஊண்காலஅவனிமுதல் விநாடிதன்னில்
ஊர்ப்பயணம்பாலேறும்போவாராகில்
சேணரியபட்டணமும் பாற்சோறுண்டு
திரவியங்கள்உண்டுபரி செனங்கள்உண்டு
மாணரியமன்னர் உறவாகும்பாரு
மழைஉண்டுமங்கள சோபனங்கள்உண்டு
வேணபடிநினைத்த காரியங்கள்கூடும்
மீளவும்பிணிவருவ தில்லைபாரே. ௰௨

யாத்திரைக்கு ஊண்கால்-௨-ஆம்விநாடிபலன்.

௨௯௩-பிணியில்லைஊண்இரண்டாம் விநாடிதன்னில்
பிரயாணம்செயில்நினைத்த தெல்லாம்ஆகும்
கனிவர்க்கம்போசன வர்க்கங்கள்உண்டு
கலந்துரவாம்போசனங்கள்கிடைத்திற்கூடும்

வனிதம்எனும்வாணிபமும் மகிழ்வும்மெத்த
வழிநடையில்அணிஉண்டு ஆடைஉண்டு
தனியானஅரசுமித்துரு ஆகின்றாய்
தான்நடத்தும்காமயந்தான் சொல்லொண்ணாதே. ௰௩

யாத்திரைக்கு ஊண்கால-௨-ஆம் விநாடியின்பலன்.

௨௧௪-சொல்லொண்ணாதூண்மூன்றாம் விநாடிதன்னில்
தொலைதூரம்பிரயாணம் போவாரேயாகில்
கல்லனையமனைத்துயரம் சற்றும்இல்லை
கண்டவர்கள்வெகுஉறவாய்க் கலந்துக்கொள்வார்
தொல்லையில்லைபோசனத்திற் குறைஒன்றில்லை
ஸ்தூலம்அதிற்பிணியில்லை பகைகள்இல்லை
அல்லல்தரும்அரசசத்துரு ஆகின்றால்
அழித்தவர்கள்பகைஉண்டு சோரம்ஆமே. ௰௪

யாத்திரைக்குஊண்கால-௪-ஆம் விநாடியின்பலன்.

௨௧௫-சோரம்இல்லைஊண்அதில் நான்காம்விநாடி
துணிந்தேகில்துணைஉண்டு தோகைஉண்டு
சாரம்என்றபொருள்உண்டு சம்பத்துண்டு
சகலசனகூட்டுறவும் மணமும்உண்டு
காரம்என்றபந்துகளில் சேர்க்கைஉண்டு
கலங்காதேஒருபோதும் கலக்கம்இல்லை
வீரம்என்றவேந்தனிடப் பகையாகாது
வேந்தனிடப்பகைமிகவும் துயரம்ஆமே. ௰௫

யாத்திரைக்கு ஊண்கால-௫-ஆம் விநாடியின்பலன்.

௨௧௬-துயரம்ஊண்ஐந்தாம் விநாடிதன்னில்
தொலைதூரம்பிரயாணம் தொடர்ந்துபோகில்
சயமானவழிஅதனிற் பகைகள்உண்டு
தடைவுண்டுமனத்தடங்கா இடர்கள்உண்டு
கயமானஒருத்தர் உரவாகும்பாரு
கலந்ததினால்வரும்பீடை சழன்றுபோகும்
பயரானஅரசுபகை இருந்தால்மோசம்
பணியார்கள்பிறர்ஒருத்தர் பாசத்தோரே. ௰௬

இதுவுமது.

௨௧௭-பாசம்என்றஅரசுபகை இருந்தால்மோசம்
பழிவருமேவழிநடையிற் களவுபோகும்

விசினின்றபிணிஉண்டு அரசபகைஉண்டு
மேலானபனுஉதவி இல்லைஇல்லை
தாசிபரிற்பிரசனங்கள் சல்லியமேசெய்வார்
தனதாகஇருந்தவரும் பேசார்பேசார்
மோசம்என்றுதிசைநோக்கி வருவான்மங்கை
மொய்குழலாதிபூமடந்தை உதவியில்லைபாரே. ௰௭

யாத்திரைக்குநடைக்கால் முதல்விநாடியின்பலன்.

௧௨௧-உதவிஅல்லாநடைமுதலாம் விநாடிதன்னில்
உத்தமனேஊர்பயணம் போவாராகில்
சதியாகவீண்நடையால் நடந்திக்கொல்லும்
தன்மைஉள்ளமனுஉதவி இல்லைஇல்லை
கதியதோர்சுகபோகம் தானும்இல்லை
களவுபோய்பெண்கையாற் கலஹம்ஆகும்
பதம்ஆவதொருபோதும் வருவதில்லை
பழிகாரவன்அரசின் பகையாகாதே. ௰௮

யாத்திரைக்குநடைக்கால்-௨-ஆம் விநாடியின்பலன்.

௨௧௧-பகையானநடையிரண்டாம் விநாடிதன்னில்
பார்தனிலேஊர்பயணம்நடக்கொண்ணாது
தொகையானபோசனத்தால் துயரமாகும்
துணைஒருவர்உதவியில்லை நாவில்நோயாம்
வகையானபொருள்கூடும் களவுபோகும்
மன்னரால்கண்டிக்க வருமேஅப்பா
தகையானபோசனத்தில் மித்துருவேயானால்
ஜனஉதவிகொஞ்சம்உண்டாம் தன்மைபாரே. ௰௯

யாத்திரைக்குநடைக்கால் ௩-ஆம்விநாடியின்பலன்.

௩௱ - தன்மைஎன்றநடைமூன்றும் விநாடிதன்னில்
தனச்சேதம்உயிர்க்குதவி தானேஇல்லை
உண்மைஎன்றமித்துருவுஞ் சத்துருவாய்எதிர்ப்பன்
உலகத்தில்துணை இவனுக் கொருவர்இல்லை
வண்மைஎன்றதன்மனம் வெறுத்துப்போகும்
வழிநடையில்வெகுதுயரம் வருகும்பாரு
திண்ணம்என்றசத்துருஊண் அரசன்ஆனால்
தீவினைகள்மெத்தவுண்டு சேரழிப்பம்மைதானே. ௨௰

யாத்திரைக்குநடைக்கால்-௪-ம் விநாடியின்பலன்.

௧௱௧-சீரழிவாம்நடைநாலாம்விநாடிதன்னில்
திரமாகஊர்பயணஞ்செய்வார் ஆகில்
கோரணிக்குஉள்ளாகி விதிவசத்தைநொந்து
கொடுந்துயரால்புண்ணாக்கிக் குமுறுவாரப்பா
தாரணியிற்சத்துருவன் அரசர்கூட
சண்டாளர்கொடுமைமெத்த நயங்கசெய்வான்
தேறும்இந்தஇருவர்களும் மித்துருவாய்நின்றால்
ஜெயம்உண்டுபிறர்உதவி செய்வார்பாரே. ௨௧

யாத்திரைக்குநடைக்கால்-௫-ம் விநாடியின்பலன்.

௧௱௨-செய்த்தொருநடைஐந்தாம் விநாடிதன்னில்
சேர்ந்திருவர்தங்களிலே மித்துரு ஆனால்
நொய்துமனம்புண்ணாகித் தெளிவும்ஆகும்
நொடிக்குள்ளேமனமகிழ்ச்சி தவலல்ஆகும்
எய்திவரிலஅரிசிஉற வானால் அப்பா
என்மக்காள்வெகுசுகங்கள் எய்தும்பாரு
தையலர்கள்உறவாகும் சந்தோஷம்உண்டு
தயவான அரசுஉற வாகுங்காலே. ௨௨

யாத்திரைக்குஅரசுகால்முதல் விநாடியின்பலன்.

௧௱௩-உறவாகும்அரசதிலே முதல்விநாடி
உத்தமனேபிரதேசம் போகநன்று
சிறவானசொல்உண்டு வருத்தம்உண்டு
நினைத்தபடிசுகம்உண்டு உதவிஉண்டு
குறைவானகாரியங்கள் வருவதில்லை
கூடிவரும்பரிசனங்கள் அரசர்உறவாகும்
பரவும்ஒருமணம்உண்டு பகையேஇல்லை
பகையானபேர்களும்வந் துறவாவாரே. ௨௩

யாத்திரைக்குஅரசுகால்-௨-ஆம் விநாடியின்பலன்.

௧௱௪-பாரான அரசிரண்டாம் விநாடிதன்னில்
பரிவாசப்பிரதேசம் பயணம்ஆகில்
நேரானதடையில்லை ஐயம்இல்லை
நினைத்தபடிமுடிப்பதற்குப் பிறபுஉறவாவன்
காரானமனமகிழ்ச்சி அதிகம்உண்டாம்
கண்கொள்ளாக்காட்சிகளிற் களிக்கல்ஆகும்

தேரான பூமிதனம் கைவசமே சேரும்
செல்வமது செப்பவென்றால் அடங்கிடாதே. ௨௪

யாத்திரைக்கு அரசுகால(ங) ஆம்விநாடியின் பலன்.

௯௱௫- அடங்காத அரசு மூன்றும் விநாடி
அப்பனே பயணம்தான் ஆவார் ஆகில்
தடங்காணும் உதவியினால் சுகங்கள் உண்டு
சண்டாள சத்துருக்கள் இல்லை இல்லை
மடங்காத வாழ்வென்றால் மதிக்கப்போமோ
மன்னர் உறவாகும் மனமகிழ்ச்சி உண்டாம்
ஓடுங்காத பூபாலர் ஆக்ஞை தான் உண்டு
உரைக்கலொண்ணா திவன் வாழ்வு உரைக்கவென்றால் அரிதே. ௨௫

யாத்திரைக்கு அரசுகால(டு) ஆம்விநாடியின் பலன்.

௯௱௬- அரிதான அரசு நான்காம் விநாடி
அப்பனே கங்குகரை இல்லை செல்வம்
பெரிதான இடங்களிலே மனம் சேர்க்கை உண்டு
பின்தொடரும் ஆண் குழந்தை பிரபலமே ஆகும்
சரியான பொருள் வரத்து உண்டாம் மேலும்
சவுக்கியமென்ற சுகபோகம் சுத்தம் உண்டு
குரியான இவன்தன்னால் குலமீடேறும்
குவலயத்தி லுண்டாகும் வெகு உதவி பாரே. ௨௬

யாத்திரைக்கு அரசுகால(ரு) ஆம்விநாடியின் பலன்.

௯௱௭- உதவியென்ற அரசு ஐந்தாம் விநாடி தன்னில்
உத்தமனே தொழிலும் செய்ய நன்று
பதவியென்ற காயசித்தி யோகசித்தி
பண்பான ஞானசித்தி மந்திர சித்தி
சதமாக நினைத்ததுகைவசமே ஆகும்
சண்டாள நேரமங்கே தரிப்பதாகும்
அதமமென்ற சொல்போச்சு உத்தமம்தான் ஆச்சு
அப்பனே இவ்வேளை வாய்ப்பதரிதாமே. ௨௭

யாத்திரைக்கு நித்திரைகால முதல்விநாடியின் பலன்.

௯௱௮- அரிதென்ற உறக்கத்தின் முதல்விநாடி
அப்பனே பிரதேசம் போகும் காலம்
சரியென்ற தன் உயிர்தான் தவிக்கும் பாரு
தயங்காத மனம் கூட தவித்துப் போகும்

விரிகின்றஜ புலனும்துயரப்பட்டு
மெலிவதல்லால்சுகமொன்றும்இல்லைஇல்லை
அரிகின்றபரிஜெனங்கள்இல்லைஇல்லை
அப்பனேசண்டாளநேரந்தானே. உஅ

யாத்திரைக்குறித்திரைகால-உ-ஆம் விநாடியின்பலன்.

கஎக-நேரானஉறக்கம்இரண்டாம்விநாடி
நினைத்திட்டகாரியங்கள்வசப்படாது
கூரானசரீரத்திற்பிணிதான்வந்தால்
கூற்றுவன்போல்உடல்உயிரைக்கொடுமைசெய்யும்
பாரானசண்டாளர் பகைதான்மெத்த
பகைத்ததினால்வெகுகொடுமைபழிகள்சூழ
ஆரானசிவன்கிருபைஅகலநிற்கும்
அவன்சடலந்துயரத்தால்அழுந்தும்பாரே. உகூ

யாத்திரைக்குறித்திரைக்கால்(ங)ஆம்விநாடியின்பலன்.

கஎW-அழுந்துகின்றஉறக்கம்மூன்றும்விநாடி
அப்பனேபிரயாணம்ஆவாராகில்
கொழுந்துபோம்மனுஉதவிஇல்லாமல்தான்
கொள்ளையுமாம்வெள்ளத்தும்அவதிஆகும்
கழிந்துபோம்சடலம்உருவாதில்லை
கண்டவர்கள்இவனுடனேகலந்துறவேஇல்லை
அழிந்துபோம்உயிர்ச்சேதம்ஆகும்மைந்தா
அப்பனேஇவன்துயரம்தீர்வதரிதாமே. ஙW

யாத்திரைக்குறித்திரைககால-ச-ஆம் விநாடியின்பலன்.

ஙகக-அரிதானஉறக்கம்நான்காம்விநாடி
அப்பனேவழிப்பயணம்போகொண்ணாது
விரியானவழியிடையிற்சஞ்சலத்தலைபா
வெகுதுயரம்வாகிடும்பார்விஷதிருஷ்டிஉண்டாம்
குறைவானகாலமென்றும்பிரஜனங்கள்பேசும்
கூடினபேர்புறப்பட்டநேரமென்பார்
சரியானவேளையல்லசண்டாளசேனை
தன்னைஉள்ளமித்துறுஅரசாகில்நன்றே ஙக

யாத்திரைக்குறித்திரைக்கால-டு-ஆம் விநாடியின்பலன்.

கசஉ-நன்றிஇல்லாஉறக்கம்ஐந்தாம்விநாடிதன்னில்
நாட்டிலேபயணம்வந்துபோவாராகில்

குன்றென்றழுனை முகத்திற் போனாற்போல
கொடுமையாய்உயிர்ச்சேதம்வருமேதின்னம்
மன்னென்றவிஷதிருஷ்டியாலேசாவாக
மக்களேசோரனால் சாவும் உண்டு
கன்னென்றபெண்ணுறவால் உயிர்தான்சேதம்
கடினமவன் திரும்புவதும் இல்லைபாரே. ௩உ

யாத்திரைக்குமரணகால முதல்விநாடியின்பலன்.

௩௩௩-இல்லையென்றமரணமுதல் விநாடிதன்னில்
என்மகனேஊர்ப்பயணம் போகொண்ணாது
தொல்லைபடாபோனவர்கள் திரும்பார்மைந்தா
தோணாமல்உயிர் தவிப்பார் துணையில்லாமல்
சல்லியமாசோரர்தன்னால்உயிரும்சேதம்
சண்டாளஉயிர்க்கெவர்தான் துணைஆவார்கள்
கொல்லுமடா அஞ்சடினபேர் தமையுங்கூட
கொடுமையுள்ளநாட்பயணம்ஆகாதாமே. ௩௩

யாத்திரைக்குமரணகால(உ)ஆம்விநாடியின்பலன்.

௩௩௪-ஆகாதமரணமுண்டாம் விநாடிதன்னில்
அப்பனேபுறப்பட்டால் உயிர்ச்சேதமாகும்
வேகாதுவெந்துமனம் புண்ணாய்நோகும்
வேறுபட்ட அன்றிலைப்போல் துன்பமெய்தும்
சாகாதபிணம்போல உயிர்கவித்து
தனக்கொருத்தர்துணையிதறியாடாநின்பன்
நோகாமல்போவதில்லை பருபகைகள்வருமே
நோவாலுதான்மெத்தவுண்டுநொந்துவிடும்மனமே. ௩௪

யாத்திரைமரணகால(௩)ஆம்-விநாடியின்பலன்.

௩௩௫-மனமென்றமரணம்மூன்றும்விநாடி
வழிப்பயணந்தான்போகில் மரணமாவார்
இனமென்றசனத்தேசம் தனாலும்சேதம்
என்மக்காள உடலின்வந்த பிணிதீராது
சனமென்றஅவரிருந்தும் உதவிஇல்லை
சண்டாளர்அவர்களும்சான்சத்துருஆவார்
கனமென்றமித்துரு அசாகநின்றால்
கருதவேபிறர்உதவி செய்வார்பாரே. ௩௫

யாத்திரைக்குமரணகால(ச)ஆம்விநாடியின்பலன்.

கஎ௬-பாரானமரணம்நானகாம்விநாடி
பயணமதாய்ப்புறப்பட்டால்மரணமெய்தும்
வேறொருவர்துணையில்லை விஷந்தால்மாய்வன்
வில்கொண்டகானகத்தில மிருகவதையாகும்
சோரமென்றசோரர்களால் களவுமுண்டு
தொலையாதஇடைஞ்சல்வந்து நேரும்பாரு
கூறுமைகூற்றுவனே துணையாகின்று
கொல்வனென்றுகுமபருனிசொன்னான்றே. கஎ௬

யாத்திரைக்குமரணகால(ரு)ஆம்விநாடியின்பலன்.

கஎஎ-சொன்னதொருமரணமைந்தாம்விநாடிதன்னில்
தூரம்பிரயாணம்செய்வாராகில்
தன்னுலேஉயிர்தனக்கும் மனம்புண்ணாகும்
சண்டாளநேரந்து தலையெடுக்கொட்டாது
கொன்றுமேகூற்றுவன்தான பிடறிதேறிக்
கொணடிடவேநின்றிடுவன் கொக்கரித்து
சன்னுசிஆக்கிவிடும இதுபொய்யல்ல
தத்தளித்துநெஞ்சமது தவிக்கும்பாரே கஎஎ

இதுவுமது.

கஎஅ-தவிக்கவேவேண்டாம்நீ பட்சிபகைநீங்கி
தனத்தானமிதுதுருவுற செய்தாயானால
குவிக்கவேதவழ்ந்துழும கூடும்பாரு
குணக்குறிகளநிலையறிந்து கூறலாகும
தவிககாமலசகலகலைவல்லபடிஉண்டாகும
தானறிந்தாலவனையாகி அவனேசித்தன்
அவக்குமுறும்பாதிரைபைச் சொனனேமின்னம்
தொலபுனமேலமனைக்கோலமசொல்லுவோமே. கஎஅ

யாத்திரைப்படலம்-முற்றிற்று.

——(*)——



மனைப்படலம்.

——[-]——

மனைக்கோலுதற்கு ஊன்காலமுதல்விநாடி.

உ-ஆம்விநாடிகளின்பலன்.

கஎகூ-சொல்லுகிறேன் ஊன்முதலாம் விநாடிதன்னில்
அடியாகமனைமுகூர்த்தம் செய்வாராகில்

வெல்லுகிறேன்மூன்றுறுவருஷம்தானும்
மேல்மேலுஞ்சுகம்ஆகவாழ்ந்திருப்பார்
தொல்லைஒன்றும்இல்லைஅடாவிநாடிரெண்டில்
சுகமாகஇருநூற்று அன்புகொண்டு
சல்லியம்ஒன்றில்லாமல் வாழ்ந்திருப்பார்
தன்பதிக்கும்அதிகம்அதாம்வாழ்வுண்டாமே. க

மனைக்கோலுதற்கு ஊண்கால-ங-ஆம்விநாடி
ச, ஆம்விநாடிகளின் பலன்.

ங உ ம-வாழலாம்ஊண்மூன்றும்விநாடிதன்னில்
மக்களோ இறுநூறுவருஷம்தானும்
கோளானதொன்றுமில்லைசெல்வமிச்சம்
கோத்திரங்கள்குறைவின்றிவாழல்ஆகும்
வேள்ளானநான்காம்விநாடிதன்னில்
வீடுசெயில்வருஷம் ஒருபதினெட்டுபத்து
கோள்ஆனகுடிதழைத்துவாழும்பாரு
கூர்மையுடன்வாழ்ந்திருப்பார்நன்மைதானே. உ

மனைக்கோலுதற்கு ஊண்கால ரு ஆம்விநாடியின்பலன்.

ங உ க-நன்மைஎன்றஊண்ஐந்தாம்விநாடிதன்னில்
நலமாகவாழ்ந்திருப்பார்பதினைந்துபத்து
சென்மையுடன்அவ்விடத்திற்சோனபங்கள்கூடும்
தினந்தோறும்போஜனத்தின்சிறுமைஇல்லை
துன்மைஇன்றப்பால்பசுக்கட்வொழும்
துய்யவஸ்திர பூஷணங்கள் அதிகம்ஆகும்
தீமைஎன்றசெ்செயலும்வருவதில்லை
ஜெயமாகவாழ்ந்திருப்பார்திண்ணம்தானே. ங

மனைக்கோலுதற்குநடைகாலமுதல்விநாடி.
ங, ம்விநாடிகளின்பலன்.

ங உ உ-திண்ணம்அடாநடைதனிலேமுதல்விநாடி
செய்தாக்கால்மனைமூகூர்த்தமவருஷம்நூறு
அண்ணம்அடாவாழ்வுசுகம்அதிகம்இல்லை
என்மகனேவாழ்ந்திருப்பார்சுகமதாக
கன்னம்அடம்களவிதிலேபோகும்பாரு
கலங்குமேமனதுபின்புஆகும்
சொன்னமடாஇரண்டாம்விநாடிதன்னில்
தொடுத்தமனைதொண்ணூறுவருஷம்தானே. ச

மனைக்கோலுதற்குநடைக்கால ௩ ஆம்விநாடியின்பலன்.

௩௨௩-தொண்ணூறுவருஷம்இதில்சுகமும்துக்கம்
தொடுத்திடுமேவாழ்வுமணம்சுருக்கம்ஆக
எண்ணரியநடைமூன்றும்விநாடி தன்னில்
எடுத்தமனைவருஷம்ஒருமுப்பதுக்குள்
கண்ணூறுமெத்தவிண்டு களவுபோகும்
கட்டியதோர்வருஷம்ஒருமுப்பதுக்குள்
பொன்னூருதண்டம்உண்டுதீக்கோள்உண்டு
பொல்லாதமனிதன்என்றுசொல்லுவாரே. ௫

மனைக்கோலுதற்குநடைக்கால(௪)ஆம்விநாடியின்பலன்.

௩௨௪-சொல்லுவோம்நடைநான்காம்விநாடிதன்னில்
தொடுக்கமனை ஏழுபத்துவருஷம்தானும்
சல்லியம்தான் ஒழிந்ததில்லை துன்பம்மெத்த
சண்டையுடன்வெகுகொடுமைசகிக்கொண்ணாது
தொல்லைபப்பா அரசனிடம் பகையும்சூழும்
துன்பமுடன் தெண்டனையும்அதிகம்உண்டாம்
அல்லவாய்அந்தமனைகொஞ்சநாளில்
அடைபடுமே தீபமும்தான் அரியாம்பாரே. ௬

மனைக்கோலுதற்குநடைக்கால ௫ ஆம்விநாடியின்பலன்.

௩௨௫- அரிதாகும்நடைஐந்தாமவிநாடி தன்னில்
அகம்எடுத்தவருஷம்அது அறுபதாகும்
குறியானஅந்தமனை வாழ்வுகொஞ்சம்
கொண்டபெண்டிற்சேதமும்ஆம்சொல்வார்இல்லை
எரியாகும்நன்மைஎன்றகாரியங்கள்
எடுக்கமனம்ஒட்டாது இடைஞ்சல்ஆகும்
சரியானசடிலத்தில்நோஉண்டாகும்
சண்டாளசத்துருவின்பகைஆகாதே. ௭

மனைக்கோலுதற்கு அரசுபகைகாலமுதல் விநாடியின்பலன்.

௩௨௬-ஆகுமேஅரசுமுதல்விநாடிதன்னில்
அப்பனேமனைமுகூர்த்தம்செய்வாறாகில்
ஏகுமேவருஷம்அது ஆயிரந்தான்
என்னசொல்வேன்வாழ்வதென்றால்சொல்லொண்ணாது
சேகரமாம்மனைக்குதிரைகட்டல்ஆகும்
சிவிகைதன்னில்ஏறுதற்கு யோகம்ஆகும்

வாகானவாழ்வுமணம்செய்யல்ஆதும்
மங்களமாய்தான்யிருந்துவாழுந்தானே. ௮

மனைக்கோலுதற்கு அரசுகால(௨)ஆம்விநாடியின்பலன்.

வாழுமே அரசரண்டாம்விநாடிதன்னில்
வருஷம் அதாஎண்ணூறுமகிழ்ந்தசெல்வம்
ஆறுமேசுகபோகம் அதிகம்ஆக
அப்பனைமங்களமாய் இருந்துவாழும்
சேனநீ அரசர்உறவாகும்பாரு
செதிபெறவேமனுக்கூட்டம் ஜெனசேர்க்கைமிச்சம்
நாளான அந்தமனைஎப்போதுந்தான்
ஸ்மானலட்சுமியால்வாசம்ஆமே. ௯

மனைக்கோலுதற்கு அரசுகால(௩)ஆம்விநாடியின்பலன்.

௧௧௮-வாசம் அடா அரசிமூன்றாம்விநாடிதன்னில்
வருஷம் அது அறுநூறுமகிழ்ச்சிஆகும்
னேசம் அடா அரசரும்வந்திருப்பார்பாரு
நேர்மைஉளப்பிரபுவினிடநேரம்ஆகும்
தேசம் அடாவெகுதூரம்பேருண்டாகும்
திருவென்றபொருளுடமைகைவசமேஆகும்
பாசம்அடாஅரசுநிகர் மனைக்குவாசம்
பரிவாகத்தானிருந்து வாழும்பாரே. ௰

மனைக்கோலுதற்கு அரசுகால(௪)ஆம்விநாடியின்பலன்.

௧௧௯-பாரில்உயர் அரசுநான்காம்விநாடி
பதினெட்டில்வருஷம்தான் நூற்றைம்பதாகும்
நேருகின்றவாழ்வதிகம் செல்வம்என்றால்
நிருபதிக்கும் அதிகம் அமரம்மதிக்கொண்ணாது
சேருகின்றகுலங்கிளைகள் செல்வம் ஆதும்
ஏறுகின்றபரிஏறி நடப்பன் அல்லால்
என்மகனேகால்நடையாய்த் திரியான்தானே. ௰௧

மனைக்கோலுதற்கு அரசுகால(௫)ஆம்விநாடியின்பலன்.

௧௨௰-தான்என்ற அரசுஐந்தாம்விநாடிதன்னில்
தனதானமனைமுகூர்த்தம் செய்வார்ஆகில்
தேனென்றவருஷம் அதுநானூறாகும்
செல்வம்என்றால்நாவினால் சொல்லொண்ணாது

மானென்றவிழிமடவார்சேர்க்கைமிச்சம்
வந்திடுமேபொருளுடைமைகவசமதாக
ஏனென்றசத்துருவே இல்லை இல்லை
என்மகனே தீமையொன்றும் இல்லைத்தானே. ௰௨

மனைக்கோலுதற்குநித்திரைகாலமுதல்விநாடியின்பலன்.

௧௧௧-இல்லையென்றஉறக்கமுதல்விநாடிதன்னில்
என்மகனேமனைமுகூர்த்தம்செய்வாருகில்
கொள்ளையேபோகும்அப்போஅக்கினியால்வாதை
கூடிவரமாட்டாது ஒருசுகமும்இல்லை
சள்ளையென்றபிள்ளை இல்லை மனுஉதவி இல்லை
க்ஷணநேரம்ஆகிலும்சந்தோஷம்இல்லை
தொல்லைஅடாவருஷம்ஒருஅன்பதுக்குள்
துன்பம்மெத்தஉண்டாகும்சொல்லொண்ணாதே. ௰௩

மனைக்கோலுதற்குநித்திரைக்கால(௨)விநாடியின்பலன்.

௧௧௨-ஒண்ணாதஉறக்கம்ரெண்டாம்விநாடிதன்னில்
உத்தமனேமனைமுகூர்த்தம்செய்வாயானால்
தன்னாலேஅழிந்துவிடும்நாற்பதுக்குள்
தணம்என்றதணல்அதனால்வாகைஆகும்
எண்ணாதேமனுஉதவி இல்லை இல்லை
இல்லறத்திற்சுகம்இல்லைநோயுண்டாகும்
கண்ணாநெஞ்சதுவும் கண்ணும்பாரு
கலந்திடுமேமூதேவிவாசந்தானே. ௰௪

மனைக்கோலுதற்குநித்திரைக்கால(௩)ம்விநாடியின்பலன்.

௧௧௩-வாசமாம்உறக்கமூன்றாம்விநாடி
மக்களேமனைமுகூர்த்தம் செய்வாருகில்
பாசமாம்வருஷம் முப்பத்தைந்து
பாழடையும்அல்லாதுசுகமேஇல்லை
நேசமாய்உறவில்லைபிள்ளையில்லை
நினைத்ததொருகாரியங்கள் நேர்வதில்லை
நாசமாய்உறக்கம்என்றவேளைதானும்
நன்மைஒருநாளும்இல்லைநாசந்தானே. ௰௫

மனைக்கோலுதற்குநித்திரைக்கால-௪-ம்விநாடியின்பலனை.

௧௧௪-நாசமடாஉறக்கம் நான்காம்விநாடி
நல்லதொருமனைஎடுக்கில் முப்பதாண்டும்

தோஷம்தாமனையதுதான் பாழதாகும்
சொல்லொண்ணாதுயரமது தோணும்போணும்
பாரமுள்ளஉறவில்லை பொருள்சேர்க்கையில்லை
பண்பானசுகமில்லை புத்திரர்கள் இல்லை
நேசமாம்வாழ்வில்லை பசாசர்களே ஆகும்
நினையாதபீடையெல்லாம் நிலைக்கும்பாரே. (௰௬)

மனைக்கோலுதற்கும்நித்திரைகால (௫) விநாடியின்பலன்.

௩௰௫ நிலைக்குமடா உறக்கம்ஐந்தாம் விநாடிதன்னில்
நேர்மையுள்ளமனைமுகூர்த்தம் செய்வாராகில்
புலைப்பதுகேள்வருஷம்ஒரு இருபதுக்குள்
பாழடையும்அல்லாது தீபம்இல்லை
துலைக்குமடாபிறசனங்கள் உதவி இல்லை
துன்பம்தான் நினையளவும் தொலைந்திடவே
அலைக்குமடாமூதேவி வாசம்தானும்
அப்பனேசத்துருவின் பகைஆகாதே. (௰௭)

மனைக்கோலுதற்கு மரணகால முதல் ஆம்விநாடியின்பலன்.

௩௰௬ பகையானமரணத்தின் முதல்விநாடி
பாழாகும்வருஷமொரு இருபதுக்குள்
தொகையானமித்துருகாண் அரசன் ஆகில்
சொல்லியதோர்தொகைபடிக்குத் துயரம்தோணும்
வகையானசத்துருதான் அரசன் ஆகில்
மக்களேஒருபோதும் வாழ்வதில்லை
தகையானவருஷம்வொரு ஐந்துக்குள்ளே
தன்றலையதிந்துமனைப் பாழாம்பாரே. (௰௮)

மனைக்கோலுதற்குமரணகால (௨) ஆம்விநாடியின்பலன்.

௩௰௭ பாழானமரணம் இரண்டாம்விநாடி
பாலகனேமனையதுதான் பரிந்தெடுக்கில்
கோளானவருஷம்ஒரு பத்துக்குள்ளே
குலைந்துபோம்மனையதனிற் குடியேயில்லை
தேளானவிஷமதனால் மரணம்ஆகும்
தெண்டனையேபொருட்சேதம் துயரம்மெத்த
சூழானஅக்கினியால் வாதையாகும்
தொலைக்குதற்குமனுஉதவி இல்லைதானே, (௰௯)

மணக்கோலுதற்குமரணம் (௩) ஆம் விநாடியின்பலன்,

௩௩௮ இல்லையென்றமரணம் மூன்றும்விநாடி
என்மகனே மனமுகூர்த்தம்இடுவாராகில்
கொள்ளையடாவருஷமது ஐந்துக்குள்ளே
குடியேறல்ஒருநாளும் இல்லைஇல்லை
சள்ளையுடா கோலினவன் மரணமாவான்
சண்டாளநேரமது கரையேறாது
தொல்லையடா அம்மனையில் மூதேவித்தான்
சூழுமென்றுதொல்புவியோர் சொல்லும்பாரே. (௨௰)

மணக்கோலுதற்குமரணம் (௪) ஆம்விநாடியின்பலன்.

௩௩௯ கொல்லுகின்றமரணம் நான்காம்விநாடி
சொல்லியதோர் மணங்களிலே முகூர்த்தம்செய்தால்
கொல்லுமேவருஷமொரு மூன்றுக்குள்ளே
குடியேறல்ஒருநாளும் யில்லையில்லை
வெல்லவழிவையிவனருகில் கூற்றன்நின்று
வேண்டுபடிமனம்போலே முடித்துக்கொள்வான்
வல்லதாம்மணமுகூர்த்தம் செய்தபோதே
வந்திடுமேமனத்துயரம் சொல்லொண்ணாதே, (௨௧)

மணக்கோலுதற்குமரணம் (௫) ஆம்விநாடியின்பலன்.

௩௪௰ ஒன்னாதஅஞ்சாம் விநாடிதன்னில்
உத்தமனே மணமுகூர்த்தம் செய்வாராகில்
எண்ணாதவருஷமது ஒன்றுக்குள்ளே
இறைவனும்அவன்சடலம் அழிந்துபோகும்
தன்னாலேஉயிர்ச்சேதம் ஆகும்பாரு
சண்டாளபட்சியுடப் பகையிருந்தால்
விண்ணானவருஷமது குறைந்துபோகும்
மேன்மையுள்ளசீரழிவு மெத்தஆமே, (௨௨)

மணக்குப்பலாபலன்கூட்டும்வகை.

௩௪௧ சீரழிவுசெய்திடுமே ஊணதாகில்
சீராகச்சொன்னவற்றுட் கல்வரிசைகுறையும்
மாரழிவுகொண்டிடுவன் கூறியபிடைகளில்
மக்களேகால்வரிசைதான் அதிகம்ஆகும்
கூரழிவுசெய்திடுவான் கொடுமைமெத்த
கூடிவரமாட்டாது பொருட்சேதமாகும்

பாரமுறுசெய்திடுவோன் போசனத்தில்உள்ள
பகையெல்லாம்வருமானப் பகையதாமே. (௨௩)

இதுவுமது.

௩௪௨-பணியாதஅரசனிடப் பகையேயானால்
பண்பாகமுன்சொன்னபலனிற்பாதி
தொகையர்கும்கூறினதோர்பிடைத்தாலும்
தொடுத்துவிடும்மூவிரட்டிலதிகமாகும்
வகையாகக்கூடிடவைமாட்டாதையா
மக்களோமுன்உள்ளபொருளும்சேதம்
நகைசெய்வாருலகத்தில் உள்ளபேர்கள்
நல்லதென்றுபார்மகளும் சிரிப்பாள்பாரே. (௨௪)

இதுவுமது

௩௪௩-சிரிப்பானஊண் அரசுசத்துருவாய்நின்றால்
சேதமோஉயிர்ச்சேதம்பொருட்சேதம்
குரிப்பானமனம்நொந்துபுண்ணதாகும்
குடிகெடுத்தசத்துருவின்பகையாகாது
மரிப்பாகும்அந்தகனை முற்றுப்பாமாம்
வருமானம்எவ்வளவென்னும்வகைசெய்யாது
தெரிப்பாரேஉலகிலுள்ளபிறஜெனங்களெல்லாம்
செய்வினையோஎன்றுமனம்தவிகொள்வாரே. (௨௫)

மனைக்குஆயுசுகூட்டும்வகை.

௩௪௪-தவியாதபூமிதனில்மனைகள்கோலும்
தன்வயதுசொல்லக்கேள்தண்மையாக
கதையாகுஊண் அதிலே கோலும்காலம்
தொகையாகமுந்நூறு வயசேசொல்வார்
செமையானநடைதனக்குவயதுமைந்தா
திரமாகஒருநூறுசெப்பலாகும்
குவியாதுஅரசுக்குவயதுகேட்கில்
கூசாதேஆயிரந்தான்கூர்ந்துபாரே. (௨௬)

இதுவுமது.

௩௪௫-கூர்ந்துபார்வழக்கத்தில்வயதுகொஞ்சம்
கொஞ்சமெனில்ஐம்பதுதான்ஆகும்பாரு
நொந்துமரணத்தின்வயசுனுட்டம்
நிகழ்த்தயென்றால்இருபதெனும் வருஷமைந்தா

சார்ந்தபார்சத் துருஊண் அரசில்லாவிட்டால்
தண்மையுடன்சொன்னசொல்லும்பழுதேஇல்லை
சேர்ந்தபார்மித் துருவின்வலுவுண்டாயில்
செம்மைஉடன்ஒன்றுபத்தாகும்பாரே. (௨௭)

மனைப்படலம் முற்றிற்று.



# இருதுப்படலம்.

௧௪௬-ப்ரானபாவையர் தம்வாழ்வும்கேடும்
பண்புளதும்உள்ளதுபோம்பகர்வீரென்ன
நேரானமானிடர்தான்நின்றுகேட்கில்
நீணிலத்திலவள்பிறந்தநாளைக்கேளு
ஆரானப்பிறந்திடுநாள்சொல்வாராகில்
அப்பனேஅதுகொண்டுசொல்லவேணும்
ஓரானருதுவாகும்காலம்கண்டு
உண்மையாம்அநுபோகம்ஊணுஊனே. (௧)

ஊண்கால இருதுவின்பலாபலன்.

௧௪௭-ஊண்என்றபட்சியிலேருதுதான்ஆகில்
உண்பதிலுமுடுப்பதிலும்குறைஒன்றில்லை
சேண்என்றபொருள்உண்டுசெல்வம்உண்டு
செப்பொண்ணுச்செயல்உண்டுபாலும்உண்டு
மான்என்றவாழ்வுண்டுவாஞ்சைஉண்டு
வழியானபிள்ளைகள்மற்றெல்லாம்உண்டு
கோன்என்றசிவகளைதான் அதிகம்ஆகும்
கூட்டுறவாம்மித்துருதான்அரசுநன்றே (௨)

இதுவுமது.

௧௪௮ நன்றானமித்துருதான் அரன்ஆகில்
நடக்குமடாஉதவியினால்அதிகலாபம்
குன்றாதஒருபோதும்வாழ்வுதானும்
கூட்டிவைக்கும்சுகபோகம்குலமேசெல்வம்
மன்றாடும்பூங்குழலாள்ஆயுள்மட்டும்
வாழ்வுசொல்லஎவராலு மதிக்கொண்ணாது
சென்றாடும்சத்துருவின்பகையாகாது
சீரழிவுசெய்திடுவான்திண்ணந்தானே. (௩)

இதுவுமது.

௩௪௯-தானவனாய் இருந்தவரைப்பிரித்துவைப்பான்
தனம்பொருளைப்பவுஷங்களைத்தவறுசெய்வான்
கோனவனென்றறியாமலுலகத்தோர்கள்
குதித்திடுவார்ஒருதொழிலைக்குறித்துக்கொண்டு
மானனையாமின்னார்கள்பூர்க்குங்காலம்
மதிவேணும்நேரமங்கே வாய்க்கவேண்டும்
தேனனையாள்கலியுகத்திற்கோடிக்கொன்று
திடமாகத்தானிருந்து வாழ்வார்தானே. (௯)

நடைகால்-இருவின்பலாபலன்.

௩௫௰-வாழாதநடைகளிலே ருதுவேயானால்
வாழ்விலலைசுகமில்லை மனுக்கட்டியில்லை
மாளாதசத்துருவூண் அரசாய்நின்றால்
மற்றொருதீவினையும் சொல்லொண்ணாது
ஆளானமித்துருவூண் அரசனாகில்
அதனுடையகொடுமையும் அகற்றிவைப்பான்
கோளானவாழ்உண்டுசுகமும்உண்டு
கொடியானவூண்அரசுசத்துருஆகாதே. (௰)

இதுவுமது.

௩௫௧-சத்துருவாய்நின்றக்கால்வருஷம்ஒன்றில்
தான்வாழ்வுபோய்விடும்தாய்தந்தைசேதம்
செற்றுவிடும்பிரவிகள் கானபொருளுஞ்சேதம்
தீவினையாம்அகலாதவேசிஆவாள்
நைந்துவிடும்உடலில்நின்றுபிணிகள்தானே
நசிந்துபோம்அக்குடிதான்நாசம்ஆக
மத்தியமேஆகுமென்று முதல்நூல்தன்னில்
வசனித்தார்குருமுனியும்வசனித்தாரே. (௰௧)

அரசுகாலஇருதுவின்பலாபலன்.

௩௫௨-வசனித்தஅரசிலேருதுதான்ஆகில்
வாக்கினால்அவள்வாய்கைவமுத்தொண்ணுது
அசனித்தேபாக்கியம்என்னபவிசுஎன்ன
அனைவர்களும்கைகட்டிநிற்பதென்ன
நிசமித்தவாழ்வதுதான் ஆயுள்மட்டும்
நிலைக்கும்பார்மென்மேலும்பெருகிமைந்தா

விஷமித்தசத்துருவே இல்லை இல்லை
விளம்பும்ஒருபோசனத்தின்சத்துருஆகாதே. (எ)

இதுவுமது.

௩௫௩-ஆகாதபோஜனத்தின்சத்துருதான்ஆனால்
அகற்றிவைப்பான்வாய்க்குரிசைஆனதெல்லாம்
நோதமித்துருதான்அரசன்ஆனால்
நொடிக்குள்மனம்புண்ணாகித்தெளிவுண்டாகும்
சோகமதாய்க்கண்காணுக்காட்சியான
சொர்ப்பனத்தின்கதைபோலத்தொலைந்துபோகும்
வேகமாம்போஜனத்தின்சத்துருதான்என்ன
வேணபடிநடப்பதற்குநடுக்கும்பாரே. (அ)

நித்திரைகால-இருவின்பலாபலன்.

௩௫௪-பாரடாஉரக்கத்தில்ருதுதான்ஆகில்
பார்ப்பதென்னஅவள்உயிரேபங்கும்ஆகும்
சேரடாவாழ்வில்லைமணமும்இல்லை
ஜெகத்திலேபிஎஉதவிதானும்இல்லை
ஆரடாவுதவிசெய்யநினைத்தாலுந்தான்
அடிமாண்டுஇவருயிரும்அழிந்துபோகும்
சேரடாநினைத்ததெல்லாம்கைவசப்படாது
குறியாகஅவள்முகமும்இறக்கும்பாரே. (கூ)

இதுவுமது.

௩௫௫-இறக்குவதுயேதாலேதூக்கத்தாலே
எண்ணமென்றபிறசண்டவாய்வினாலே
இறங்குவதுமனம்புண்ணாய்ப்போனதாலே
எடுத்ததொருகாரியங்கள்பலியாத்தாலே
உறங்குவதில்பட்சியுடப்பகையாகாது
உற்றதுணையாருமில்லைஉலகத்துள்ளே
மயங்குவதுபிரம்பிவிஉள்ளமட்டும்
மனுஷதவியில்லாமற்போகும்பாரே. (ய)

இதுவுமது.

௩௫௬-போகாதபொருள்போகும்வர்ழ்வுபோகும்
புனிதமென்றசொல்போகும்தனமும்போகும்
சாகாதஉயிர்போலத்தவிக்கும்பாரு
சண்டாளசத்துருவன் அரசனானால்

வேகாது வெந்துவிடும் பொசிப்போ இல்லை
மேதினியில் மித்துருவூன் அரசன் ஆகில்
நோகாது கனவுகண்ட காட்சியேபோல்
வெந்துமே நொந்துமனம் கலங்கும்பாரே. (௧௧)

இதுவுமது.

௩௫௭-கலங்குவாள் ஐம்புலனும் ஒடுங்குமட்டும்
கண்டவர்கள் அவனுடனே கலந்துபேசார்
துலங்குவாள் தாமரையின் இலைத்தண்ணீர்போல்
துயரங்கள் மெத்தஉண்டு உயிர்தான் அப்பா
நலங்குவாள் உயிர் இருந்து செற்றபிணம்போலே
நாநிலத்தில் இவட்கு தவி எவரும் இல்லை
விலங்குவாள் இவளை அறியாமல் ஐயோ
வீழ்ந்தோமோ யென்று பரதவிப்பாள் தானே. (௰௨)

இதுவுமது.

௩௫௮-தவிப்பது தானே தாலே வேலையாலே
சண்டாளசத்துருபகையானதாலே
குவிப்பதுபோல் பொருளாசை மெத்தவுண்டு
கூடிவரமாட்டாது குழுறும்நெஞ்சும்
சலிப்பதுபோல் சொல்வார்கள் தரணியோர்கள்
சலிப்பார்கள் பிறர் இவனுக்குதவி செய்வார்
அவிப்பதுபோல் உயர் அதுதான் உள்ளமட்டும்
அலைந்தலைந்து மலஜலம் அழியும்பாரே. (௰௩)

மரணகால இருதுவின்பலன்

௩௫௯-அலைவான மரணத்தில் திரண்டாளாகில்
அழுந்திடுமே வருஷமொன்றில் ஜடலந்தானும்
குலையுமே அவள்பொருள் தான் மித்துருவலித்தானல்
குடிகெடுத்த சத்துருவலி தாழுமாகில்
கலையுமோர் சமொருமூன்றுக்குள்ளே
கடினமட்டர் குடிவாட்டுகைகடைதேறாது
இலைபோலே நாளுக்குநாள் தான் தேய்ந்து
இவளுயிர்தான் எவ்வுலகில் இருக்கும்பாரே (௧௪)

இருதுப்படலம் முற்றிற்று





# முகூர்த்தப்படலம்.

௩௬௰-இருக்கும்ருதுபார்க்கும்இந்தவகையேபோல
என்னென்னகாரியங்கட்காமோவென்னில்
வருக்காதுவருஷம்தான்பிறக்குங்காலம்
தனித்ததொருமாதமதுபிறக்குங்காலம்
வருக்கமுதல்நினைப்பார்கள்வரவுபாரு
மற்றுளதுவிதைவிதைத்தெடுத்தல்பாரு
குற்றகாகக்குருகும்அந்தகொள்கைபாரு
கோடிவஸ்திரம்வாங்கின்தின்குணம்பாரே (க)

இதுவுமது.

௩௬௧-குணமானவிலைகிறயம்குடியாபாரம்
கொண்டுவைத்துஆளுகின்றஉறவிசேர்க்கை
மணமானவான்முறையாம்சம்பந்தங்கள்
வல்பிணித்தீர்வதற்காய்மருந்தூதல்
கனமானபெரியோர்களைக்காணுநேரம்
கனிவர்ணநற்காலம்துற்காலங்கள்
மணமானபெரியோர்களைக்காணும்நேரம்
வசனித்தேன்உரோமரிஷிவகையாய்த்தானே. (உ)

முகூர்த்தப்படலம்-முற்றிற்று.

---

## நலந்தீங்குப் படலம்.

௩௬௨-பாரில்ஊண் அரசுமடம்செய்யநன்று
பதியெடுக்கநிலங்கொள்ளபயிர்கள்செய்ய
ஏருநடமாடுகொள்ளபணிகள்செய்ய
எதிர்த்தச்செயங்கொள்ளயாபரணம்பண்ண
தாரணியிற்சுயம்பாட அடிமைசேர்க்க
தக்கதுவாம்வாழ்வுடனேசம்பத்துண்டாம்
பாருணநடையுறக்கம்சாவிற்செய்தால்
மனுக்சேதம்பொருட்சேதம் வகையாய்ப்பாரே (க)

இதுவுமது

௩௬௩-வகையாகப்பார்த்துமனம்தெளியவேணும்
வல்லவர்களபெரியோரைவணங்கவேணும்

தொகையாகசாஸ்திரத்தில் வினையம்வைத்து
தொடிகுறிபோற்கேள்வியினால் அறியவேண்டும்
பகையாகயிருந்ததினால் வருவதென்ன
பஞ்சபட்சிசாஸ்திரத்தை உலகமீதில்
நகையாதேவெறும்பிலுக்கர் உடனேகூடி
நளினம்மோல்மித்துருவின் நிலையைப்பாரே. (௨)
நலந்தீங்குப்படலம்-முற்றிற்று.

# வெற்றிதோல்விப்படலம்.

௩௧௪-சத்துருவின்நிலையிலே வைத்துக்கொண்டு
வினவிநீகேட்கும்வகை சொல்லச்சொல்லும்
பற்றுகிறகனமானால் நடையில்வைத்து
பவிசுகள்அரசிலே இருந்துக்கொண்டு
வெற்றியாம்அக்ஷரத்தை ஓதுஓது
வெல்லுவதுதிண்ணமென்று உறுதிக்கொள்ளு
சத்தியமாய்முனியுரைத்த மொழிதப்பாது
தனிவழக்குவெல்லுதற்கு வகையைக்கேளே. (௧)

இதுவுமது.

௩௧௫-வகையென்னயெதிரியைத்தான் தூக்கம்சாவில்
வைத்துநீஊணரசில் இருந்துக்கொண்டு
நகையென்னகேட்பவனை நடையில்வைத்து
நவிலவேயெதிரியுமே நழுவிப்போவான்
தொகையென்னசத்துருவின் பகையாகாது
தொடராமல்நடப்பதற்கு அக்ஷரத்தைமாறு
பகையென்றசொல்போச்சு வுறஉண்டாச்சு
பார்த்தவர்கள்சமர்த்தன்என ஆகும்பாரே. (௨)

இதுவுமது.

௩௧௬-ஆகுமேபக்ஷியின்தன் தொழிலைத்தானும்
அப்பனேவகைவிபர மாகச்சொன்னேன்
ஏகமாய்ப்பதினெண்பர் சொல்லார்
என்மகனேநான்வெளியாய்ச் சொல்லிவைத்தேன்
போகுமேயெதிரிடைப் பகையும்போச்சு
பூதலத்தில்நடக்கும்வகை தெரியலாச்சு
சேகரமாங்காலபலன் அறிந்துகொண்டால்
செல்வமென்றுகோடியாய்ச் செழிப்பதாமே. (௩)

இதுவுமது.

௲௬எ-பத்தான இந்தநூற்கிணையேயில்லை
பண்பானதனங்கோடி ஈந்தாலுந்தான்
முத்தானசாஸ்திரத்தை வெளிவிடாதே
முன்னோர்கள்மனதடக்கம் செய்துவைப்பார்
வித்தானபொருள்களெல்லாம் இதிலேதோன்றும்
வேதாந்தசூழ்முனையு மிதுவேயாகும்
கொத்தானஅடிகொடுத்து முடிவரைக்கும்
கூறினேன்வாழ்வதற்காய்க் கூறினேனே. (௪)

வெற்றிதோல்விப்படலம்-முற்றிற்று.

## அஷ்டகன்மப்படலம்.

ஆதிவாரந்திதி நக்ஷத்திர இராசிபலன்.

௲௬அ-கூறினேன்ஞாயரதில் அசுபதியும்சஷ்டி
குணமாகமிதுனமும் மோகனமேயாகும்
தேறினேன்பரணியும் ஏகாதேசி
திறமாககடகமுமே ஸ்தம்பனமேயாகும்
வாறினதோர்கார்த்திகையும் துதிகைதானும்
வளமாகசிங்கமது வேஷணமுமாகும்
தூறினேனுரோகணியும் சத்தமியுங்கூட்டி
சுகமானகன்மமது பேதனமும்பாரே. (௧)

இதுவுமது.

௲௬௯-பாரடாசிரடமும் துவாதேசியோடு
பண்மையுள்ளதுலாகோலும் உச்சாணமேசெய்யும்
கூறடாஆதிரையும் திரிதிகையும்சேர்ந்தால்
குறியானவிருச்சிகமும் மரணமேசெய்யும்
தீரடாபுனர்பூசம் அஷ்டமியுங்கூடில்
சேகம்புகழும்தனுசதுவும் வசியமாகும்
சாரடாபூசத்தோடு திரையோதேசிம்கரம்
சண்டாளஆகிருஷ்ணம் ஆகுந்தானே. (உ)

௩எ0-தாரனென்றஆயிலியம் திரிதிகையுங்கும்பம்
தரணிதனில் மோகனமே செய்யும்பாரு
வாரனென்றமகத்துடனே நவமிசேர்ந்தால்,
வகையானமீனமது ஸ்தம்பனமுமாகும்
தேனென்றபூரமுடன் அமாவாசைமேஷம்
திகைப்புள்ளவித்வேஷணமுமாகும்
கோனென்றஉத்திரமும் பஞ்சமியுஞ்சேர்ந்தால்
கூறியதோரிடபமது மோகனந்தாமே. (௩)

இதுவுமது.

௩எ௧-தாமேதானஸ்தமுடன் தசமியதுகூடில்
தண்மையுள்ளமிதுனமுமே உட்சாடணமதாகும்
தாமேதான்சித்திரையும் அம்மாவாசை
தரித்ததொருகற்கடகம் மாரணமதாகும்
தாமேதான்சுவாதியுடன் சஷ்டியுமேசேரில்
தயவானசிங்கமது வசியமதுவாகும்
தாமேதானிவ்வகையாய் கண்டபேர்க்கு
தரணிதனிலெதிரியில்லை சாற்றுவதுமாமே. (௪)

இதுவுமது.

௩எ௨-மாமோகவிசாரமுடன் பிரதமைகற்கடகம்
மகத்தானமாரணமும் ஆகும்பாரு
பாமோகஅனுடமுடன் சஷ்டியோடு
பகையானசிங்கமுமே வசியஞ்செய்யும்
காமோககேட்டையுடன் ஏகாதேசி
கன்னியுமேஆகிருஷ்ணம் கனிவாயாமே
கோமாகமூலவுட னதிகைதானும்
குலாவியதுலாத்துடனே மோகனமுமாமே. (௫)

இதுவுமது.

௩எ௩-மோகமுள்ளபூராடம் சத்தமியுங்கூட்டி
முரிமையுடன்விரிச்சிகமும் ஸ்தம்பனமுமாகும்
பாகமுள்ளஉத்ராட துவாதேசிதானும்
பணியுமடாவேஷணமும் பணிக்துஅதுஆகும்
தாகமுள்ளதிருவோணம்திரிதிகையுமாரம்
தப்பாமல்பேதனமேசெய்யும்பாரு

தேகமுள்ளஅவிட்டமுடன் அஷ்டமியுங்கும்பம்
தெளிந்துபார்உட்சாடணமேசெய்யும்பாரே. (௬)

இதுவுமது.

௩௭௪-செய்யுமேஉத்திராடத் திரயோதேசி
செயமானமீனமுடன்மாரணமும்ஆகும்
வையுமேசதயமுடன் சதுர்த்தியோடு
வளமானவேஷமுமே செய்யும்வசியம்
குய்யுமேபூரட்டாதி நவமிகற்கடகம்
கொண்டுவரும்ஆகிருஷ்ணம் குணமாய்ப்பாரும்
நையுமேரேவதியும் சதுர்த்தசியும்மிதுனம்
நயமானமோகனமேசெய்யும்பாரே. (௭)

சோமவாரம்திதிநக்ஷத்திரம்இராசிபலன்.

௩௭௫-பாரப்பாதிங்களுடன் அசுபதியுந்தானும்
பஞ்சமியுங்கற்கடம் ஸ்தம்பனமுமாகும்
நேரப்பாபரணியுடன் தசமிசிங்கம்
நேர்மையுள்ள வித்வேஷணச்செய்யும்பாரு
ஆரப்பாகார்த்திகையும் அம்மாவாசை
அப்பனேகன்னியுமே பேதமுமாகும்
சாரப்பாஉரோகணியும்பிரதமையும்துலாமுன்
சார்வானஉட்சாடணமே ஆகும்பாரே. (௮)

இதுவுமது.

௩௭௬-ஆகுமேமிருகசீரிடமும் சஷ்டி
அதிவிருட்சிகமாணமுமே செய்யும்பாரு
ஏகுமேதிருவாதிரையும் ஏகாதேசி
இனிதானதனுசுடனே வசியம்மாகும்
போகுமேபுனர்பூசம் துதிகைதானும்
புனிதமுடன்மகரமும் ஆகிருஷ்ணம்ஆகும்
சாகுமேபூசமுடன்சத்தமியும் கும்பம்
தனியாகுமோகனமேசெய்யும்பாரே, (௯)

இதுவுமது.

௩௭௭-பாரேநீயாயிலியம் துவாதசிமீனம்
பத்திரமேஸ்தம்பனமும் மதிவாய்க்காணும்
நேரேநீசுகமுடனே திரிதிகையும்மேஷம்
நினைவானவித்வேஷணமேசெய்யும்பாரு

தேரேகீபூரமுடன் அஷ்டமியும்இடபம்
தெளிவானபேதனமே ஆகும்பாரு
காரேகீஉத்திரமும் திரையோதேசி
கனிவானமிதுனமுமேஉச்சாடணமுமாமே. (௰)

இதுவுமது.

௲எஅ-ஆமப்பாஅஸ்தமுடன் சதுர்தசியோடும்
அப்பனேகற்கடமும் மாரணமும்ஆகும்
போமப்பாநவமியுடன் சோதிசிங்கம்
புகழ்பெரியவசிய முடன்செய்யும்பாரு
காமப்பாசித்தரையும்சதுர்த்தசிகன்னி
நயமானஆகிருஷ்ணம் ஆகும்பாரு
காமப்பாவிசாகமுடன் பஞ்சமியும்துலாமும்
கனிவானமோகனமே செய்யும்பாரே. (௰௧)

இதுவுமது.

௲எகூ-செய்துபார்தசமியுடன் அனுஷம்மீனம்
திரண்டதொரு விருட்சிகமும் ஸ்தம்பனமாம்
கொய்துபார்கேட்டையுடன் அம்மாவாசி
குணமானதனுசதுவும் வித்வேஷணம்செய்யும்
பைதுபார்மீலமுடன் பிரதமையும்நகரம்
பணிவானபேதனமே செய்யும்பாரு
நைதுபார்பூராடம் சஷ்டியோடும்
நயமானகும்பமேஉச்சாடணம்ஆமே. (௰உ)

இதுவுமது.

௲அ௰-உச்சாடணம்திருவோணம்யேகாதேசி
உறவானமீனமது மாரணம்ஆகும்
திட்சாட்டியதிருவோணம் துதிகைதானும்
திருந்தியதோர்மேஷமேவசியமாகும்
நட்சாட்டிஅவிட்டமுடன் சத்தமியும்இடபம்
நன்மையென்ற ஆகிருஷ்ணம்செய்யும்பாரு
மைசாட்டியஉத்திரட்டாதி துவாதேசி
மறவாமல்மோகனமே செய்துபாரே. (௰௩)

மங்களவாரம் திதிநட்சத்திர இராசிபலன்.

௲அக-செய்துபார்ரேவதிதிரி திகையுடன்கண்டும்
திரமானஸ்தம்பனமேசெய்துபாரு

நெய்துபார்பூரட்டாதி அஷ்டமியுஞ்சிங்கம்
நுண்மையுடன் வித்வேஷணம்ஆகும்
நைதுபார்ரேவதியும் திரையோதேசி
நலமானகன்னியுமே பேதனம்ஆகும்
வைதுபார்செவ்வாயும் அசுபதியும்சதுர்த்தி
வளமானதுலாம்அதுவும் உச்சாடணம்ஆமே. (௰௪)

இதுவுமது.

௧௬௨-ஆமப்பாபரணியுடன் நவமியுங்கூட்டி
அப்பனேவிருட்சிகம் மாரணமேசெய்யும்
காமப்பாகார்த்திகையும் சதுர்த்தேசிதானும்
நலமானவசியமென்ற தொழிலுமாகும்
போமப்பாரோகணியும் பஞ்சமியும்மகரம்
பொருள்வருத்துஆதி ஆகிருஷ்ணம்செய்யும்
தாமப்பாமிருகசிரிடம் தசமியோடு
தனதானகும்பமே மோகனமாமே. (௰௫)

௨௬௩-மோகமேதிருவாதிரை அம்மாவாசை
முனையுள்ளமீனமே தம்பனமாகும்
கோனமேபுனர்பூசம் பிரதமையும்மேஷம்
குடிகெடுத்த வித்வேஷணமாகும்
வாகனமேபூசமுடன் சஷ்டியோடும்
வழிமான்இடபமே பேதனம்செய்யும்
சாகனமேஆயிலியம் யேகாதேசி
தனிவாழும்மிதுனம் உட்சாடணம்ஆமே. (௰௬)

இதுவுமது.

௨௬௪-ஆமென்றமகமுடனே துதிகைகூட்டி
அப்பனேகற்கடகம் மகாணமாகும்
வேமென்றபுரமடா சத்தமியும்கூட்டி
மேன்மையுள்ளசிங்கமே வசியமாகும்
ஓமென்றஉத்திரம் துவாதேசிதன்னில்
உலகமெல்லாம்ஆகிருஷ்ணம் செய்யும்பாரு
தாமென்றஅஸ்தமுடன் திரிதிகையுங்கூட்டி
தனிப்பிறந்ததுலாமுடனே மோகனமாம்பாரே. (௰௭)

இதுவுமது

௧௮௫ பாரப்பா சோதியுடன் அஷ்டமியும்விருட்சிகம்
பகர்கின்றஸ்தம்பனமேயாகும்பாரு
நேரப்பாசித்திரையு மதிரையோகிதேசி
நினைவானதனுசதுவும் வித்தவேஷணமுமாகும்
ஆரப்பாவிசாகமுடன் சதுர்த்திதானும்
அழகானமாரணமே பேதனமும்பாரு
கூரப்பாஅனுடமே நவமிகும்பம்
குடிகெடுத்த உட்சாடணம் ஆகும்பாரே. (௰அ)

இதுவுமது

௧௮௬ ஆகுமேகேட்டையுடன் சதுர்த்தேசிமீனம்
அழித்துவிடும்மாரணமுமாகும்பாரு
ஏகுமேமூலமுடன் பஞ்சமிரிஷபமேஷம்
என்னசொல்வேன் வசியமடாஎதரிதோர்வை
போகுமேபூராடம்தசமியோடு
புகழ்பெரிய இடபமுமே ஆகிருஷ்ணம்ஆகும்
வேகுமேஉத்திராடம் அமாவாசி
விதனமுள்ளமிதுனமே மோகனமும்செய்யும் (௰௧)

இதுவுமது

௧௮௭. செய்யுமடா திருவோணம் பிரதமையும்சேர்ந்தால்
சேர்க்கையுள்ளகற்கடகம் ஸ்தம்பனமுமாகும்
மையுமடா அட்டமுடன் சஷ்டியோடும்
பினதுறுதியானசிங்கம் வித்வேஷணமும்செய்யும்
கொய்யுமடாஉத்திரட்டாதி ஏகாதேசி
குலாவியதோர்கன்னியுடன் பேதனமுமாகும்
நொய்யுமடாசதையமுடன் பேதனமாகும்
ரேஷம்உள்ளதுலாமதுரம்எட்சாடணமேபாரே (௨௰)

புதவாரம்திதிநட்சேத்திரம்இராசிபலாபலன்

௧௮௮ பாரப்பாபூரட்டாதிசத்தமியும்சேர்ந்தால்
பரிவானவிருசிகம்மாரணமாகும்
ஆரப்பாவதியும்துவாதேசிதநுசு
அப்பனேவசியமடா அன்பாய்ச்சொன்னேன்
எரப்பாயிதனுடனே பசுபதியும்திரிகையும்
ஏன்மகனேமகரம் ஆகிருஷ்ணம்ஆகும்

சாரப்பாபரணியுட அஷ்டமியும்நவமி
சார்வானகும்பமுமேமோகனமுமே. (உக)

௧௮௯ மோகமுள்ளகார்த்திகையும்திரையோதேசி
முன்யானமீனமுடன்ஸ்தம்பனமுமாகும்
தாகமுள்ளரோகணியும்சதுர்த்திமேடம்
தப்பாமல் வித்வேஷணமும்செய்யும்பாரு
ஆகமுள்ளமிருகசீரிடம்நவமியோடும்
அன்பானயிட பமேபேதனமாகும்
வாசம்உள்ள திருவாதிரையும் சதுர்த்தேசிமிதுனம்
வழிவானஉட்சாடணம் ஆகும்பாரே (உஉ)

இதுவுமது

௧௯௦-ஆகுமேபுனர்பூசம்பஞ்சமியும்சேர்ந்தால்
அப்பனேகற்கடகம்மாரணம்ஆகும்
ஏகுமேபூசமுடன்தசமியோடு
என்னசொல்வேன்சிங்கமடாவசியம் ஆகும்
சாகுமேஆயிலியம் அம்மாவாசி
வன்மையுள்ளகன்னியுமே ஆகிருஷ்ணமாகும்
போகுமேமகமுடனேபிரதமையும்நல்ல
புகழ்பெரியதுலாத்துக்குமோகனம்பாரே. (உ௩)

இதுவுமது.

௨௯௧-பாரேதான்பூரமுடன்சஷ்டிகூட்டி
பரிவானவிரிசிகமுடனஸ்தம்பனமாகும்
காரேநீஉத்திரம் ஏகாதேசி
கலந்ததொருதனுசதுவும்வித்வேஷணமாகும்
தேரேநீஅஸ்தமுடன் துதிகைதானும்
திறமானமகரமேபேதனம்பாரு
கோரேநீசோதியென்றசத்தமியுங்கூட்டி
கும்பமுடனே உட்சாணம் ஆகும்பாரே (உச)

இதுவுமது

௧௯௨-ஆகுமப்பாசித்திரை துவாதேசிமீனம்
அதுநடத்தும்மரணந்தான் ஆகும்பாரு
போகாதப்பாவிசாகமுடன்திரிகைதானும்
புகழ்பெரியமேடமேவசியமாகும்

வாகுமப்பாஅனுடமுடன் அஷ்டமியுங்கூடில்
வலியானஇடபமே ஆகிருஷ்ணம்ஆகும்
ஏகுமப்பாகேட்டையுமே திரையோதேசி
ஏன்சொல்வேன்மிதுனமாமோகனமுமாமே, (உ௫)

இதுவுமது

௧௬௬ ஆமென்றமூலமுடன் சதுர்த்தியோடு
அப்பனேகற்கடக ஸ்தம்பனமும்ஆகும்
வேமென்றபூராடம் நவமிஅப்பா
மேதினியில்சிங்கமுமே வித்வேஷணமும்ஆகும்
காமென்றஉத்திராடம் சதுர்த்தசிகன்னி
கனிவானபேதமே செய்யும்பாரு
நாமென்றதிருவோணம்பஞ்சமியுங்கூடில்
நலமானதுலாம்அதுவும் உச்சாடானமும்ஆமே. (உ௬)

இதுவுமது

௧௬௪ ஆமென்றஅவிட்டமுடன் தசமிகூடில்
அழகானவிருட்சிகமும் அங்கேமாரமுமாகும்
போமென்றஉத்திரட்டாதி அமாவாசைதனுசு
புகழ்பெரியவசியமப்பா என்னசொல்வேன்
தேமென்றசதயமும் பிரதமையும்மகரம்
செம்மையுள்ளஆகிருஷ்ணம் செய்துபாரு
நாமென்றபூரட்டாதி சஷ்டிகூட்டி
நலமானகும்பமே மோகனமுமாமே. (உ௭)

குருவாரம்திதிநட்சத்திரம் இராசிபலன்,

௧௬௪ மோகனந்தான்ரேவதியும் ஏகாதசி
உண்மையுள்ளமீனம்அப்பா ஸ்தம்பனமும்ஆகும்
வாகனந்தான்வியாழன் அங்கேஅசுபதியுந்துதிகை
மக்களேமேஷம்அப்பா வித்வேஷணமுமாகும்
கோகனமேபரணியுடன் சப்தமியும்சேர்ந்தால்
குலாவியதோர்இடபமுமே பேதனமுமாகும்
சோகந்தான்கார்த்திகையும் துவாதசிமிதுனம்
சொன்னேனடாஉச்சாடனமே செய்யும்பாரே. (உ௮)

இதுவுமது

௧௬௫ செய்யுமேரோகணியும் திரிதிகையுங்கூடில்
திடமானகற்கடகம் மாரமுமாகும்

கையுமேமிருகசீரிடம் அஷ்டமியுஞ்சேர்ந்தால்
நளினமுள்ளசிங்கம் அங்கேவசியம்ஆகும்
கொய்யுமேதிருவாதிரைத் திரையோதசி
குணமானகன்னியுடன் ஆகிருஷ்ணம்ஆகும்பாரு
வையுமேபுனர்பூசம்சதுர்த்திதுலாமொன்று
வணங்குமடாமோகந்தான் மார்க்கம்பாரே. (உகூ)

இதுவுமது

ஙகூஎ மார்க்கமுள்ளபூசமுடன்நவமிசோலே
மக்களேஸ்தம்பனமும் மகிழ்ந்துகாணும்
ஏற்கையுள்ளஆயிலியம் சதுர்த்தசிதனுசு
என்மகனேவித்வேஷணமுமாகும்
சேர்க்கையுள்ளமகமுடனே பஞ்சமியுஞ்சேர்ந்தால்
திடமானமகரமுமே பேதனமேசெய்யும்
ஆர்க்கையுள்ளபூரமுடன் தசமியோடு
அப்பனேகும்பமும்உச்சாடனமும்ஆமே, (ஙமி)

இதுவுமது.

ஙகூஅ ஆமப்பாஉத்திரமும் அமாவாசை
அப்பனேமீனமுமே மாரணமும்ஆகும்
நாமப்பாஅஸ்தமுடன் பிரதமையுஞ்சேர்ந்தால்
நலமானமேஷமுமே வசியம்ஆகும்
காமப்பாசோதியென்ற சஷ்டிகாலே
களைக்கும்ஆகிருஷ்ணம் கண்டுபாரு
போமப்பாசித்திரையும் ஏகாதசி
புனிதமுடன்மிதுனமே மோகனமாம்பாரே. (ஙக)

இதுவுமது.

ஙகூகூ பாரென்றவிசாகமுடன் துதிகைதானும்
பார்மகனேகற்கடகம் தம்பனமும்ஆகும்
சீரென்றஅனுடமடா சத்தமியுங்கூட்டி
சிறப்பானசிங்கமுமே வித்வேஷணங்கள்செய்யும்
காரென்றகேட்டையடா துவாதேசிகன்னி
கனமானபேதனமே யாகும்பாரு
வாரென்றமூலமுடன் திருதிகைதுலாந்தான்
மக்களேஉச்சாடனமாம் மகிழ்ந்து பாரே. (ஙஉ)

இதுவுமது

௪௱ மகிழ்ந்துபார்பூராடம் அஷ்டமியுங்கேளும்
மனதுபோல்மாரணமும் ஆகும்பாரு
நெகிழ்ந்துபார்உத்திராடம் திரையோதேசி
நேரானதனுசதுவும் வசியமதுவாகும்
இருந்துபார்திருவோணம் சதுர்த்திசேர்ந்தால்
என்மகனேமகரமுமே ஆகிருஷ்ணம்ஆகும்
மகிழ்ந்துபார்அவிட்டமுடன் நவமிகும்பம்
தனதானமோகனமாம் தானேபாரே. (௯௪)

இதுவுமது

௪௱௧ தானென்றஉத்திரட்டாதி சதுர்த்தேசிமீனம்
தப்பாமல்ஸ்தம்பனமே செய்யும்பாரு
மானென்றசதயமுடன் பஞ்சமியும்மேஷம்
மணம்போலவிதவே ஷணமேசெய்யும்
நாளென்றபூறட்டாதிதசமிநானே
நலமானபேதனமே ஆகும்பாரு
தேனென்றரேவதியும் அமாவாசை
சிரந்தொருமிதுனமுமேஉச்சாடனமுமாமே. (௯௫)
சுக்கிரவாரம்திநட்சத்திரம் இராசிபலாபலன்
௪௱௨ மானென்றவெள்ளியுடன் அசுபதியுங்கூடில்
மக்களேபிரதமையும்கண்டுமாரணமாம்
தேனென்றபரணியுடன் சஷ்டிசேர்ந்தால்
திடமானசிங்கமது வசியமாகும்
வேனென்றகார்த்திகையும் ஏகாதேசி
விதமாகன்னியுமே ஆகிருஷ்ணமாகும்
கோனென்றரேவதியும்துதிகைதானும்
கொண்டுதுலாம்மோகனமேசெய்யும்பாரே. (௯௬)

இதுவுமது

௪௱௩ செய்யுமடாசிரிடமும் சத்தமியுங்கூட்டி
ஜெயமானதேளதுவும்தம்பனமுமாகும்
ஐயுமடாதிருவாதிரையும் துவாதசிதனுசு
அப்பனேவிதவேஷணம் செய்யும்பாரு
நய்யுமடாபுனர்பூசம் திரிதிகையுங்கூட்டி
நயமானமகரமேவ பேதனவசெய்யும்

கொய்யுமடாபூசமுடன் அஷ்டமியுங்கும்பம்
குலாவியஉட்சாடனமும் குறித்துச்செய்யே, (சுஎ)

இதுவுமது

சாசஅ குறித்துநீசெய்துபார் ஆயிலியம்ஏகாதேசி
குணமானமீனமுமே மாரணமுமாகும்
மறித்துப்பார்மகமுடனே சதுர்த்திமேடம்
மன்னரெல்லாம்மனமகிழ்ந்து கேளும்வசியம்
செறித்துப்பார்பூசமும் நம்மிகாலே
க்ஷணத்திலேஆகிருஷ்ணம் செய்வார்பாரு
விறித்துப்பார்உத்திரமும் சதுர்த்தேசியோடும்
மிதுனமெல்லாம்மோகனமே ஆகும்பாரே, (சுஅ)

இதுவுமது

சாகு ஆகுமேஅஸ்தமுடன் பஞ்சமிகர்க்கடகம்
அன்பானதம்பனமே அழகாய்ச்செய்யும்
ஏகுமேதிசோதியுடன் தசமிசிங்கம்
என்னசொல்வேன் வித்வேஷணந்தான் எதிரிஇல்லை
தேசமேசித்திரையும் அமாவாசியோடு
ஜெயமானகன்னியுமே பேதனமுமாகும்
போகுமேவிசாகமுடன் பிரதமையுந்துலாமும்
பெரிதானஉட்சாடனமாய்ப்பேசும்பாரே, (சுகூ)

இதுவுமது

சாகூ பேசுமடாஅனுடமுடன் சஷ்டிகேளும்
பேதகமாம்மாரணந்தான்செய்யும்பாரு
வீசுமடாகேட்டையுந்தான் யேகாதேசி
விதமானதனுசதுவும் வசியமாகும்
ஏகமடாமூலமுடன் துதிகைதானும்
என்னசொல்வேன்மரகமுமே ஆகிருஷ்ணமேசெய்யும்
வீசுமடாபூராடம்சத்தமியுங்கும்பம்
ஓடிவரும்மோகனந்தான் உனக்குத்தானே. (எய)

இதுவுமது.

சாஎ தானேதான்உத்திராடம்துவாதேசிமீனம்
தண்மையுள்ளதம்பனமேசரிநின்றோடும்
கோனேதான்திருவோணந் திரிதிகையுங்கூட்டில்
குணமானமேடமங்கே வித்வேஷணமுஞ்செய்யும்

தேனேதான்சதயமுடன்திரையோதேசி
செனித்ததொருமிதுனமங்கேஉட்சாடனமுமங்கே
மானேகேள்ரோமனுடவாக்கியந்தன்னை
மகிழ்ந்துபார்மனங்கொண்டு அஷ்டகன்மமாமே. (௬0)

சனிவாரம்திதிநக்ஷத்திர இராசிபலாபலன்,

௬௧ மாமென்றபூரட்டாதி சதுர்த்திகற்கடகம்
மன்னவனேமாரணந்தான் மனம்போல்செய்யும்
தேனென்றஉத்திரட்டாதி நவமிசிங்கம்
தெளிவாகுவசியமடா செம்மையாகும்
வானென்றரேவதியும் சதுர்த்தேசிகன்னி
வகையானஆகிருஷ்ணம் வலியுண்டாகும்
ஏனென்றசனியுடனே அசுபதிபஞ்சமியும்
என்மகனேதுலாமிதுவும் மோகனமுமாமே, (௬௧)

இதுவுமது

௬௨ ஆமப்பாபரணியுடன் தசமிகூடில்
அப்பனேவிருட்சிகமும்ஸ்தம்பனமுமாகும்
நாமப்பாகார்த்திகையும் அமாவாசை
நலமானதனுசுடனே வித்வேஷணமுமாகும்
ஓமப்பாரோகணியும் பிரதமையும்மகரம்
உத்தமனேபேதனமாய் முடியும்பாரு
காமப்பாமிருகசீரிடம்சஷ்டிகும்பம்
கனிவானஉட்சாடனமாய்க் காணும்பாரே, (௬௨)

இதுவுமது

௬௩ காணுமேதிருவாதிரை யேகாதேசி
கனிவானமீனமுமே மாரணமுமாகும்
வேணுமேபுனர்பூசம் துதிகைதானும்
மேலானமேஷமுடன் வசியமாகும்
தோணுமேபூசமுடன் சத்தமியும்இடபம்
கொடுத்திடும்பார் ஆகிருஷ்ணம்சொல்லப்போகா
நாணுமேஆயிலியம் துவாதேசிமிதுனம்
நலமானமோகனமேநயந்துகாணே. (௬௩)

இதுவுமது

௬௪ நயந்துபார்மகமுடனே திரிதிகையும்சேர்ந்தால்
நலமானகடகம் ஸ்தம்பனமுமாகும்

[illegible]பார்பூரணமே அஷ்டமியும்சிங்கம்
பரிவானமேஷணந்தான் பதிவாய்க்காணும்
கயந்துபார்உத்திரமுந்திரையோதேசி
கன்னியுடன்பேதமுங் கலந்துகாணும்
சயந்துபாரஸ்தமுடன் சதுர்த்திதுலாமும்
சாற்றிணேம்உம்சாடனமாம்சாய்ந்துபாரே. (சசு)

இதுவுமது

சகஉ சாருமடாநவமியுடன்சோதிசோலை
சண்டாளமாரணமாம்சார்ந்துபாரு
எருமடாசித்திரையும் சதுர்த்தேசிதனுசு
என்னசொல்வேன்வசியமடா இசைந்துகாணும்
ஆருமடாவிசாகமுடன்பஞ்சமியுந்தனுசு
அப்பனேஆகிருஷ்ணம் அழகாய்ச்செய்யும்
தேருமடாஅனுஷ்மது தசமிகும்பம்
செய்யுமப்பாமோகனமுந்திரமாய்ப்பாரே, (சரு)

இதுவுமது

சகங திரமானகேட்டையுடன் அமாவாசை
சிறந்தொருமீனமங்கே ஸ்தம்பனமுமாகும்
பரமானமூலமது பிரதமையும்மேட
பழியானவித்வேஷணங்கள்பதியாய்க்காணும்
சரமானபூராடம்சஷ்டிநாளோ
தப்பாமல்பேதனமே தனிவாய்க்காணும்
உரமானஉத்திராடம்ஏகாதேசி
உத்தமனேமிதுனமது உட்சாடனமுங்காணே. (சஅ)

இதுவுமது

சகச காணப்பாதிருவோணந்திதிகைதானும்
கனிவானகற்கடகம் மாரணமுமாகும்
பூணப்பாஅவிட்டமுடன் சத்தமியுஞ்சேர்ந்தால்
புண்ணியனேசிங்கமது வசியமாகும்
தோணப்பாஉத்திரட்டாதிதுவாதேசிதன்னி
சொல்லலொண்ணுஆகிருஷ்ணம்துடியாய்ச்செய்யும்
வேணப்பாசதயமுடன் திரிதிகையுந்துலாமும்
வேணபடிமோகனமாம்விரும்பிச்செய்யே (சஎ)

சோலைஎன்பது-விருட்சிகம்,

இதுவுமது

சகரு விரும்பியேபூரட்டாதி அஷ்டமியுந்தேளும்
மேலானஸ்தம்பனமாம்வேணபடியாகும்
கரும்பியேரேவதியுந்திரையோதேசி
கனிவானதனுசதுவும்வித்வேஷணமாகும்
அரும்பியேயிந்தநாள் ஆகவேணும்
அப்பனேநட்சத்திரம்திதிராசிவேளைக்கண்டு
துரும்பியேஎவ்வகையும்பார்க்கும்போது
தொடுத்திடுவாய்இதின்னென்றுங்குறையாமற்றனே. (சரு)

இதுவுமது

சகசு குறையாமல்செய்ததிஞல்பலிதமாகும்
குணங்குறிகள்பார்ப்பதற்குஇதுவேவேணும்
பசையாமல்போனதிஞல்பலிக்குமுன்னே
பஞ்சாங்கபலதிரட்டை அநுசரித்துக்கொள்ளும்
மறையாமல்சொல்லிவைத்தேன்சாஸ்திரத்திலுள்ள
வகையெல்லாமாறுபத்து பக்ஷியாய்ச்செய்தால்
நிறையாமல்அவ்வளவும்தப்பேயில்லை
நிஜமடாபஞ்சபக்ஷிவித்தைதானே. (சசு)

இதுவுமது

சசுஎ பக்ஷிவித்தைஒருபோதும்பழுதேயில்லை
பாராமல்போனதிஞல்பழுதேயாகும்
கொச்சிவித்தைபலிப்பதுதான் ஏனாலே
குறிகுணங்கள்நேரமங்கேகுறைவிதாலே
வச்சிவித்தைதருக்குருவும்கண்டபேர்க்கு
வணங்குமடாபட்சிவித்தைமயக்கமில்லை
நச்சிவித்தையிதுக்குநிகர்ஒன்றுமில்லை
நாட்டிலேயித்தொழிலைச்சொல்லொண்ணாதே. (ரும)

அஷ்டகன்மப்படலம் முற்றிற்று.



# பீடைநிவாரணப்படலம்

ஊண்பட்சியில்பீடைவருங்கால்நிவாரணம்

சசஅ பாரடாபுலிநிலுள்ளமாங்குர்க்கைபா

சாரடாமாறயிலேபீடைபற்றி
தள்ளுவதுபோல்சறுக்கும்தவித்துநோகும்
தேரடாபஞ்சபட்சிதொழிலைக்கண்டு
ஜெகமதிலேநிலை அளவுங்கண்டு
ஏரடாகொடுத்ததொருகன்மபீடை
என்மகனே துடராமல்நீக்கலாமே. (௧)

இதுவுமது

௪௧௯ ஊமென்றுபட்சியிலேவரும்பீநீக்க
உத்தமனேகணபதியைவைத்துக்கொண்டு
வேனென்றவெள்ளைபுஷ்பம்சாத்திக்கொண்டு
விநாயகர்முன்உபசாரம்செய்துபோற்றி
தேனென்றமந்திரந்தான்சொல்லக்கேளு
தினமானஅக்ஷரந்தான்ஓம்ஸ்ரீ யுங் அங்உங்கென்று
தானென்றயெழுத்துடனேஐயுங்கிலியுங்கணபதிசர்வசாபம்
நசிமசி என்றுசாற்றுவாய்ஆயிரத்தெட்டுருவமாமே. (௨)

இதுவுமது

௪௨௰ உருவான அதின்பின்புகும்பம்வைத்து
ஒருபடிநெல்தான்பரப்பிஆறுகோணமிட்டு
திருவானகரணபஞ்சாக்ஷரத்தைவைத்து
ஜெயமாகவேணுமென்றுகாரியபஞ்சாக்ஷரமுவைத்து
வருவானசக்கரத்தில்சூலமிட்டு
மைந்தனேஅதில்நடுவில்ஓங்-அங் சிவசிவாயென்றுபோடு
தருவானகும்பத்தில்சலத்தைவைத்து
வண்மையுள்ளமாங்குழையையதின்மேல்வையே. (௩)

இதுவுமது

௪௨௧ வைத்தபின்புஅதின்மேலேதேங்காவைத்து
வாகாகநூல்சுற்றிஆடைசாற்றி
கைத்ததொருகும்பத்தின்முன்னேஅப்பா
கலந்துவைப்பாய்வமுதுடனேசுத்திதானும்
நெய்த்ததொருவர்க்கவகைஉபசாரஞ்செய்து
நேமகமாய்இருதோருஓம்ஐயுங்கிலியும்சவ்வும்ஈறுண்
வைத்தபின்புஇன்னமடாஅங்உங்கென்று
சாற்றுவாய்பீடையெல்லாம்மசிநசியென்றோதே (௪)

இதுவுமது.

சஉஉ ஓதடா ஆயிரத்தெட்டுருவுமானால்
உத்தமனே ஓமகுண்டம்ரெண்டும்போடு
வாதடா சமுத்துவகைசொல்லக்கேளு
வன்னிமுன்னே அரசுருவிகொப்பைநெற்பொரியும்
ஏதடா ஆவின்நெய்யால் ஆகுதிகள்செய்து
என்மகனே குண்டத்துக்குபசாரம்பண்ணி [று
கோதடா அக்ஷரத்தைசொல்லக்கேளு துணமாகவேணுமென்
ஓம் ஸ்திரீயும்அங்-உங் சருவ-பீடை-நசி-நசி-என்றுமே.

இதுவுமது.

சஉங ஓதியபின்உரு அங்கேஐயாயிரமானால்
உத்தமனேபொங்கல்பெலிநைவேத்தியஞ்செய்து
கோதியெடுசாம்பலெல்லாங்கும்பத்திற்போட்டு
குடத்துநீர் அவர்சிரசில்விடும்போதப்பா
ஆதிசிவனைநினைத்து ஓம்சிவாசிவாஎன்று
அப்பனே அபிஷேகம்செய்துபாரு
நீதியால்நாளதுதான்பதினொன்றானால்
நிலைக்குமோபீடையெல்லாம்விலகும்பாரே. (சு)

இதுவுமது.

சஉச விலகுமேமதியென்றதகடுசெய்து
மேலானஉச்சாடனஅக்ஷரத்தைவைத்து
கலகுமேதேவியென்றவாலைபூசை
கைப்பாகந்தப்பாமல்வைத்துக்கொண்டு
நீங்குமே அதின்முன்புதகடுவைத்து
நீஓதுஉச்சாடணம்ஆயிரத்தெட்டானால்
விலகுமேபீடையென்றதோஷமெல்லாம்போச்சு
நில்லாதுகன்னிக்கிஉபசாரஞ்செய்யே. (எ)

நடைப்பக்ஷியில் பீடைவந்தால்விலக்க.

சஉரு செய்துபார்நடைதனிலேபீடைவந்தால்
தீர்ப்பதற்குவிநாயகனைவைத்துக்கொண்டு
கொய்துபார்கும்பம்வைத்துகும்பம்ரெண்டு
கூறுவேன்சமித்துவகைசொல்லக்கேளு
நைதுபார்அரசுவன்னிஉருவிதெர்ப்பை
நல்லவிழாமரசுப்பிகருங்காலிநாளும்

நொய்துபாற்நெற்பொரியுங்கடலைமொச்சை
நோரகக்கரந்துகொண்டுகும்பம்போடே. (அ)

இதுவுமது.

சஉசு போடவேஆவிநெய்யும்இலுப்பைநெய்யும்
புண்ணியனேஇரண்டுமொன்ருய்கலந்துகொண்டு
நாடவேயெக்கியத்தில் ஆகுதிகள்செய்து
நல்லதொருஅக்ஷரத்தைசொல்லக்கேளு [று
தேடவேஓம்-ரீயும்-அவ்வும்கிலியும்-அங்-உங்-பீடைநசி-நசிஎன்
செலுத்துவாய்உருவையங்கேபதிணுயிரமேதானும்
வாடவேவேண்டாங்காண்பொங்கல்பெலியுடனே
மைந்தனேசோடசஉபசாரஞ்செய்யே. (கூ)

இதுவுமது.

சஉஎ செய்துகொண்டுகும்பத்துசாம்பல்எல்லாம்
திரணமதுபோகாமல்கும்பத்தில்போடு
ஐதுகொண்டுஆதியென்றசிவனைப்போற்றி
அப்பனேசிவசிவா என்றுபூசி
கொய்துகொண்டுவாலையுடதியானஞ்செய்தால்
குமரியவள்முன்புவந்துநிற்பாள்அப்போ
வைதுகொண்டுபோகுமடாநடையின்பீடை
மக்களேநாள்பதினொன்றுசெய்துபாரே. (ய)

அரசுபட்சியில்பீடைவந்தால்.

சஉஅ செய்வாயேஅரசுதனில்பீடைவந்தால்
திடமானகணபதியைவைத்துப்போற்றி
நெய்வாயேகும்பம்குடம்முன்னேவைத்து
நேமகமாய்வாலையுடபூசைசெய்து
கொய்வாயேகும்பமதுரெண்டுபோடு
கொழுந்துகிறசமுத்திணுடவிபரங்கேளு
மையாவேஅரசுசந்தனமும்ஆகும்
மக்களேநெல்கொண்டுஓமஞ்செய்யே. (கக)

இதுவுமது.

சஉகூ செய்யவேநேமகமாய்உருவமங்கேதான்
திரமாகஐயாயிரம்செய்துபாரு
கொய்யாயுதபெலியுடனேதீபங்காட்டி
தோணவேசாம்பலெல்லாம்குடத்திற்போடு

கையாலேகுடமெடுக்கும்போதெல்லாந்தான்
கருணையுடன்சிவனைநின்கருத்தில்வைக்க
மெய்யாகவினைதெரிந்துப்போகும்பாரு
மேலானசேதனத்தால்தகடுபோடே. (கஉ)

இதுவுமது.

சஉ0 தகடதிலேயெழுத்தைவரைந்துகொண்டு
தப்பாமல்நாளேழுபூசைசெய்து
விகடதிலேயில்லாமல்போகும்போது
மேலானபீடையெல்லாம்விலகிப்போகும்
சகடதிலேகிருபைமெத்தசிவன்தானுண்டு
தரணிதனில்கண்டவர்கள்வணங்கிப்பூசி
அகடதிலேஉலகுதனில்வாழ்வார்பாரு
அப்பனேபீடையதுவிலகும்பாரே. (கங)

உரக்கப்பகூதியில்பீடைவந்தால்விலக்க.

சஙக பாரடாஉறக்கத்தில்வரும்பீடைதன்னை
பதியைவிட்டுவிலகுதற்குபண்புகேளு
நேரடாகணபதியைவைத்துக்கொண்டு
நேமகமாய்வாலையுடகும்பம்வைத்து
ஓதடாஓமகுண்டம்நாலுபோடு
உத்தமனேசமித்துவகைசொல்லக்கேளு
கோரடாஆலரசுஅத்திஇத்தி
குலாவியதோர்வன்னிமுன்னைஉருவியெள்ளே. (கச)

இதுவுமது.

சஙஉ எள்ளுடனேநவதானியம்நெற்பொரியும்சேர்த்து
என்மகனேஆவிநெய்யும்இலுப்பைநெய்யும்
தெள்ளுடனேதேங்காய்நெய்கலந்துகொண்டு
தெர்ப்பையினால்சொரிந்துவிடுஉருவேறமட்டும்
அள்ளுடனேஓம்ரீயும்-கிலியும்-ஐயும்-சவ்வும்என்று
அப்பனே-ஸ்ரீம்-ரீயும்-நசி-நசிஎன்று
தள்ளடாதுற்புத்திஒருநினைவாய்க்கொண்டு
சரியாகபதினாயிரம்உருவைப்போடே. (கரு)

இதுவுமது.

சஙங போடடாகும்பமொன்றில்ஸ்தம்பனமேபோடு
புகழானபேதனமும்போட்டுதீரும்

கேளடாதேஷணமும்ஆகும்பாரு
கெடியானமோகனமும்கெட்டியாய்ச்செய்து
நாளடாபெலியுடனேதூபதீபங்காட்டி
நலமாகவேணுமென்றுசாம்பல்வாரி
கோடடாகுடந்தனிலேகலந்துகொண்டு
குமுறவிடுசிவனைநினைந்தபிஷேகஞ்செய்யே. (௧௬)

இதுவுமது.

௪௩௪ செய்தபின்புரவிம்தியுஞ்சேர்த்துக்கொண்டு
திரமாகக்கண்டித்துஉட்சாடணமேசெய்ய
நொய்துகொண்டபிணியாளன்மேலேபோடு
ஓடிவிடும்பீடையென்றதோஷந்தானும்
பொய்துகொண்டகன்னிக்குஉபசாரஞ்செய்து
சொற்பெரியசிவனுக்குஅபிஷேகம்பண்ணி
வைத்துக்கொண்டுபோகுமடாபீடையென்றதோஷம்
மக்களேமாண்டவர்தான்அறையஞ்செய்யே. (௧௭)

மரணபக்ஷியில் பீடைவந்தால்விலக்க.

௪௩௫ செய்ப்பாமரணத்தில்பீடைவருமாகில்
திரும்புவதுவெகுவருத்தம்சிவன்செயலும்வேணும்
தொய்யப்பாகணபதியைவைத்துக்கொண்டு
தொடுத்திடுவாய்வாலையிடகும்பம்வைத்து
நொய்யப்பாஓமகுண்டம்எட்டுப்போடு
நோக்குகிறசவத்துறைசொல்லக்கேளு
தையப்பாஅரசுவன்னிநாயுருவிஅத்தி
தனதானகருங்காலிஆலின்கொம்பே. (௧௮)

இதுவுமது

௪௩௬ கொம்புடனேமரசுப்பிஅருகுவோடு
கோர்வையாய்நவதானியம்நெற்பொரியுங்கூட்டி
அன்புடனேமேதநெய்யும்செம்மறியின்நெய்யும்
அப்பனேஇலுப்பைநெய்யும்தேங்காநெய்யும்
தென்புடனேபுங்கெண்ணெய்புன்னையெண்ணெய்
தெளிவானவேப்பெண்ணெய்பன்றிநெய்யும்
விம்புடனேகேசரியின்நெய்யுங்கூட்டி
விரவியேஎக்கியத்தில்விடுவாய்பாரே. (௧௯)

சஙஎ-பாரேநீகும்பமெட்டில்அஷ்டகன்மமெட்டும்
பாங்காகசெபம்செய்துஉருபதினாயிரமேயானால்
வேறேநீநினையாதபொங்கல்பெலிதூபம்
வேணபடிசெய்துகொண்டுசாம்பல்குடத்திற்போடு
நேரேநீநின்றுகொண்டுசிவனைப்போட்டு
நீர்விடுவாய்அவன்சிரசில்அபிஷேகஞ்செய்தால்
தூரேநீஇவ்வகைதான்மண்டலந்தான்ஒன்று
தொடுத்துவிடுபீடையதுவிலகும்பாரே (உ௰)

இதுவுமது.

சஙஅ-விலகுமேஎவ்விதத்தால்வந்தபீடை
மேலானபிரபுவுக்குவந்ததோஷமெல்லாம்
அசங்குமேசெய்துகொண்டால்பீடையில்லை
அப்பனேதள்ளிவிடும்சுகமாகவாழ்வார்
இலகுமேஎன்னசெய்யப்போகுதென்று
எளிதாகநினைத்துக்கொண்டால்பீடைகொல்லும்
அலகுமேபிரமலபிஉள்ளமட்டும்
அலைச்சல்மிகும்பீடைகுணம்தோணும்பாரே. (உக)

பீடைநிவாரணப்படலம் முற்றிற்று.



## அக்ஷரமாறல்படலம்.

---*---

சஙகூ-தோணுமேஉலகிலுள்ள அட்சரத்துக்கெல்லாம்
தோணுதபஞ்சபட்சிசூட்சந்தானும்
காணுமேகருக்குருவும்காணுதுபாரு
கடினமடாஆசானும்காட்டவேணும்
பேணுமேமனதுருத்தியாகவேணும்
பிசகினல்பட்சிவித்தைபிசகிப்போகும்
ஆணுமேஅட்சரங்கள்அறியவேணும்
அறிவதுதான்வெகுநினைவாய்செலுத்துவாயே. (க)

அட்சரமாறலறிய.

சசO-செலுத்துவாய்பூருவத்தின்பகலுக்கப்பா
திடமான ஆகிருஷ்ணம்வசியம்ரெண்டும்
வழுத்துவாய்பூருவத்தின் இராவுதன்னில்
வளமானமோகனமும்தம்பனமுமாகும்
பழுத்துவாய் அமரத்தின்பகலுக்கப்பா
பகையானஉச்சாடனமும்வித்வேஷணமுமாகும்
கொழுத்துவாய் அமரத்தின் இராவுதன்னில்
குடிகெடுத்தமாரணமும்பேதனமுமாமே. (உ)

இதுவுமது.

சசக-ஆகுமேபுருவத்தின்பகலுக்கப்பா
அதுசரிநீகடைநிலையைபிடித்துமாறு
ஏகுமேபூருவத்தின்னிரவுதன்னில்
பொல்லாதநாலெழுத்தின்மாறலைநீஓது
ஏகுமேஅமரத்தின்பகலுக்கையா
என்னசொல்வேன்கொண்டெழுத்துமாறலிலேநில்லு
வேகுமேஅமரத்தின்னிரவுதன்னில்
வெட்டவெளியாக்கிவிடும்நடுத்தலையைமாறே. (ஙு)

திக்குகளின் அஷ்டகன்மம் அறிக.

சசஉ-மாரிவிடுபேதனமும்மாரணமும்தெற்கு
வகையானவித்வேஷணமும்மோகனமும்வடக்கு
கோறியிடும்தம்பனமும்மோகனமும்வடக்கு
குலாவுகின்றவசியமும்ஆகிருஷ்ணமும்கிழக்கு
வாரிவிடும்தொழிலையங்கேதனித்திருந்துபாரு
வணங்குவார்உலகத்தோர்மனதறிந்துசொல்லு
நீரிவிடும்பாவத்துக்காளாகாதே
நிமிஷத்தில்எதிரிவுடல்நீரிப்போமே. (ச)

இதுவுமது.

சசங-போகுமேஅஷ்டகன்மம்இதற்கீடல்ல
பொல்லாங்குகருத்தொழிலும்இதற்கீடல்ல
ஆகுமேசல்லியங்கள்ஒட்டியங்கள்
அணுகாதுதொட்டியத்தில்அவர்க்கெல்லாந்தான்
சாகுமேமந்திரம்கெணங்கள்பூதம்
சண்டாளபிசாசுமுதல்ஐயன்துற்கை

வேகுமேபட்சிவித்தை கண்டபோதே
மேலானவித்தையென்றுமெச்சினரே. (ரு)

இதுவுமது.

சசச மெச்சினர்பதினெண்பேர் சித்தரெல்லாம்
வெகுகோடிரிஷிகளெல்லாம் மெச்சினர்கள்
கொச்சினர்உலகத்தில் அனந்தங்கோடி
கூர்மையுள்ளமனமுள்ளோர் காணவேணும்
பட்சியென்றதொழிலேத்தான் பார்த்தபேர்க்கு
பகையில்லையொருநாளும் பகைத்தோரில்லை
லட்சியென்றஆயுதம் மனதடக்கஞ்செய்தால்
மற்றவித்தைநிமிஷத்தில் வரும்பார்நவிலுவேனே. (சு)

பிரமன்பிருதுவின்வீட்டின் அக்ஷரம்.

சசரு நவிலுவேன் உருவையிங்கேவகுத்துக்கொண்டு
நாட்டடாபிரிதியில்நாற்கோணவீடு
நவிலுவேன்நான்முகன்றன் பீசம்வைத்து
தப்பாமல்அங்கென்றும்நங்கென்றுந்தான்
நவிலுவேன்ரெண்டெழுத்துகோசம்பீசம்
வைத்துமேரெண்டெழுத்து கொண்டுவோது
அவிலுவேன்கருவையங்கேதொட்டுக்கொண்டு
அப்பனேவோதிப்பார்பலிக்கும்பாரே. (எ)

மால்அப்புவீட்டின்அட்சரம்.

சசசு-பலிக்குமடா அப்பினிடவீடுமக்காள்
பாரானபிறைபோலேமாதினிடவீடு
கெலிக்குமடாமாலினிடபீசம்வைத்து
கேள்மகனே இங்கென்றும் அங்கென்றுந்தான்
நலிக்குமடா அதினுடையகோசபீசம்
நாட்டியேகருத்தொட்டுநேரம்பார்த்து
வலிக்குமடா ஓர்மனதுகொண்டுஓத
வாரிவிடும்மெய்தொழிலின்வரிசைபாரே (அ)

ருத்திரன்தேயுவினுடையவீட்டின் அட்சரம்.

சசள-வரிசையாய்தேயுவினிடவீடுமக்காள்
வளமானமுக்கோணம்சிவனுடையவீடு
பரிசையாய்சிவனுடையபீசம்வைத்து
பார்மகனே இங்கென்றும்சிங்கென்றுந்தான்



வரிசையாய்யதினுடையகோசபீசம்
கலந்துவைத்துகருவையங்கே தொட்டுவைப்பாய்
உரிசையாய்நின் றுசபம்செய்யும்போது
உத்தமனேமுக்கோணம்பொல்லாதுபாரே. (க)

மயேஸ்வரன்வாயுவினுடையவீட்டின் அக்ஷரம்

சசஅ பொல்லாதவாயுவென்றவீடுமக்காள்
பெரியமஹாசுவாதிஷ்டானத்தின்வீடு அறுகோணம்
நில்லாதேமயேஸ்வரத்தின்பீசம்வைத்து
நின்றுடும்எங்கென்றும்வங்கொன்றுந்தான்
சொல்லாதகோசமென்றபீசம்வைத்து
தொட்டிடுவாய்கருவையங்கேநேரம்பார்த்து
வல்லாதவாயுவென்றபிரசண்டவீடு
வாரிவிடும்வெளிதனிலேமதிக்கொண்ணுதே. (ய)

சதாசிவம் ஆகாசம்வீட்டின் அக்ஷரம்

சசக மதிக்கவேபோகாது ஆகாசவீட்டில்
மதிரவியும்பூண்டிருந்தயீசனுடவட்டம்
கதிக்கவேயீசனுடபீசம்வைத்து
கனிவானஓங்கென்றும்எங்கென்றுந்தான்
விதிக்கவேரெண்டெழுத்தின்கோசபீசம்
மேவியேசுத்திவாப்பதிந்துகொண்டு
சதிக்கவுமேகருத்தொட்டுநேரம்பார்த்து
கருவியொடுஏகவெளியில்வாரிவிடும்பாரே, (கக)

பஞ்சபூதம்போதலின்பலன்.

சரு0-வாரிவிடும் ஆகாயம்வாய்வும்சேர்ந்தால்
மக்களேஒருவருமேமதிக்கப்போகா
நீரிவிடும்பிரசண்டவாய்வுசேர்ந்து
நிலைக்கவேஒட்டாதுநிலைகொள்ளாது
மாரிவிடும்தொழில்கூர்மைவெளியில்கார்த்து
மாட்டுவதுபோலவுமேமனதிலெண்ணி
ஆரிவிடும் அஷ்டகன்மவித்தையப்பா
அறிவுள்ளோர் அறிவார்கள் அறிந்துபாரே. (கஉ)

இதுவுமது.

சருக-அறிந்துப்பார் ஆகாசவெளியுங்காத்து
அப்பனே அக்கினியும்சேர்ந்துகொண்டால்

எரிந்துபோம்கண்ணுக்குநிமைதோணாது
என்மகனே அக்கினியும்வாயுவுஞ்சேர்ந்தால்
பிரிந்துபோம்ஏகவெளிகூடிக்கொண்டால்
பேசுவதுஒன்றுமில்லை பெண்ணாசை
சரிந்துபோங்கைவல்லபம் வாய்வுந்தீயும்
தானரிந்தால்அவனைவெல்வார் இல்லைத்தானே. கங

இதுவுமது.

ருஉ-இல்லையேஅக்கினியுந் தண்ணீர்சேர்ந்தால்
என்மகனே தண்ணீரும்அக்கினியைவெல்லும்
தொல்லையாய்வாழ்வு அங்கே கூடும்போது
தொடுத்ததொழில்நாட்செல்லுஞ்சுருக்கேயில்லை
கல்லையே அப்பதுவை சேர்க்கொண்ணாது
கனிவானமண்ணதுவுந்தண்ணீர்சேர்ந்தால்
இல்லைபோகாணமல்தண்ணீர்வற்றி
இரங்கிவிடுமண்ணதுவும் உண்ணும்பாரே. கச

சத்திசிவக்கூறு.

சருங-உண்ணுமேஅஞ்செழுத்தில் ரெண்டுபழுதில்லை
என்றுமேபேசுவது எளிதோசொல்லு
மண்ணுமே தண்ணீருங் கூடிஅல்லோ
மனுவென்றசீவஜெந்து வளர்த்துஉறவாடி
எண்ணுமேயுலகமென்ற வாழ்க்கையெல்லாம்
இரண்டினால்உண்டாச்சு இசைந்துபாரு
கண்ணுமேஉயிரதுவை வளர்த்ததுபோலப்பா
கனிவானமண் தண்ணீர் அறிவதுதான்பெரிதே. கரு

இதுவுமது.

சருச-பெரிதானமண்ணல்லோ சத்திசத்தி
பேசுவமேகூடாது சிவன்தான் தண்ணீர்
நெரிதானசத்திசித்தி கண்டபேர்கள்
நீடூழிகாலமெல்லாம் நிறையாதோறும்
சரியானஉலகத்தில்சிறுமைபெற்று
தான்திரிவார்அவரை ஒருவர் அறியமாட்டார்
அரிதானசித்துவித்தைஎவர்சொல்வார்கள்
அப்பனே இவர்மனதை யரிவார்பாரே. கசு

இதுவுமது.

சருரு-அரியாரோ அவர்மனதை நோகச்செய்தார்
அருகிவிடம் அவர்குடியும் அழிந்துபோகும்
தெரியாரே அவற்குஉபகாரம்செய்தோர்
சிறுமைவிட்டுபெருமையிலேதேரிவாழ்வார்
சரியானநற்பதவி அவர்க்கோகிட்டும்
சண்டாளசென்மமென்றால் தரிகொள்ளாது
நெரியாரேஉலகத்தோ டொத்துவாழ்வார்
நேரறிந்து அவர்குணத்தில்நின்று தேரே. கஎ

இதுவுமது.

சருசு-தேருவதுயெளிதல்ல வெகுநாட்செல்லும்
செகத்திலேகோடியிலே ஒருவனுண்டு
ஆறுவதுகோடியிலே அணுகாதுபாரு
அப்பனேபெண்ணாசை அற்றுப்போச்சு
கோறுவதுபொருளாசை மண்ணின்ஆசை
குடிகெடுத்தகாமவெறிகுழலாளைத்தள்ளி
ஏறுவதுசத்திசிவம் பூசைவிட்டால்
இழந்திடுவாய்சத்தியமாய்யெண்ணிக்கொள்ளே. கஅ

இதுவுமது.

சருஎ-கொள்ளுவதுபட்சிவித்தை அறியவேணும்
கூடுதனில்வாழுமுயிர் தெரியவேணும்
துள்ளுவதுநிலையில்நின்று வாசிவிட்டால்
தூலமென்றகாயமது அழிந்துபோகும்
அள்ளுவதுபிரதிஷ்டைக்குள் ஆகிக்கொண்டு
அப்பனேபாசவினை யடுத்துக்கொல்லும்
வெல்லுவதுசத்திசிவம் பூசைசெய்தால்
மேலானபட்சிவித்தைபலிக்கும்பாரே. ககூ

இதுவுமது.

சருஅ-பரப்பாபஞ்சபட்சி சுருக்கம்சொல்வேன்
பார்தனிலேஒருவருக்குஞ் சொல்லவேண்டாம்
நேரப்பாகலியுகத்தில்பழிக்கஞ்சார்கள்
நேர்மையுள்ளமனமுள்ளோர்தேடிப்பார்த்து
ஆரப்பாகோடியிலேஒருவனுண்டு
அமர்ந்திருப்பார்ஞானநிலை அறிவுதங்கி

சீரப்பா இருந்தோதா மனஞ்சோதித்து
தெள்ளுநமிழ்பட்சிவித்தை செப்புவாயே. உ0

இதுவுமது

சஙுகூ செப்புவாய்வருஷமது பனிரண்டானால்
திடமானமனதென்று அறிந்துகொண்டு
ஒப்புவாய்சூக்ஷாதி சூக்ஷமெல்லாம்
ஒழித்துவைத்துமைத்ததெல்லாம்சொல்லுவாய்நீ
தப்புவாய்சகலகரு மானமெல்லாம்
தானடக்கஞ்செய்துகொண்டு அறிவில்நில்லு
அப்புவாய்பெரியோரை கற்புடையபேரை
அகந்தையாய்ச்சொல்வாரவர் அழிந்திடுவார்தானே. உக

இதுவுமது.

சகூ0 அழிந்திடுவார்பட்சியைநீ பார்த்துக்கொண்டு
அப்பனேஉடலினுட சக்கரத்தைதவைத்து
நெளிக்கவேபிரிதிவியில் நாற்கோணமிட்டு
நேர்மையுள்ள அங்கென்றுந்தான்
குளிக்கவேபிரீங்கென்று கோசம்பீசம்வைத்து
கூட்டுவாயவன்பேரை சுற்றிவரபதித்து
களிக்கவேகருத்தொட்டு வோதுவகைகேளு
கனிவாக-அங்-ரங்-பிரீங்-ஸ்ரீங்-இன்னான் நசி-நசி-என்றோதே

இதுவுமது.

சகூக ஓதுகிறபோதெல்லாம் செய்வகையைநினைத்து
ஓர்வகையாய்நின்றுசெபம் ஆயிரத்தெட்டுமானால்
ஏதுகிறவசியம்ஆகிருஷ்ணமேசெய்யும்
என்மகனேநாலெழுத்தில் தம்பனமோகனமாம்
ஓதுகிறரெண்டெழுத்தில் பேதனம்உட்சாடணமும்
மக்களேநடுத்தலையைப் பிடித்துமாறு
கூறுகிறமாரணமும் வித்வேஷணமும்செய்யும்
குறியானஅறுபத்துநாளும் ஆடும்பாரே. உஙு

இதுவுமது.

சகூஉ ஆடுமே தாழிலரிந்து பூசைசெய்தால்
அப்பனேஅணுவளவுந் தப்பாதப்பா
போடுமேவோர்மனதாய் செய்யும்போது
புண்ணியனேஎக்கியமாய் முடிந்துதானால்

சாடுமேதேவிக்கு பொங்கல்பெலியுடனே
தனதானருத்திரசெபம் தாக்கும்போது
வாடுமேகுறித்தபட்சி மாண்டுபோகும்
மக்களேநாள்மூன்றில் அழிந்துபோமே. உச

இதுவுமது.

சசுரு- அழிந்துபோம்செய்வகையை நினைத்துக்கொண்டு
அப்பனேதொடுத்திடுவாய் எழுத்தறிந்துமாறு
தெளிந்துபோம்தொழிலுக்கு தாக்கவகைகண்டு
திடமாகநீயிருந்து வோதும்போது
கழிந்துபோம்குறித்தபட்சிஉடல்சிதறிப்போகும்
கண்மணியேகன்மனதுதோஷந்தோஷம்
நெளிந்துபோம்பட்சியதுபொல்லாதப்பா
நேறறிந்துகுறிப்பறிந்துநீசெய்வாயே. உரு

இதுவுமது.

சசுச-செய்வதுதான்யாருக்குச்செய்யவேணுஞ்
செகத்திலேஜனத்துரோகி குருத்துரோகிக்கும்
கொய்துதான்பெரியோரை தூஷிப்போர்க்கும்
கொடுமையுள்ளவஞ்சகர்க்கும் கற்பழித்தபேர்க்கும்
நெய்வதுதான்பொய்சூது கற்றபேர்க்கும்
நேர்மையுள்ளபிராமணரை பழித்தபேர்க்கும்
நைவதுதான்சிவாலயங்கள் அழித்தபேர்க்கும்
நயமில்லாதவத்தோர்க்கு செய்வாய்பாரே. உசு

அப்புவீட்டின் அக்ஷரம்.

இதுவுமது.

சசுரு-பாரப்பா அப்புவுக்குப்பிறைபாம்வீடு
பணிந்துநல்ல இங்கென்றும்மங்கென்றுந்தான்
கோரடாஹ்ரீங்கென்றும்கோசபீசம்வைத்து
கூட்டுவாயவன்பேரைசுற்றிவைத்து
காரடாகருவையங்கே தொட்டுக்கொண்டு
கனிவாகஓதும்வகை-இங்-மங்கென்று
தேரடாவிஷங்கட்கு கங்கென்றுசொல்லி
தேயேஇன்றுளோ-ஈசிநசியென்றுசுற்றிவையே. உஎ

தேயுவின்வீட்டின் அக்ஷரம்.

சசுசு-சுத்திவைத்துமுன்போலேசெய்துபாரு
துடியானஅஷ்டகன்மம்ஆகும்பாரு

குத்திவைத்துதேயுவினிடவீட்டைக்கேளு
குறியானமுக்கோணம்சிவனுடையஆட்டம்
கத்திவைத்துஉங்கென்றும்சிங்கென்றுந்தான்
கருதுவாய்டீங்கென்றுகோசபீசம்வைத்து
முத்திவைத்துஓதுவதுஉங்கிங்கென்று
மொழிபடா-டீங்கென்று-ரங்-லங்-நசிநசியென்றோதே. ௨௮

இதுவுமது.

௪௬௭-என்றல்லோஎதிரியுடபேரைச்சுற்றி
எழுதுவாய்கருவைபங்கேதொட்டுவைத்து
நன்றல்லோசுத்தியுடன்வஸ்துவைத்து
நலமாகமுன்சொன்னபடியேயோது
மன்றல்லோஅஷ்டகன்மம்அறுபத்திநாலும்
வகையுடனேசெய்வதுதான்பலிக்கும்பாரு
குன்றல்லோவெடிமருந்துஇதற்கொவ்வாது
குடிகெடுத்தபட்சிவித்தைகூறொண்ணாதே. ௨௯

வாயுவின்வீட்டின்அக்ஷரம்.

௪௬௮-கூறவொண்ணாவாயுவினுடவீட்டைக்கேளு
குமரகுருசக்கரந்தான்அறுகோணமப்பா
மாறவொண்ணா-எங்-மங்கென்றுபோடு
மறையாதேவீங்கென்றும்கோசபீசம்வைத்து
தேறவொண்ணாசிவத்துக்குஎழுத்தைக்கேளு
திரமான-எங்-வங்-வீங்-கங்-ரங்-இன்னுநசிநசிஎன்றோது
நேயொண்ணாக்கருத்தொட்டுவோதும்போது
நீறிவிடும்பிரசண்டவாயுதானே. ௩0

ஆகாயத்தின்வீட்டின்அக்ஷரம்.

௪௬௯-தானென்றஆகாயவட்டவீடு
சதாசிவனார்வாழும்அந்தவீட்டிலப்பா
தேனென்ற-ஓங்-யங்கென்றுபோடு
திரமாகடீங்-ரீங்-காரம்-கோசபீசம்வைத்து
மானென்றதேவியைத்தான்வருந்திக்கொண்டு
வளமாகவோதும்வகைநன்றாய்க்கேளு
பானென்ற-ஓங்-டிரிங்-கக் சங்-இன்னுநசிநசி
பரமபதம்வழிநோக்கிப்பதைத்துச்செய்யே. ௩௧

பிரிதிவுக்குகடத்தலையாகப்பிடித்துமாறல்.

சஎ0-பகையாதுகடந்தலையைப்பிடித்துமாறல்
பகைத்தபேர்எல்லாரும்உன்பதமேசேர்வார்
நகையாதுநசியைவிட்டுவசியென்றுவோது
நலமானதொழில்கள்எல்லாம்நசியைநினையாதே
வகையாதேமற்றஅஞ்சுதொழில்கட்கப்பா
வகையாகநசியைவிட்டால்பலியாதுபாரு
துகையாதுதொழிலறிந்துவோதவேணும்
துடியானபகைபோச்சுஉறவுமாச்சே. ௩௨

சுபகாரியத்துக்கு செபம்செய்யும்ஸ்தலம்.

சஎக-உறவானதொழில்கள்எல்லாம்மித்துருவைச்சேர்ந்து
ஓதுவாய்ஒருமஸ்தாய்இருந்துகொண்டு
பறவானநல்லதோர்காரியங்கள்
பலிக்குமடாவில்வமரம் பதியிலிருந்தோது
மறவானசிவாலயங்கள் கெங்கையோரம்
வளர்ந்தநந்தவனத்திலேஇருந்துசெய்தால்
திரமானமூன்றுவகைதொழிலுமாகும்
தின்மைஎன்றதொழில்செய்யும்தலத்தைக்கேளே. ௩௩

அசுபகாரியத்துக்குசெபம்செய்யும்ஸ்தலம்.

சஎஉ-தலமதுதான்பாழ்வீடுமெத்தநன்று
தண்மையுள்ளமுககசந்திபாதைஆகும்
குலமதுதான்காளியிடகோவில்ஆகும்
குலாவுகின்றபொதுவானஅம்பலமுமாகும்
செலமதுதான்மாட்டைக்தொழுவம்ஆகும்
தீயெறியுங்காடாகும்சுடுகாடுஆகும்
வயதுதான்இத்தலத்தில்தொழிலைச்செய்ய
மக்களேஅஞ்சுவகைதொழிலும்ஆமே. ௩௪

இதுவுமது.

சஎ௩-தொழிலாகும்வகையேதுசொல்லக்கேளு
துடருமுன்னேபட்சியைநீகண்டபோதே
குளியாகும்அந்திடத்தைசுத்திபண்ணு
குணமாகமந்திரத்தால்சிவசிவாசொல்லு
தயவாகும்பச்சிலைக்கிசாடம்நீங்கி
தண்மையுடன்காப்பிட்டுசிலைபோல்வருந்துபாரு

தெளிவாகும்சக்கரத்தில் அக்ஷரத்தைவைத்து
நேர்மையுள்ளசக்கரத்தால்கருத்தொட்டுபூசைசெய்யே.

இதுவுமது.

௪௭௪ பூசைசெய்துநிர்வாணத்தோடேநின்று
பிடுங்குவாய்கிழக்குமுக மாகநின்று
பாசைசெய்துவோவரங்கிதேவிமுன்பு
பண்பாகவைத்துநீ தூபபெலியுடனே
வோசைசெய்துவெரொடுத்துவைக்குந்தலைமைக்கண்டு
விழியானபெலிகொடுத்துபுதைக்கும்போது
நாசைசெய்துபோகுமடா தொழில்பொல்லாது
நாடாதேவெகுபாவங்கொடுமையாயே. ௩௬

இதுவுமது.

௪௭௫ கொடுமையுள்ளவஞ்சகர்க்குச்செய்யவேணும்
கொலையானபேர்களுக்குச்செய்யவேணும்
அடிமையென்றுவந்தவற்கு அறிவித்தாக்கால்
அப்பனே அவன்செய்யும்பலனிற்பாதி
வடிமையென்றுமனமறியச்சொன்னையானால்
வந்திடுமேவெகுபாவம்வந்துசூழும்
தடிமையுள்ளபித்தர்கள்தான்வந்துவைப்பார்
துள்ளிவிடுமதினாலேபலனுண்டாமே. ௩௭

இதுவுமது.

௪௭௬ பலனுண்டுஇத்தொழிலை வெளிவிடாதே
பழிக்கஞ்சாகலியுகத்தில்பழியோபாவம்
பெலனுண்டுஉலகத்தில்பகையேயில்லை
பெருமைஎன்றபெரியோர்கள்வார்த்தைசொல்வார்
கலனுண்டுஎன்றுசொல்லிசற்றுநினையாதே
கலங்காதேமனமுறதிகழியவேணும்
சிலருண்டுவருங்காலமதங்குங்காலம்
செடமறிவதற்கல்லோதெளிந்துபாரே. ௩௮

இதுவுமது.

௪௭௭ தெளிவைத்தான்வெகுவினையும்வைத்துபாரு
செடமுழுதும்சத்துருவைமித்துருவைக்கண்டு
அழுவதுதான்உண்டானால்தொழில்செய்யும்போது
அப்பனேபட்சிக்கிபகையாகக்கூட்டு

தெளிவதுதான்பட்சிவகைஇருந்திடத்திற்
நேரானகருத்தொட்டுவைக்கவேணும்
கழிவதுதான்தலைகீழாய்மாறும்போது
சண்ணுமடாகருக்குருவும்சண்ணும்பாரே. ஙகூ

இதுவுமது.

சஎஅ சண்ணுமடாருத்திரசெபம்முடிந்தானால்
தானினைத்தபடிமுடியும்தப்பாதப்பா
எண்ணுமடாமுன்போலேதொழிலைச்செய்து
எடுத்திடுவாய்கொள்ளிமியாடு அதனில்வைத்து
கண்ணுமடாருத்திரனை நினைத்துக்கொண்டு
கனிவானவஸ்துடனே சுத்திவைத்து
பண்ணுமடாவோர்மனதா இருந்துசெபம்செய்தால். ச0

இதுவுமது.

சஎகூ முடிப்பாரேஅவனுடையகருவிருப்பதாலே
மோசமதுசெய்திடுவான்பழிகொலைக்கிஅஞ்சான்
அடிப்பானேஅவனுடையஎமதண்டியினாலே
அவனடிக்கஆர்விலக்க போறாரப்பா
குடிப்பானேஉதிரமென்றபானந்தானும்
கொல்லுவானவனுடையசூலைத்தான்தின்றஐயா
கடிப்பானேமூளையைத்தான்தின்றுஐயா
கலங்காமல்நீயிருந்துபூசைமுடிப்பாயே. சக

இதுவுமது.

சஅ0 முடிப்பாயேஉன்மனதுபோலேமக்கள்
முடிவதுதான்ஏதாலேகருக்குருவினாலே
செடிப்பானேஎதிரியுடல்பெலங்குறைந்தாலே
சிவனுடையருத்திரர்களை கோபத்தாலே
வடிப்பானேகாலன்என்றதுகைமுடிந்தாலே
வந்ததடா இந்தவினை மறிக்கப்போகப்போகா
குடிப்பானருத்திரனும்உதிரத்தைத்தானும்
கோபமதைஒருவரால்திருப்பொண்ணாதே. சஉ

இதுவுமது.

சஅக திருப்புவதுகருவறிந்தபேரேஅல்லால்
ஜெகத்திலுள்ளபேர்களோதிருப்பப்போறார்

கருப்புவதாருத்திரனுடமந்திரந்தானப்பாகருநாவதாஓம்ஸ்ரீம்
கிரீம்-அங்-உங்-மதாமாங்கிஷருத்திரர்மூர்த்திவாவாவென்று
வருப்புவதாஉருவங்கேநூற்றிருபத்தெட்டு
வருந்திறல்ருத்திரனும்மனதில்தோனும்
முருப்புவனுமுன்சொன்னஎழுத்தைக்கூட்டி
முடிக்கிறல்எதிரியில்லைமுடிந்துபோச்சே. ௨௩

இதுவுமது.

௨௮௨-போச்சுதடாமுன்சொன்னபடிதப்பாது
பொல்லாதபட்சிவித்தைபொருள்சொல்லாதே
தாட்சியொன்றும்வாராதுமனதடக்கம்வேணும்
தன்மையல்லோபுத்தியல்லோதணியவேணும்
வாச்சுதென்றுஉயிர்வதைசெய்யநினையாதே
வந்திடும்பார்கன்மவினைதொலைக்கொண்ணாது
பாச்சுதுபார்குருபதத்தை பணிந்தோர்அப்பா
பதினெண்பேர்சாபம்இல்லைபலிக்கும்பாரே. ௨௪

இதுவுமது.

௨௮௩-பலிக்குமடாகுருபதத்தை மறக்கொண்ணாது
பரமபதபொருளைவேஎண்ணுவாய்நீ
சொலிக்குமடாசரஸ்வதிபால்கிருபைதானும்
தொடுத்திடுமேஞானவிதி அமைக்கும்பாரு
கெலிக்குமடாஉன்றவின்சொன்னதெல்லாம்
கெணிதமுடன்உனைப்பகைத்தோர்வாழ்வதில்லை
வலிக்குமடாதன்னுயிர்போல்மன்னுயிரையெண்ணி
வாழ்வதுதான்உலகத்தோடொத்துவாழே. ௨௫

இதுவுமது.

௨௮௪-ஒத்துநின்றவாழ்வதுகாண்அறிந்துமக்காள்
உலகத்தில்பேய்க்கூத்தாம்ஆடும்பாரு
சத்துநிறைபொருள்அறியார்சண்டிமாண்பர்
சன்னியாசிரிஷிகளைப்போல்வேடம்பூண்டு
சத்துகின்றபெரியோரைவணக்கஞ்செய்து
கலந்ததினால்மறைப்புஅதுவெளியாய்த்தோன்றும்
புத்திவரும்அறிவுக்கும்சிவயோகம்பெற்று
பூதலத்தில்நீயும்ஒருசித்தாவாயே. ௨௬

இதுவுமது.

சஅரு-சித்தனென்றபெயர்பெறவும்வெகுநாட்செல்லும்
செடலம்இருந்தால்அதிசயங்கள்காணலாகும்
பத்தனென்றகன்மவலைக் குள்ளேசிக்கி
பாழ்நரகில்வீழாதேபலமதாண்டு
கத்தனென்றசிவனுடையகடாட்சத்தாலே
கலந்தேறமனதுறுதியாகவேணும்
வத்தனென்றஉலகத்தில்கோடிக்கொன்று
வாழுவான்இல்லறத்தில்பெரிதாம்பாரே. சஎ

அட்சரமாரல்படலம்-முற்றிற்று.





## மூலிகைப்படலம்.



சஅசு-பெரிதானசாஸ்திரந்தான்பட்சிசாஸ்திரம்
பேருலகில்மானிடர்கள்அறியாவிட்டால்
அரிதானநேரம்அங்கேஅறிந்துசெய்தால்
அப்பனே,செய்தொழிலும்பங்கம்ஆமோ
குறியானதோஷமென்றநீஜந்தானும்
குணமாகசொல்லிவைத்தேன்-கிரீங்-ஸ்ரீரீங்யென்றுபோடு
வரிதானமுனிசொன்னஅட்சரத்தில்சேர்ந்தால்
மகிமையுண்டுஅவ்வெழுத்துஎழுந்தாடும்பாரே. க

இதுவுமது.

சஅஎ-ஆடுமேகாரியபஞ்சாட்சரமும்அப்பா
அதினுடனேகாரணமும்சேர்ந்ததானால்
கூடுமேகோசமென்றபீஜம்சேர்ந்தால்
கூடிவிளையாடுமடா உடல்உயிராய்நின்று
வாடுமேஇதுமூன்றுசேராவிட்டால்
மறப்பாவைபோலிருக்கும்ஆடாதுபாரு
தேடுமேகருக்குருவும்சேர்ந்தகாலம்
செகத்திலேஅவனைவெல்வதரிதாம்பாரே. உ

பூர்வபட்சத்துபட்சிகளின்பச்சிலை.

சஅஅ-அரிதானநேரமங்கேஅறியவேணும்
அப்பனேமூலிகையும்தெரியவேணும்

சரியானசத்துருவும்மித்துருவும்நின்ற
தன்மைஅங்கேதெளிவாகக்காணவேணும்
பரிவானகைப்பாகம்செய்பாகங்கள்
பழக்கத்தால்ஆசானும்காட்டவேணும்
குறியானதொழில்செய்தால் பலியாதேபோமே
குருதொட்டுக்காட்டவுமேமுத்தியாமே. ௯

இதுவுமது.

சஅ௬-முத்தியாய்ரோமரிஷிசொன்னவாக்கியம்
முன்பின்னுய்வாராது பழுதொன்றில்லை.
பத்தியாய்ஓர்மனதுகொண்டுநின்றால்
பார்க்கலாம்அதிசயங்கள்உலகத்துள்ளே
வெற்றியாய்வருவதற்குஉறுதிவேணும்
மேதினியில்சாஸ்திரத்தைவெளிவிடாதே
சத்தியமாய்நீநினைத்துவந்தாயானால்
சகலமுமேசித்திமுத்தி யாவாய்நில்லே. ௪

இதுவுமது.

சஅ௭-நில்லென்றவல்லூறுக்கீரையாகும்
நிட்சயமாய்சொல்லிவைத்தேன்ஆந்தைசிறுகீரை
வெல்லென்றகாக்கைக்கி சாரணவேர்ஆகும்
வெகுகொடுமைகோழிக்கி தகரைவேரும்
சொல்லென்றமயிலுக்கு நங்கிலிவேர்என்று
கூறினார்முனிவர்எல்லாம் குறைசொல்லாமல்
அல்லென்றஅப்புஉப்புநாழிஎன்று
அறிந்தவர்கள்பட்சிவித்தை அறிவார்பாரே. ௫

மூலிகைசாபநிவர்த்தி.

சஅ௮-பாரேநீமூலிகைமுன் இருந்துக்கொண்டு
பகருவாய்ஓம்மூலி என்றுகொண்டு
சேரேநீசருவமூலிசாபம் நசிநசிஎன்று
செலுத்துவாய்பதினாறுஉருவும்ஓதி
கோரேநீகன்னிநூல்காப்புக்கட்டி
கொடுத்திடுவாய்வஸ்துசுத்தி தீபங்காட்டி
வேரேநீபிடுங்குமுன்னே அட்சரத்தைஓதி
வேலைகண்டுகருத்தொட்டு பிடுங்குவாயே. ௬

மூலிகைப்பிடுங்கும்வகை.

சகூஉ-பிடுங்குகிறபோதல்லோ நிர்வாணங்கொண்டு
பெரிதானருத்திரனை மனதில்வைத்து
நடுங்குவதுவாசியையே உள்ளேவாங்கி
மைந்தனேநினைத்ததுபோல் எண்ணிக்கொண்டு
ஒடுங்குவதுதிண்ணமென்று எதிரிமுகம்நெஞ்சுமூலம்
ஊண் அடாநடைஉறக்கம் சாவைவைத்து
அடுங்குமேகுறித்திடத்தில் சாவெழுத்தையோது
அள்ளிவிடுகாலடிமண் கருவைத்தொட்டே. எ

பிணைசம்பவித்தல்.

சகூஙு-தொட்டல்லோவேர்மண்ணும்ரெண்டும்ஒன்று
சுருக்கிடவேஅவ்வெழுத்தைபிடித்துமாறு
விட்டல்லோஐம்புலனும்சிதறிப்போகும்
மேலானவேரைத்தான்மயானஞ்சென்று
சுட்டல்லோபோடாதேவெகுகொடுமைவந்து
சூழும்அடாஉனதுகுலம் கடைத்தேருவதில்லை
கொட்டியதேன்அதுபோலேவிஷந்தானேறும்
கூடாதுஒருவரால்திருப்பும்வகைபாரே. அ

பிணைநிவர்த்தி.

சகூச-திருப்புவதுநீயல்லால்வேறொருவர் இல்லை
செகத்திலேமுத்தர்களும்அறிந்து
கருப்புலதுபிடிங்கினவேர்வித்துவிரைவிட்டு
காலைசந்தியிருநேரங்கண்டுஅரசோது
முறிப்பதுவும்நடூமூலம்உக்கமூலம்
உத்தமனேமரண்வேர்பிடுங்கொண்ணாது
அறிப்பதுவும்ஊண்அரசுவேர்பிடுங்கொண்ணாது
அப்பனேஉன்னைவெல்வதரிதாகும்பாரே. சூ

தன்னைவெல்லக்கூடாதென்பது.

சகூரு-பாரடாஆகிருஷ்ணம்வசியம்ரெண்டும்
பண்பானஅரசிலேயெடுத்தாலோது
தோடாமோகனமும்தம்பனமும்ரெண்டும்
திடமானஊணதிலேஓதிப்பாரு
வாரடாவேஷணமும்உச்சாடனமும்ரெண்டும்
மக்களேநடைஎழுத்தைப்பிடித்துமாறே

கூடாபேதனந்தைனரக்கத்தில்மாறி
குடிகெடுத்தமாரணந்தைநசாவெழுத்தாமபிற. ௰

இதுவுமது.

சகசு-மாறிவிடும்நால்தொழிலும்வகையாய்ச்செய்து
மக்களேவேரைவைகலிக்கலேமையதுகண்டு
கோறிடும்போதடைக்கும் அட்சரத்தைஓதி
கொண்டுபோஇவனைவெல்லநிவ்வுலகில்இல்லை
வாறிவிடும்அஷ்டகன்மம் மனதுறநிகொண்டு
மக்களைபிறர்உயிரைவதைசெய்யாதே
நீறிவிடும்தன்னுயிர்போல்மன்னுயிரைஎண்ணி
நிஜமென்றஉணர்ந்துவிதிஷம்அதுபாரே. சக

அமரபட்சம்பட்சிகளின்பூச்சிலே.

சகஎ-பாரேநீஅமாத்தில்கொடுமைநினையாதே
பழிகாரபச்சிலையைசொல்லொன்றுது
பாரேநீமயினுக்குத்தவளைஆகும்
மருளாதகோழிக்கு குப்பமேனி
வாறேநீவல்லூர்க்கு நாய்க்கடுகுஆகும்
வந்ததொருஆந்தைக்கி அரைக்கீரைஅப்பா
காரேகேள்வலியனுக்கு அவிரிஅதுசேரும்
கனமானபச்சிலையைவெளிவிடாதே. சஉ

வேர்பிடுங்குவதில்உண்டாகும்பலன்.

சகஅ-வெளிவிட்டால்கடைமூலம்பிடுங்கினுக்கால்
வெற்றிஎன்றதம்பனமும்மோகனமும்செய்யும்
தெளிவுடனேஅரசினுடவேர்பிடுங்கிக்கொண்டால்
ஜெகத்திலேமெச்சும்ஆகிஷ்டவசியம்ஆடிப்
பழியுடனேஊண்வேரைபிடுங்கினுக்கால்
பழிக்குமடாவேஷணந்தான்கண்கொள்ளாது
வளிவுடனேஉறக்கம்வேர்பிடுங்கும்போது
கனமானஉட்சாடணமும்பேதனம்செய்யுமே. சங

இதுவுமது.

சகக-செய்யுமடாமாணவேர்பிடுங்கும்போது
திரும்பாதுஎதிரிவுடல்சிதறிப்போகும்
ஐயமடாஎவ்வகையும்நினைக்கும்போது
ஆவ்வெழுத்தைநீபிடித்துமாறிக்கொள்ளு

பொய்யடாமுன்சொன்னபடிதப்பாது
பொல்லாத்அமரத்தில்தொழில்செய்யாதே
வையகத்தில்பாவியென்றுபேரெடுத்தமக்கள்
மனோன்மணியாள்கிருபையில்லைவரிசைபாரே. கசு

தன்னைத் தானறிதல்.

ருா-பாரேநீஉன்னுடையஆத்துமாவை
பகர்ந்தறிவதற்கல்லால்சொன்னேன்சூட்சம்
பாரேநீஎங்தெந்தவேலைகண்டு
பருகிவாய்அட்சரத்தைபிரித்துமாரு
தேரேநீஉலகத்தில்பழிசெய்யாதே
செடமிருந்தால்அதிசயங்கள்காணலாகும்
வேரேகேள்கொலைகள்வரும்பாவத்துக்கும்
விரும்பாதேரிஷியினுடசாபந்தானே. கரு

பச்சிநிலை அறிதல்.

ரு0க-சாபமென்றால்மனோன்மணியாள்கிருபைவேணும்
சண்டாளஅட்சரத்தைமாறவேணும்
கோபமென்றகொடுமையைநீஅகற்றவேணும்
குறித்தவன்தன்பட்சியுடக்கருவும்வேணும்
பாவைஎன்றகன்னிநூல்காணவேணும்
பழிகாரநேரம்அங்கேபதியவேணும்
விவேகமென்றமனதறிவால்கைபாகங்கள்
விரும்பினதேசெய்பாகம்பலிக்கும்பாரே. கசா

பழிநிவர்த்திசெய்துகொள்ளல்.

ரு0உ-பலிக்குமடாதேவியடாபூசைசெய்தால்
பாதங்கள்செய்தாலும்பழிநிவர்த்திசெய்து
கெலிக்குமடாஉயிர்வகைசெய்யநினையாதே
கேசரியாள்மனம்நோகநடத்தைநடவாதே
சொலிக்குமடா உன்னுவிரியாள்கிருபை
சொரூபநிலைஅறிவித்துபரகெதியைச்சேர்ப்பாள்
வலிக்குமடாஉன்மனதுநோகநடந்தோர்க்கு
மயக்கம்இல்லைபீடைவரும்மனதறிந்துபாரே. கஎ

இதுவுமது.

ரு0ங-பாரப்பாஉலகத்தில்உள்ளபேர்கள்
பணிந்திடுவார்தனங்கோடிஈந்தாலுந்தான்

சேரப்பாபக்ஷியுடசருக்கஞ்சொல்வேன்
திண்மைஎன்றதீவினைக்குஉள்ஆகாதே
நேரப்பாஉன்னுடையமனதுதெளிவாக
நின்றநிலைகாணவல்லோசொன்னேன்சூக்ஷம்
ஆரப்பாதன்அறிவைத்தான்அடக்கிக்கொண்டு
மகத்தானசிவயோகத்திருந்திடாயே. க௮

புத்திகூறுதல்.

ரு௦௪-இருந்திடவேகாயசுத்திசெய்துக்கொண்டு
என்மகனேகற்பம்அதுஉண்டுசேறு
அறிந்திடவேகூடழியாவாழ்க்கைதேட
அப்பனேமனோன்மணியாள்கிருபைசெய்வாள்
தெறிந்திடவேசித்தரெல்லாம்உன்னிடத்தில்வந்து
தேவைஎன்றகாரியங்கள்சொல்லிவைப்பார்பாரு
சொருந்திடவேஅஷ்டலக்ஷிமியும்வந்து
சொரூபானுசொரூபநிலைசொல்வாள்பாரே. க௯

ஊண்வேளையில்வேர்பிடுங்கும்பலன்.

ரு௦ரு-பாரடாஊண்வேருபிடுங்கினுக்கால்
படருகிறகாரியங்கள் ஆகும்பாரு
ஆரடாசத்துருமித்துருவும்ஆவான்
அப்பனேசோபனகாரியங்கள்நன்மை
தூரடாபீடையதுவிலகும்பாரு
தப்பா பொருள்வரத்துதனஞ்செயனும்ஆவாய்
டாவேர்பிடுங்கிகுலிசம்அதுஆட
ஒகோகோஇதின்பெருமைஉறைக்கொண்ணாதே. உ௦

நடைவேளையில்வேர்பிடுங்கும்பலன்.

ரு௦௬-ஒண்ணாதுநடைவேர்பிடுங்கினுக்கால்
உத்தமனேமுடைப்படுத்திவருத்தங்கொள்ளும்
எண்ணாதஎண்ணமனம்இடைஞ்சல்கொள்ளும்
எவ்வளவேனும்சுகமில்லைபிரமலபிமட்டும்
தன்னாலேவிதிஅமைப்புஉள்ளமட்டும்
தான்அனுபவிக்கவுமேஅல்லாதில்லை
விண்ணானசித்தர்களும்திருப்பும்வகையறியார்
மேதினியில்உள்ளவரோதிரும்புவதுபாரே. உ௧

அரசுவேளையில்வேர்பிடுங்கும்பலன்.

௫௦௭-பாரேநீ அரசனிடவேர்பிடுங்கிவைக்க
பசுமைஉள்ளதகடதனில்பொதிந்துகொண்டால்
சாரேநீஉன்சிரசில்கட்டி இடும்போது
சகலருமேவசியமடாஉன்னைவெல்லதாரும்
கோரேநீ இவ்வுலகில்சத்துருவும்இல்லை
கொங்கணவர் இவ்வேரைமெச்சிக்கொண்டார்
காரேநீஎரும்புகடையானைதலைஎல்லாம்
கைவசமேஆகுமென்றுமுனிவர்சொன்னார்பாரே. ௨௨

தூக்கம்வேளையில்பிடுங்கும்பலன்.

௫௦௮-பாரப்பாஉலகத்தில்வேர்பிடுங்கிக்கொண்டால்
பகையானஎதிரியுமேவெல்வதுவும்இல்லை
நேரப்பாஎதிர்த்தானைஜெபம்செய்பல்ஆகும்
நேமித்தகாரியங்கள்நிமிஷத்தில்வெல்லும்
கூரப்பா இவ்வேளைகொடுமைநினையாத
கூற்றுவதான்வேதில்லைசூலைகள்வரும்தோஷம்
சாரப்பாமனுவுகள்மேல்தயவுசெய்து
தன்மையுள்ளதொழில்செய்யவேளை அதுபாரே. ௨௩

மரணவேளையில்வேர்பிடுங்கும்பலன்.

௫௦௯-வேளைஎன்னமரணவேர்பிடுங்கவென்றான்
வெல்லுவதுஎதிரியுமோவெல்லுவதும்இல்லை
தாளைஎன்றசத்துருவும்இல்லைஇல்லை
சண்டாளநேரமதுசெயிப்பதுவும்இல்லை
பாளைஎன்றபொருள்உயிர்ச்சேதம்ஆகும்
பண்பானதுயரமதுவெகுகொடுமைஆகும்
காளைஎன்றஎருமையின்மேல்எருமாசன்
கடாக்ஷம்வைத்துப்பார்த்தாலும்திரும்பரிதுபாரே. ௨௪

பட்சிகளின்வலுஅறிதல்

௫௧௦-அறிதாகஉலகத்தில்சத்துருவும்இல்லை
அப்பனேபஞ்சபக்ஷிஅறிந்தவர்கள்முன்னே
குறியானசிங்கத்தின்முன்னேநின்று
கூத்தாடுமோநரியும்குலாவுமோசொல்லும்
தெரியாதஅஷ்டகன்மசாஸ்திரங்கள்எல்லாம்
வெறும்பாண்டம்பக்ஷியுடசாஸ்திரந்தான்அப்பா

சரியானபடியென்றுபதினெண்பேரும்
சகலருமேமெச்சினரேபக்ஷிஅதுபாரே. உக

பட்சிகளின் வலுஅறிதல்.

ருகக-பட்சியென்றபஞ்சபட்சிவலுவைஎன்றால்
பகர்வதற்குஎன்றாலேமுடியாதப்பா
கொச்சிஎன்றசத்துருநாள்வலுவோயில்லை
கொடுமையுள்ளநாள்அதிலேபட்சிபகைஆனால்
மெச்சிஎன்றசத்துருவைஅழித்துப்போடு
மேலானபட்சிஎல்லாங்கூடிக்கொண்டு
அச்சிஎன்றமித்துருவும்இருந்தால்என்ன
அப்பனேபட்சிவலுஇல்லைத்தானே. உஉ

படுபட்சிவலுஅறிதல்.

ருகஉ-தானென்றபட்சிநாளையிலேஅப்பா
தனக்குவலுஅற்றுவிடும்மித்துருவும்இல்லை
தேனென்றசெய்காரியம்தவக்கம்ஆகும்
ஜெயமாகமாட்டாதுஒருநாளும்தான்
கோனென்றபட்சியதுகொடும்பாம்பில்சூரியன்
கொதித்துமனம்புண்ணாகிவாடுவதுபோலே
நானென்றஆணுவங்கள்எதுவில்லாமல்
நடுங்குவார்சத்துருநாள்கொடுமைஆமே. உங

இதுவுமது.

ருகங-கொடுமையுடநாளையிலேபட்சியுடவலுவை
குறிப்பதுவும்வெகுசுளுவுவெகுஎளிதுபாரு
அடிமையென்றுவந்தவர்க்குஇந்தநாளில்
அனியாயக்கொடுமைகளைஅநுசரிக்கவேண்டாம்
கெடுமதியும்கண்ணுக்குத்தோன்றுதுபாரு
கேடுவரும்போதுமதிகெட்டுவருமுன்னே
கடுகளவும்பாவமதுமனதாரச்செய்தால்
கண்கெட்டுகுலநாசம்அற்றுவிடும்பாரே. உச

சீஷனது சன்மார்க்கம் அறிதல்.

ருகச-அற்றுவிடும்பட்சிவித்தைசொன்னாலும்தோஷம்
அப்பனேமனதறிந்துசொல்லவேணும்
கற்றுவிடுபனிரண்டுவருஷம்காத்தல்
கைபாகம்செய்முறைகள்கருச்சொல்லாதே
கொத்திவிடும்அவனுடையகுணத்தைக்கண்டு
கூறுவாய்ஜாலத்தில்சொல்லிளவுநீ

பற்றிவிடும்மனதைத்தான் அறியாவிட்டால்
பழிகாரயித்தொழிலைச்சொல்லொண்ணாதே. உரு

இதுவுமது.

ருகரு-ஒண்ணாதபட்சிவித்தைபொல்லாதப்பா
உத்தமனே அவன்செய்யுங்குணத்தைக்கண்டு
எண்ணாததொழில்செய்தால்பாவம்இல்லை
என்மகனே அவனுடையகுணத்தைப்பாரு
கண்ணாததொழிலை அங்கேசொல்லிடாதே
காட்டாதேகருக்குருவும்கருமிக்கப்பா
விண்ணாதே இடிவிழுந்துதலைதெறித்துப்போகும்
மேதினியில் அவன்குணத்தைகண்டித்தேனே. உசு

இதுவுமது

ருகசு-தேனென்றபஞ்சபட்சிமுறையைத்தானும்
செய்யாதேஉலகிலுள்ளமாந்தர்க்கையா
கானென்றகசடுள்ள மனிதர்க்கையா
காட்டாதேஉன்னுடையகபாலம்போகும்
மானென்றமனதறிந்துசொல்லவேணும்
மகத்தானபாவங்கள்வந்துசூழும்
ஆனென்றஆணுவத்தைஅடங்கினோர்க்கு
அதினுடையசூட்சத்தைஅறிவிப்பாயே. உஎ

எதிரியைமடக்கும்வகை.

ருகஎ-அறிவிப்பாய்கன்னியுடநூல்சொல்லாதே
அப்பனே கருவை அங்கேவெளிவிடாதே
நிருவித்தசக்கரத்தைவெளிவிடாதே
நின்றிடும் அட்சரத்தைநினைவில்நினையாதே
மறுவித்தமூலிகையின்வகைக்காட்டாதே
வந்துநின்றசத்துருமித்துருசொல்லாதே
கருவித்தநேரமதுகாட்டொண்ணாது
காட்டினால்பிழைஆவான்கண்டுபாரே. உஅ

இதுவுமது

ருகஅ-பாரடாமூலிகைக்குசாபம்நீங்கி
பண்பானகன்னிநூல்காப்புக்கட்டி
வாரடாசக்கரத்தைஅதிலேவைத்து
வளமானஅட்சரத்தைமாறிப்போடு
சேரடாகருவைஅங்கேஅட்சரத்தில்வைத்தால்
செலுத்தும்பார்எதிரிஉயிர்தீரும்பாரு

ஆரடா அறிவார்கள் சூட்சந்தன்னை
அறிந்தவன்தான்சித்தனென்றேபேரும்ஆச்சே. ௨கூ

சித்தன்பெருமை.

௫கக-சித்தனென்றால்மனதடக்கமிருக்கவேணும்
ஜெகஜாலகூத்தறிந்து தெளியவேணும்
பத்தனென்றால்வாசிநிலை காணவேணும்
பழியானஇத்தொழிலைச்செய்வாயானால்
கர்த்தனெனும்சிவனுடைய சாயுச்சியமுமாம்
கருவருக்கும்இருபத்தோர்தலைமுறைக்கு
வர்த்தனென்றால்தன்னுயிர்போல் மன்னுயிரைப்பார்த்து
வழுவாமல்குருபதத்தை மனதில்வையே. ௩0

தேவிபூசை.

௫உ0-வையப்பாசத்துருநாள் அறிந்துக்கொண்டு
வகையாகதேவியுடபூசைசெய்து
நொய்யப்பாகடலைசாயபல் மேலேபூசி
ருத்திரன்போல்நிர்வாணரூபங்கொண்டு
கொய்யப்பாகருவையிங்கே திலதம்போட்டு
குறித்தவன்தன்உடலிலே அட்சரத்தைவைத்து
செய்யப்பாகோடிவஸ்திரம்உடுத்திக்கொண்டு
திடப்படுத்துஉன்மனதுதெளிவும்ஆச்சே. ௩க

ருத்திரர்கோபம்.

௫உக-ஆச்சப்பாஎதிரியுடபேரைச்சொல்லி
அப்பனேமூலிகைமுன் இருந்துக்கொண்டு
வாச்சப்பாவஸ்துடனேசுத்திவைத்து
வர்க்கவகைதூடங்கள்வளமாய்ச்செய்து
பாச்சப்பாஓர்மனதாய் இருந்துக்கொண்டு
பணிந்துநான்ருத்திரனை வணக்கம்செய்தால்
போச்சப்பாஎதிரியுடபேரும்போச்சு
பொல்லாதருத்திரர்கோபம்செலுத்துவாரே. ௩உ

சோதித்தறிதல்.

௫உஉ-வாருமென்றுஉலகத்தில்|உள்ளபேரை
மனஞ்சோதிநெடுநாள்மனம் அறியாமல்செய்தால்
பாருமென்றுபாவத்துக்குள்ளாகவேணும்
பழிகாரர்இவர்கள்செய்திடுவார்தோஷம்
ஆறொன்றஅரவவிஷம்இதற்கொவ்வாது
ஆடலாம்அஷ்டகன்மம் அறுபத்திநாலும்

ஊரென்றபட்சியுடதொழிலைச்செய்தால்
ஒருவரால்திரும்பும்வகைஅறிவார்பாரே. ௩௩

இதுவுமது.

௫உ௩-அறியாமல்சித்தரெல்லாம்கூடிக்கொண்டு
அடக்கினார்குகைதனிலேஅதைநான்கண்டு
நெறியானகலியோர்க்குவேணும்என்று
நின்றனடாவெகுகாலம்தவசில்நானும்
குறியாதுபட்சியுடசாஸ்திரத்தைவாங்கி
கொடுத்துவிட்டேன்கொங்கணவர்கொட்டினார்பார்
பரியாசமென்றுசொல்லிநினைப்போர்க்கெல்லாம்
பலியாதுபட்சிவித்தைபண்புள்ளோர்க்கே. ௩௪

பலியாதவர் அடையும்குணம்.

௫உ௪-பலியாதுமனஒருமைகொண்டேயாகில்
பலிக்கும்அடாக்ஷணத்தில்மதியில்லாவிட்டால்
குலியாதுவினைஅறுத்தபெரியோர்தன்னை
குலமதிலேகுருவென்றும்பணியானுக்கும்
பலியசைதன்னுயிர்போல்போற்றுதார்க்கும்
மன்னுயிரைத்தன்னுயிர்போல்வணங்காதார்க்கும்
கலியானகலியுகத்தில்கொடுமையுள்ள
கசடருக்குப்பலியாதுகணமும்பாரே. ௩௫

பலிப்பவர்களின் பெருமை.

௫உ௫-கண்டுபார்பலிப்பதுவே ஆருக்கானால்
கபடமதுதான்நீக்கிஓர்மனதுகொண்டு
வண்டுபோல்குருபதத்தைப்பணிந்தோர்க்கைபா
மனதிலேஎவ்வளவேனும்கோபந்தள்ளி
தொண்டர்கள்உலகத்தில்வணக்கஞ்செய்து
துற்புத்திபொருளாசைதள்ளினோர்க்கும்
சண்டாளன் என்றபேர்ஆகாதப்பா
தண்மையுள்ளபுருஷருக்குபலிக்கும்பாரே. ௩௬

இதுவுமது.

௫உ௬-பாரடாரோமரிஷிசொன்னவாக்கியம்
பழுதொருநாள்வாராதுபற்றிப்பாரு
தேரடாசாஸ்திரத்தின்உண்மைகண்டு
தெளிவாகசொன்னதல்லால்மற்றோர்க்கில்லை
ஆரடா அறிவார்கள்சூட்சந்தன்னை
அறிவதுதான்குருவாக்கால்அறியவேணும்

கோரடாவகையாகக்கொட்டினேன்பார்
கொடுத்துவிடாய்சாஸ்திரத்தைஅவர்குணத்தைக்கேளே. ()

மாரணம்

ருஉஎ-கேளடாளதிரியுமேநடந்தபின்பு
கீழ்நோக்கித்தானெடுத்துதேவிமுன்பு
வாளடாஅட்சரந்தான்ஆயிரத்தெட்டோது
வளமாகஅதைஎடுத்துபானஞ்சென்று
நாளடாதினமரணம்வேளைபார்த்து
நசியென்றதலைதெற்காய்நாரணிஓது
பாழடாபோகாதுஅவனுயிரும்போகும்
பரமனுடகிருபையினாற்பலிக்கும்பாரே. ருஅ

இதுவுமது.

ருஉஅ-பலிக்குமென்றுஇத்தொழிலைச்செய்தால்பாவம்
பகைவந்தால்மனம்பொருத்துகோபம்தள்ளி
வலிக்குமென்றுதன்னுயிரைபோல்மன்னுயிரைப்பார்த்து
மனம்புத்திஆங்காரம்மனதடக்கஞ்செய்து
கெலிக்குமென்றுஉன்மனதுதள்ளவிட்டால்
கேளடாநடைஉறக்கம்வேளைபார்த்து
சலிக்கவேஎதிரியைத்தான்படுக்கப்போடு
சண்டாளபிரமலபிவதைக்கும்பாரே. ருகூ

இதுவுமது.

ருஉகூ-பாரேநீபச்சிலைக்கி காப்புக்கட்டி
பண்பானகருத்தொட்டுஅட்சரங்களோதி
நேரேநீநாள்பார்த்து வேளைகண்டு
ஜெயந்தரவேணுமென்றுருவைப்போற்றி
கோரேநீஓர்மனதாய்உருவைப்பார்த்து
கொடுமையுள்ளசத்துருவால்வேரைவாங்கி
தேரேநீசுடலைஎன்றசாம்பல்மேலே
தெளித்திடுவாய்கொள்ளிதனைஅதின்மேல்வையே. சூ0

இதுவுமது.

ருநூ0-வைத்தபின்புஅதின்மேலேசாம்பல்போட்டு
வளமாகதேவிமுன்னேவைத்துப்போற்றி
நைத்திடுவான்அதைஎடுத்துகாளிகோஷ்டம்
நன்றாகஜயனிடஆலயத்தில்வைக்க
மொய்த்திடுவாய்துச்சந்திபகைபார்த்து
முனையானகிநாய்வேளையொன்றில்

வைத்திடுவாய்பிரமலபிஉள்ளமட்டும்
வாட்டமடாசாகாதபிணந்தான்பாரே. சக

ருநக-பாரடாஎன்னிடத்தில்கரும்பீடை
படாரமல்பட்சம்லொன்றுநீரில்லொன்று
கோரடாதேவியைத்தான்தொழுதுபோற்றி
கொடுமைஎன்றபாவங்கள்அணுகாதுபாரு
வாரடாமுகந்தோனைபணிந்துகொண்டு
வர்க்கவகைநைவேத்தியம்வளமாய்ச்செய்து
தேரடாபிராமணருக்குதானஞ்செய்து
சிறுபிள்ளைகளிக்குஉபசாரஞ்செய்யே. சஉ

இதுவுமது,

ருநஉ-செய்திடுவாய்உன்மனதில்பீடைஅணுகாது
திடமானபட்சிஅட்சரத்தைஓது
நைந்திடும்பார்அவனுயிரும்நாள்குறையுமட்டும்
நன்றல்லவெகுபாவம்கொடுமைஅதுமெத்த
நொய்திடும்பார்இத்தொழிலைஉலகத்தோர்க்கு
நோக்காகமனதறிந்துநுணுக்கம்செய்யாதே
வைதுவார்உலகத்தோர்குருத்துரோகிஎன்று
வழுத்தாமல்பிறஜனங்கள்நல்லவன்றனென்றே. சங

நற்புத்தி.

ருநங-நன்றல்லோஉலகத்தார்சொல்லவேணும்
எளியவன்போல்நாட்டிலுள்ளோர்அறியவேணும்
நன்றல்லஇத்தொழிலைகண்டபேர்கள்
நடுங்குவார்பாவம்புண்ணியம்என்றுசொல்லி
தொண்டுசெய்தசிஷனுக்குசொல்லிடாதே
சொல்லுவதுசூட்சமாய்சொல்லிவைநீ
பண்டுதான்வெகுகாலம்கார்த்தபேர்க்கு
பழக்கத்தில்அவன்மனதைப்பார்த்துசொல்லே. சச

இதுவுமது.

ருநச-சொல்லுவதுமத்தமெதல்லாம்சொல்லிவைநீ
சொல்லாதேகன்னியுடநூல்சொல்லாதே
வெல்லுவதுஅட்சரந்தான்வெளிவிடாதே
விரோதிஎன்றகருவைஅங்கேவெளிகாட்டாதே
கொல்லுவதுபச்சிலையின்குறிசொல்லாதே
கொடுமையுள்ளநேரமதுகுணங்காட்டாதே

சொல்லுவதுமற்றதெல்லாம்சொல்லிவைநீ
சண்டாளமனதறிந்துசூக்ஷம்சொல்லே. உரு

இதுவுமது.

ருஉசு-சூக்ஷமென்றபஞ்சபக்ஷிதொழிலைத்தானும்
சொல்லாதேஉலகிலுள்ளமாந்தர்க்கையா
ஆட்சியென்றமனோன்மணியாள்சாபம்நின்று
அவன்குலத்தைஅழிந்திடும்பார்சொன்னால்தோஷம்
காட்சியென்றஉலகத்தில்நடக்கும்காட்சி
கண்டுமனம்தெளிவதற்குசொன்னேன்சூக்ஷம்
பாட்சியென்றகன்மவினைக்காளாகாதே
பழிகாரமனதடங்கிஅறிவில்நில்லே. உசு

இதுவுமது.

ருஉஎ-அறிகானசாஸ்திரத்தைஉலகில்உள்ளோவந்
தடுத்தாலும்அவர்குணத்தைஅறிந்துபார்த்து
குறியானகுணங்கள்எல்லாம்மறைத்துவைத்து
கூறுவாய்வெகுகாலம்குறிசொல்லாதே
பரையானஈஸ்பரியாள்சாபம்வந்து
பலிக்குமடாஒருவருந்தாங்கொண்ணாது
நரிதானநாய்ஜெனனமெடுத்துஅலையாதே
நல்லோர்கள்மனதறிந்துகூறுவாயே. உஎ

இதுவுமது.

ருஉஅ-கூறுவாய்கலியுகத்தில்பழிக்கஞ்சார்கள்
கொடுமையென்றதொழிலென்றுநினைந்திட்டார்கள்
சாருவார்அவர்வயறுபிழைக்கவேண்டி
சண்டாளதத்துவங்கள்பேசிக்கொண்டு
மீறுவார்கற்றோரைபணிந்துகேட்பான்
வெகுளியாய்நூல்முறையைசொல்லிடாதே
ஆருவாய்அவர்குணத்தைஅறிந்துநீயும்
அப்பவல்லோபட்சியுடசுருக்கம்சொல்லே. உஅ

மரணமூலகன்னிநூல்.

ருஉகூ-சுருக்கமென்றமூலிகைமுன்னிருந்துகொண்டு
சொல்லிவிடுசாபத்தைநிவர்த்திசெய்து
வருக்கமென்றதலைச்சனுடநூலைவாங்கி
வழுவாமல்மித்துருவின்முகத்தைநோக்கி
நெருக்கமென்றசத்துருவைவுரல்படாமல்
நினைவாகக்காப்புட்டுவெஸ்துசாதிதூபம்காட்டி

உருவினுடசக்கரத்தைமுன்புவைத்து
முனையாகக்குறித்தபஞ்சிஎழுத்தைவிட்டுஓத. ௪௯

இதுவுமது.

௫௱௪௯-ஓதியேகுறித்தயிடம்பார்த்துக்கொண்டு
ஓதுவாய்பட்சியுடகருவைத்தொட்டு
சோதியாய்நின்றதொருவாலைபூசை
சூட்டியேகுறித்திடத்தில்முளைகொண்டுகுத்து
போதவர்கள்வாதனைதான்மெத்தஉண்டுமகனே
புகழக்கேள்வருத்தமிக்கவேணுமென்றால்
மோதியேகுறித்திடத்தை பிளந்துபோடு
மோசம்வரும்அந்திடத்தில்மோசந்தானே. ௫௰

இதுவுமது.

௫௱௫௰-மோசமடாவெகுமோசம்மாணமூலி
மூலிகைமுன்னிருந்துகொண்டுதூபம்தூக்கி
பாசமடாகன்னிநூல்காப்புக்கட்டி
பகையானபட்சியுடசக்கரத்தைவைத்து
தோஷமடாஅக்ஷரத்தைமேல்நோக்கிஓது
சொல்லொண்ணக்கருத்தொடுநேரம்பார்த்து
நோடாமித்துருவைசேர்த்துக்கொண்டு
நிர்வாணரூபமதாய்நின்றுவேரைவாங்கே. ௫௧

இதுவுமது.

௫௱௫௧-வாங்கியேஎதிரியுமேகடந்தால்நன்று
மக்களேஇல்லாவிட்டால்வலதுகால்மண்ணை
ஓங்கியவேர்மண்ணுங்கூடச்சேர்த்து
உத்தமனேமயானத்தில்வைத்துக்கொண்டு
தாங்கியதோர்தேவிக்குபூசைசெய்து
சனியென்றபச்சிலையைசுட்டாயானால்
பாங்கியேசுட்டதொருஜாமந்தன்னில்
பழுதாகும்எதிரிஉடல்பாவம்ஆச்சே. ௫௨

இரக்கம்கொள்ளல்.

௫௱௫௨-பாவம்என்றுஉன்மனதுநினைந்ததானால்
படுக்கவேபோடுகொஞ்சம்நாளைக்கப்பா
கோமென்றகொடுமையைத்தான்நினைக்கொண்ணாது
கொல்லுவதுவெகுபாவம்கொடுமைஆமே
சாவதுதான்திண்ணமென்றுஉயிர்வதைசெய்யே
சண்டாளர்தன்னுயிர்போல்மன்னுயிரைப்பாரு

போவதுதான்பச்சிலையைப்புதைத்துப்போட்டால்
போகுமேஉயிர்குறைந்துபோகும்பாரே. (ருங)

இதுவுமது.

ருசங போகுமேஉயிரைவதைசெய்தாயானால்
பொல்லாதகன்மவினைசூழுஞ்சூழும்
வேகுமடாஉன்சடலம்வெள்ளித்தான்வீழும்
வீணான பேர்களுக்குத்தொழில்சொல்லாதே
ஆகுமடாயமனுன்பணியால்சாபந்தானும்
அப்பனேபட்சியுடதொழிலைப்பார்த்து
ஏகுமடாமனதடக்கம்செய்துகொண்டு
என்மகனேரோமனுடநூல்பலிக்கும்பாரு. (ருச)

இதுவுமது.

ருசச பலிக்குமடாசித்தருடசாபம்நின்று
பகராதேஉமையாள்மேல்ஆணைஆணை
கெலிக்குமப்பாபட்சிவித்தைக்கருக்குருவுங்கண்டால்
கேசாத்தில்எக்கும்வித்தைஇராக்கொவ்வாது
பலிக்குமப்பாபுணைதிலேகாகம்குத்த
வருத்தம்ரொம்பஅதுவோலேபக்ஷிவித்தைஅப்பா
சலிக்குமப்பாசீஷருடமனதறிந்துசொல்லு
சண்டாளஎன்றுக்கால்சொல்லொண்ணாதே. (ருரு)

இதுவுமது.

ருசரு சொல்லாதேபட்சியுடசூக்ஷம்தன்னை
சொல்லிவிட்டால்வெகுகொடுமைபாவம்ரொம்ப
வல்லாண்மைஉள்ளவர்கள்உலகில்உண்டு
வந்தடுத்துஉன்மனதையக்கம்செய்வார்
பொல்லாதகருமிகளைமனம்சோதித்து
புத்தியுள்ளசீஷர்மனம்அறிந்தாலையா
சொல்லாதேயென்றுசொல்லிபரவசங்கள்வாங்கி
கூறுவாய்பட்சியுடசூட்சங்களே. (ருசு)

மூலிகைப்படலம்-முற்றிற்று.



## ஞானச்சுருக்கப்படலம்.

ருசசு தானென்றகன்னிநூல்கலைச்சன் ஆகும்
சண்டாளகருவல்லேஇணங்கள் ஆகும்

தேனென்றக்கரங்கள் உடலதாகும்
திறமான அட்சரமும்காரணமாய்முடியும்
வானென்றமூலிகையைபிடுங்கொண்ணாது
மக்களேமற்றதெல்லாம்செய்துபாராய்
ஏனென்றுபேசுமடாமித்துருஉன்செயலால்அங்கே
என்மகனேசேர்ந்துபோனால்பட்சிவித்தைபலியாதே. (க)

பட்சிவித்தைபலிப்பவர்களின்குணம்.

௫௪௭ பட்சிவித்தைபலிப்பவர்கள்குணத்தைக்கேளு
பார்தனிலேபொய்சொல்லான்குருவார்த்தைமறவான்
கொச்சியென்றகோபகுணம்மனதில்வையான்
கொடுமைஉள்ளசினமில்லாவஞ்சகங்கள்பேசான்
மெச்சுஎன்றஎவ்வுயிர்க்கும்இரங்குவானும்
மேதினியில்வெகுஜனங்கள்நல்லோனென்பார்
பட்சிவித்தைபலியாமல்போறதில்லை
பாருலகிலரிதான்வித்தைதானே. (உ)

இதுவுமது.

௫௪௮ வித்தையிலேஅதிகவித்தைபட்சிவித்தை
மேலானசித்தர்களும்மறைத்துவைப்பார்
கொத்தாகர்ன்வெளியாய்ப்புலம்பிவைத்தேன்
குருபதத்தைபணிந்தோர்க்குபலிக்கும்பாரு
சத்தானஎரும்புகடையானைத்தலைமுழுதும்
தானவனாய்நின்றபடிவித்தைஅப்பா
மற்றதெல்லாம்பால்போலேஆகும்சாஸ்திரம்
மணியென்றபஞ்சபட்சிநெய்யும்ஆச்சே. (ங.)

இதுவுமது.

௫௪௯ நெய்யென்றசாஸ்திரத்தைராமன்நன்றாய்
நிட்சயமாய்குருபதத்தைப்பணிந்துப்போற்றி
மெய்யென்றவாசிநிலைஅறியச்சொன்னேன்
மேலானதொழில்களுக்குஇதுவேவேணும்
பொய்யென்றுநினைத்தவர்க்குபலிதம்ஆகா
புத்திஇல்லாபாவிகளிதைப்பாராவிட்டால்
கையென்றகையதுவும் ஆத்துமாவை
காட்டாட்சித்தகதையதுபோல்ஆகுந்தானே. (ச)

இதுவுமது.

௫௫௦ ஆகுமேபட்சியுடசாஸ்திரத்தைப்பார்த்து
அப்பனேபெரியோரைப்பணிந்துபோற்றி

கோறுமேஅவர்குணம்போல்நடத்தினுக்கால்
கொண்டுசெல்லும்வெகுகாலம்வாழலாம்பார்
காருமேவேரையொருசாஸ்திரத்தைப்பார்த்து
கலங்குவதுமெய்அல்லதுதெளிவதுஇல்லை
பாருமேபட்சியுடசாஸ்திரந்தான்
பண்பானபடிஎன்றுபணிந்துபாரே. (௫)

இதுவுமது.

௫௫௧ பணிந்துபார்மைத்தொருசாஸ்திரம்எல்லாம்வெரும்
பாண்டமேஅல்லாமல்வழியோஇல்லை
துணிந்துபார்பட்சியிலேஎவ்வளவேணும்
சொல்குறைச்சல்வாராதுபழுதொன்றில்லை
கணிந்துபார்அதினுடையசூக்ஷந்தன்னை
கண்டவர்கள்மனிதனென்றுசொல்லொண்ணாது
தணிந்துபார்அவர்பதத்தைபணிந்துபோற்றி
தண்மையுள்ளபொருள்எல்லாம்அறிந்துகொள்ளே. (௬)

இதுவுமது.

௫௫௨ அறிந்துகொண்டுஉலகமதில்தணிந்துபேசி
அப்பனேகற்றுறைகொண்டுபண்ணி
தெரிந்துகொண்டுபூமிதன்னில்நடக்கும்காட்சி
சீஷைப்போல்வெகுவணக்கம்செய்துபோற்றி
தெரிந்துகொண்டபாயதுபோல்உலகவாழ்க்கை
துன்பமதில்அணுகாமல்திருநீற்றுசுழச்சுபோல
வரிந்துகொண்டுஞானத்தின்வண்மைகண்டு
மக்களைகாயசித்திவணக்கஞ்செய்பே. (௭)

இதுவுமது.

௫௫௩ செய்திடுவாய்ஞானசித்தியோகசித்தி
சொல்லுவதுசிவயோகிபரமயோகி
வைத்திடும்பார்உலகத்தில்வாழ்க்கை
மக்களேமனுக்கள்எல்லாம்வணங்கஆச்சு
செய்திடும்பார்உலகத்தில்உள்ளபேர்கள்
திசையாளும்மன்னரெல்லாம்உன்தெரிசனத்தைக்காண
மொய்திடும்பார்உலகத்தில்அவர்களிடஉறவொண்ணாதே
மொய்குழலாள்வாலையுடஉறவுநன்றே. (௮)

இதுவுமது.

௫௫௪ நானென்றபட்சியுடசாஸ்திரத்தையப்பா
நலமாகஉலகத்தில்வணக்கம்செய்தால்

உண்டென்றதொழிலை அங்கேபிரிவிப்பார்கள்
எத்தமனேமனதறிந்துஉரைக்கவேணும்
கண்டர்யென்றபேர்க்கெல்லாம்உரைத்தாயானால்
கழுதையொறஜென்னமதுபிறக்கல் ஆகும்
வண்டென்றவாலைமேல் ஆணை ஆணை
மக்களேசாஸ்திரத்தின்வகைசொல்லாதே. (௯)

இதுவுமது.

௫௫௫ சொல்லாதேஉலகிலுள்ளமாந்தர்க்கையா
திரமானகாயசித்திசெய்தக காண்டால்
பொல்லாதபலயோகிஞானயோகி
புகழ்பெற்றஜடலத்தை அறியாயோகி
இல்லாதவாசியைத்தான்நிறுத்தும்யோகி
இகரொருவரில்லையென்றேநினைக்கும்யோகி
கொள்ளாதஉடலுயிரைநிறுத்திேனோர்க்கு
கூறுவாய்பாவிகளைகுறித்துத்தள்ளே. (௧௦)

இதுவுமது.

௫௫௬ தள்ளுவதுசிஷருடமனவைதக்கண்டு
தயங்காமல்ஞர்மனதாய்நிற்பானுகில்
உள்ளபொருள்உள்ளதெல்லாம்உனக்கோவேன்
உரைத்திட்டேன்உமைஆணைஉண்மைஉண்மை
தெள்ளுமணிபஞ்சபட்சிவித்தையப்பா
ஜெகத்திலொருவருக்கும்சொல்லவேண்டாம்
தள்ளிவிடும்வாலையுடசாபந்தான்வந்து
தலைதெரிந்துபோகும்என்றுமனதிலெண்ணே. (௧௧)

இதுவுமது.

௫௫௭ மனதிலெண்ணிசத்தியமாய்இருந்தாயானால்
வாக்கினால்சொன்னதெல்லாம்பலிக்கும்பாரு
கனிவுகண்டுசாஸ்திரத்தில்வினையம்வைத்து
கைப்பாகம்செய்பாகம்குருவாக்கயறிந்து
தனமென்றபொருள்தேடிஈந்தாலுந்தான்
தக்கனவேஆக்கினையாம்தோஷம்தோஷம்
தணிவுகொண்டுஉலகத்தில்வணக்கம்செய்து
தனித்திருந்துஅறிவுதான்பெரிதாம்பாரே. (௧௨)

இதுவுமது.

௫௫௮ பெரிதானபஞ்சபட்சிசாஸ்திரத்தை
பேருலகில்சொன்னதனால்வருவதேது

அறிதானசாஸ்திரத்தைவெளிவிடாதே
அப்பனேபதினெண்பேர்சாமந்தானும்
குறியாகவந்துவிடும்சொன்னேன்அப்பா
குருவானசாஸ்திரத்தைகொடுக்கொண்ணாது
தெரியாதுஇதனுடையசாஸ்திரந்தானும்
செய்யவில்லையான்வெளியாய்செப்பினேனே. (கங)

இதுவுமது.

ருருக செப்பினதோர்சாஸ்திரத்தைஉலகமீதில்
ஜெயமறியாமாந்தருக்குசொன்னாயானால்
தப்பில்லைபதினெண்பேர்சாபந்தானும்
தன்குலத்தைநாசமதுசெய்யும்பாரு
கொப்புகளின்குரித்துவிளையாடும்செனமம்
குற்றங்கதுபோல்ஆகுமப்பாசொன்னேன்யானும்
இப்புவியில்வாலையுடசாபம்அப்பா
ஈடேவதொருபோதும்இல்லைத்தானே. (கச)

இதுவுமது.

ருசுO இல்லைஎன்றுசொல்லதுவும்உண்மைஉண்மை
என்மகனேசாஸ்திரத்தைகொடுக்கொண்ணாது
சொல்லவரும்உமைவள்மேல்ஆணைஆணை
சொன்னதொருவார்த்தைகளைதட்டவேண்டும்
சள்ளையென்றதாய்தந்தைமேல்ஆணைஆணை
தனக்குவந்தபெண்டுபிள்ளைதன்மேல்ஆணை
வெல்லுவதுஉன்குலத்தைகாக்கும்தெய்வம்
மேலணைசொல்லாலேதொழில்பொல்லாதே. (கரு)

இதுவுமது.

ருசுக தொழில்செய்யும்ஜோசியங்கள்சொல்லும்போது
தொடுத்திடுவாய்விநாயகரைபூசைபண்ணி
கழிவுசொல்லிதள்ளாதேபாவம்பாவம்
கண்டபடிகுறிகணக்கள்நன்றாய்ச்சொல்லு
வழிசொல்லிஉறுதியாகக்கொண்டால்
வந்ததோர்பீடையெல்லாம்விலகிப்போகும்
தெளிவுசொல்லிநன்மைதன்மைதிரமாய்ச்சொல்லி
செய்திடுவாய்வாலையுடபூசைதானே. (கசு)

இதுவுமது.

ருசுஉ பூசைதனைமறவாதேஞானமறவாதே
பொல்லாபஞ்சகாத்தாள்அஞ்சுபேரை

நிசம்வைத்துமனதுறுதியாகக்கொண்டு
நிலைத்ததொருசத்திசிவம்பூசைபண்ணி
பாசம்வைத்துஉன்னுயிர்க்குபழிதேடாதே
பழிகாரசிவயோகப்பாதைதானும்
ஆசைவைத்துப்பெண்மேலேமோகங்கொண்ட
அன்புஅதுபோலிருந்தால்பலிக்கும்பாரே. (௧௭)

இதுவுமது.

௫௬௩ பலிக்குமடாபட்சியிலேதொழிலைச்செய்தால்
பழிசெய்யாத்தானிருந்தால்நிவர்த்திகேளு
கெலிக்குமடாஎக்கியங்கள்செய்யவேணும்
கேள்மகனேபச்சிலையும்தழையவேணும்
சொலிக்குமடாவாலையுடபூசைவேணும்
சொர்ணமதுவஸ்திரங்கள்தானம்வேணும்
அளிக்குமடாமனமகிழ்கொடுக்கவேணும்
அப்போதல்லோகன்மம்அங்கேதொலையும்பாரே. (௧௮)

இதுவுமது.

௫௬௪ தொலையுமேசிலவுசெய்யமனதுநொந்தால்
கொடுத்திடுமேகன்மம்அதுதொலைக்கொண்ணாது
அலையுமேஉன்சடலம்அழிந்துபோகும்
அப்பனேஆராலேதிருப்பக்கூடும்
வலையிலேஅகப்பட்டமானைபோல
வளர்ந்திடுமேகன்மமென்றபீடைதானும்
சிலையதுபோல்இருக்காமல்செலவுசெய்து
திருப்புவதுஅரிதானவித்தைதானே. (௧௯)

இதுவுமது.

௫௬௫ அரிதாகும்திருப்புதற்குவெளியாய்ச்சொன்னேன்
அப்பனேதிருப்பினவன்அவனேசித்தன்
குறியானதேவியும்பூசைமறவாதே
கொடுமையுள்ளபச்சிலையும்தழையும்வேணும்
வழியானதருமமதுசெய்யவேணும்
மக்களேவினையம்வைத்துபார்க்கவேணும்
நெறியானநிலையறிந்துஞானமார்க்கம
நிலைக்குமடாபட்சியுடகருத்துதோணும்பாரே. (௨௰)

இதுவுமது.

௫௬௬ தோணுமேஉலகிலுள்ளமாந்தர்க்கையா
தோணுவதுகோடியிலேஒருவன்உண்டு

காணுமேகருக்குருவும்காணுதுபாரு
 கடினமடா அவன்மனதுகலங்கும்போதில்
பேணுமேசாஸ்திரத்தைப்போனார்பாரு
 புல்லறிவுகொண்டசென்மப்பேர்மெத்த
காணுமேவீணாகப்புலம்பிச்சொன்னேன்
 நலமானசாஸ்திரந்தான்சொலிக்கும்பாரே. (௨௧)

இதுவுமது.

௫௬௭ வெருக்குவிடாய்சொன்னதொருசாபமெல்லாம்
 வீணாகப்போகாது அநுபவிக்கவேணும்
தூலிக்குமடா உன்குலமே அழிந்துபோகும்
 சொல்லாதபீடையது தொலையும்பாரே
வழியானமனதுடனே கண்டுசொல்லு
 வகையாகப்பாழ்நரகில்வீழாதேசொன்னேன்
கனிவிடாய்தள்ளிவருசித்திமுத்தி உண்டு
 கற்போலேநீயிருந்துசாதிப்பாயே. (௨௨)

இதுவுமது.

௫௬௮ சாதிப்பாய் அதிஞயோக்ஷமுண்டு
 தள்ளிவிடுகன்மிகளைசேர்க்கவேண்டாம்
சோதிப்பாய் அவன்மனதைநெடுநாட்கொண்டு
 சொல்லாதசூக்ஷமெல்லாம்மறைத்துவைத்து
போதிப்பாய்ஞானமெல்லாம்பூண்டபின்பு
 பொல்லாதபக்ஷிவித்தைசொல்லிவைநீ
ஆதிப்பாய்கருக்குருவும்வெளியாய்ச்சொன்னேன்
 அறிவதுதான்வெகுவினைவாய்பட்சிஅறிவதுவே. (௨௩)

ஞானச்சுருக்கப்படலம்-முற்றிற்று



## கருமானச்சுருக்கப்படலம்.

இதுவுமது.

௫௬௯ அறிவதுதான்முதல்விலக்கம்கன்னிநூலாம்
 அப்பனே அண்டமொடுபுளியுங்கூட்டி
தெரிவதுதான்தயிலம்அதுசருவும்ஆகும்
 நிசமாகசொல்லிவைத்தேன்பாஷாணமைந்தும்

எரிவதுதான் ஐங்காதம் உதவேஆகும்
    என்னசொல்வேன் வெகுசருக்கு இதுக்கொவ்வாது
முடிவதுதான் ஒன்றும் இல்லை எதிரிபேரைச்சொல்லி
    முடிக்கினல் அக்ஷரத்தை எதிரிஉயிர்முடியும்பாரே. (௧)

இதுவுமது.

௱௭௰ முடிவதுபச்சிலைக்கிசாபம்நீக்கி
    மூலையானதிரிஎன்றுநினைத்துக்கொண்டு
சடுதியிலேசக்கரத்தை இதிலேதாக்கி
    சண்டாளஅக்ஷரத்தைஅதிலேமாறி
சுருதியென்றகன்னிநூலுகாப்புக்கட்டி
    சொல்லாமேலைஐங்காயக்கருவத்தொட்டு
பருதியென்றநேரமது அரிந்துமுக்காள்
    பழிகாரசத்துருவைவிலக்கிவேரைவாங்கே. (௨)

இதுவுமது.

௱௭௧ வாங்குவதுநிருவாணரூபங்கொண்டு
    மக்களேவேர்அதுவைகட்டிடாதே
ஏங்குவதுவேரைநீபுதைத்துப்போடு
    என்மகனேபிர்மலபிமட்டும்பாரு
ஓங்குவதுவேர்அதுவைபிடுங்கொண்ணாது
    உத்தமனேநினைத்திடத்தில்கருவைத்தொட்டு
பாக்குமெறமுன்கொண்டுகுத்தும்போது
    பழுதாகும்அந்திடத்தில்பழுதாம்பாரே. (௩)

இதுவுமது.

௱௭௨ பழுதாகும்குறித்திடத்தைதப்பிளந்துபோடு
    பகைத்தஉயிர்பழுதாகும்உயிரும்போச்சு
கழுகாதேஎதிரியுமேஇல்லை இல்லை
    காடாதேவெகுகொடுமைபாவமிக்க
அழுதாலும்தீராதுஒருவர்அசைகொண்ணாது
    அப்பனேபச்சிலையைஅறியவேணும்
தொழுதாலும்ஒருத்தரால்திருப்பொண்ணாது
    தொடுகுறிபோல்சூஷமதுசொன்னேன்பாரே. (௪)

இதுவுமது.

௱௭௩ சொன்னாரேசூரனைசம்பாரம்பண்ணி
    சுப்ரமண்யர்க்கல்லோசிவன்உபதேசித்தார்
விண்ணுனசூரனைசம்மாரம்செய்து
    வெகுகாலம்சென்றபின்புகுருமுனிக்குபதேசித்தார்
வண்ணனகும்பமுனிபதினெண்பேர்க்கும்
    கலந்துஉறவாகியல்லோஉபதேசித்தார்

நண்ணாநான்வெளியாய்ப் பட்சிவித்தை
நாட்டினே உலகத்தில் நன்றாய்த்தானே. (௫)

இதுவுமது.

574. நன்றென்றுஉலகமதில் சொன்னேன்சூக்ஷம்
நழுகாதேசத்தியமாய் எண்ணிக்கொண்டு
குன்றென்றகோபத்தால் கெடுவைநினையாதே
குலநாசப்பிறப்பதறிந்து குலைக்கும்ஜென்மம்
வண்டென்றபட்சியல்லோ மதுவையுண்டு
வகையதுபோலிதினுடைய சூக்ஷங்கண்டு
தொண்டென்றதொண்டர்கள்போல் உலகமீதில்
தோணால்பெருகினைவாய் வாழ்வார்பாரே. (௬)

இதுவுமது.

575. வாழ்வதுதான்கோபமது இருக்கொண்ணாது
மனதில்வஞ்சகங்கள் பேசொண்ணாது
கோளதுவேவுலகமதில் சொல்லொண்ணாது
கொடுமையுள்ளவஞ்சகரிடம் சேரொண்ணாது
மீளாததொழில்கொடுமை செய்யொண்ணாது
வெகுஜனங்கள்பாவியென்று நினைக்கொண்ணாது
ஊணுமேசத்தியமாய் இருந்துகொண்டால்
அப்பவல்லோபட்சிவித்தை பலிக்கும்பாரே. (௭)

இதுவுமது.

576. பலிக்குமேகருக்குருவும் காணவேணும்
பழிகாரஅக்ஷரமும் பதியவேணும்
சொலிக்குமேஆசான்சொல் உறுதிவேணும்
சொன்னசொல்அணுவளவும் மறவாதிருக்கவேணும்
கெலிக்குமேயெத்தொழிலை நினைத்ததெல்லாம்
கொடிகாரசீட்டுமுதல் இதற்கொவ்வாது
வலிக்குமேபட்சிவித்தை பொல்லாதப்பா
மகத்தானபாவிகட்கு சொல்லொண்ணாது. (௮)

இதுவுமது.

577. சொல்லொண்ணாவாழ்வுண்டு வசியமுண்டு
துயரமுமேயெவ்வளவேணும் தோணுதுபாரு
அள்ளொண்ணாஞானவிதி அமைக்கும்பாரு
ஆசையென்றபாவமது விலகிப்போகும்
துள்ளொண்ணாவுலகத்தில் கொடுத்ததெல்லாம்
சொல்குறைச்சல்வாராது பலிக்கும்பாரு

கள்ளொண்ணாகாடமது அகத்தில்வைத்து
 கயமோர்க்குத்தொண்டுசெய்து கலந்துநில்லே. (கூ)

இதுவுமது.

578 நில்லென்றுசொல்வதுவே சத்தியம்சத்தியம்
 நினைக்குமடாநினைத்ததெல்லா மசத்தியமாகும்
சொல்லென்றசொல்பழுதே ஆகுங்காலம்
 தோணுதுபட்சிவித்தை பலிதமில்லை
சல்லென மனமுள்ளோர் காணும்வித்தை
 கலந்துவுறவாடுவது வெகுளிபோலே
சொல்லென்றசொல்லதுவும் ஆகாதுபாரு
 தண்மையுள்ளபுருஷரைப்போல் சார்ந்துபேசே. (க0)

இதுவுமது.

579. பேசினதால்வருவதென்ன குறைவதென்ன
 பெருமைபெற்றபட்சியுட தொழில்சொல்லாதே
காசினியில்வாழ்வதுதான் பிறர்தன்கோஷ்டி
 கலந்துவுறவாடாதே கலக்கந்தள்ளு
நேசம்வைத்துபேசிவிடில் நிலைசொல்லாதே
 நீபேசும்வார்த்தையது நிசமென்றெண்ணி
தோசிகளும்போய்விடுவார் நடத்தில்நில்லு
 சொன்னதினால்பாவம்வந்து சூழுந்தானே. (கக)

இதுவுமது.

580. சூழுமேயிருபத்தோர் தலைமுறைக்கும்
 சூழுவதுவொருவரால் திரும்பொண்ணாது
மாளுமேஅவன்குலமும் அற்றுப்போகும்
 மக்களேசிந்தை மறக்கொண்ணாது
நாளுமேபக்ஷிகளின் கருவறிந்து
 நலந்தீதுமவரவர்கள் பேரும்கண்டு
வாழுமேஅக்ஷரம்சொல்லேன் பிரித்துத்தானே
 மக்களேஜெகத்தோருக்கு காட்டொண்ணாது. (கஉ)

இதுவுமது.

581. காட்டாதேவுலகிலுள்ள மாந்தர்க்கப்பா
 காட்டினால்சாபமது வந்துசேரும்
பூட்டாதேவுன்குலமும் அழிந்துபோகும்
 புதுமையுள்ளபட்சிவித்தை பொல்லாதப்பா
நீட்டினால்மஞ்சத்திலே நெருப்பைப்போலே
 நீறிவிடும்உலகமெல்லாம் நிமிஷத்திற்றான்
சூட்டினார்அரன்திருமால அயன்கணேசன்
 துணைவனென்றவேலவர்க்குச் சொல்லித்தானே. (கங)

## பிருதிவியின் தொழில்.

582. தானென்றபிருதிவிக்குத் தொழிலைச்செய்தால்
தயவான நப்பெழுத்தைப் பிரித்துமாறு
தானென்றஅப்பதுவை மண்ணுமண்ணும்
தள்ளாதமற்றெழுத்தை சேர்க்கொண்ணாது
வானென்றவாகாச எழுத்தைக்காட்டி
மாறிவிடுருக்ஷமதை வழிசொல்லாதே
கோனென்றசிவன்மேலே ஆணை ஆணை
கொடுமையப்பாதொழிக்குறியை கூறொண்ணாதே. (க௪)

## அப்புவின் தொழில்.

583 கூறவொண்ணா அப்புக்குத் தொழிலைச்செய்தால்
குலைத்துவிடும்வாய்வெழுத்தைப் பிடித்துமாறு
நேரவொண்ணாவக்கினியைச் சேர்த்துக்கொண்டு
நிலைக்குமேதண்ணீரும் நிமிஷமற்று
மாறவொண்ணா மற்றெழுத்தை மறந்துவிடுமப்பா
மகத்தானகூடழிந்து மழிந்துபோகும்
சேரவொண்ணா தவியின்மேல் ஆணை ஆணை
ஜெகத்தோர்க்குஞ்சூக்ஷமது தெரியொண்ணாதே. (க௫)

## தேயுவின் தொழில்.

584 தெரியாதேயுக்குத் தொழிலைச்செய்தால்
சீரானவப்பெழுத்தை திறமாயோது
குறிப்பானவாகாச எழுத்தைச்சேர்த்து
கூட்டியேயிரண்டுமொன்றாய் மாறுபோது
வரியானவக்கினியும் அமர்ந்துபோகும்
மக்களையப்பவும் உண்டுபோகும்
தெரியானதேவியின்மேல் ஆணை ஆணை
ஜெகத்திலுள்ளமாந்தர்க்கு செப்பொண்ணாதே. (க௬)

## வாயுவின் தொழில்.

585. செப்பொண்ணா வாய்வுக்குத் தொழிலைச்செய்தால்
திடமானபிருதிவியைப் பிடித்துமாறு
அப்பவேயவ்வெழுத்தைக் கூடச்சேர்த்து
அறுதரித்தால்வாயுவதும் அடங்கிப்போகும்
இப்புவியில்செப்பாதே மற்றெழுத்தைச்சேராதே
இதமானவித்தொழிலை வெளிக்கட்டாதே
தப்பில்லாஅரசிவன்மேல் ஆணை ஆணை
தரணிதனில்சூக்ஷமதை தான்விள்ளாதே. (க௭)

## ஆகாசத்தின் தொழில்.

856, விள்ளாலேவாகாச வெளிக்குச்செய்தால்
விதமானபிருதியும் அப்புங்கூட்டி
தள்ளாதேஅக்கினியும் வாய்வும்சேர்ந்து
தப்பாமல்நாலெழுத்தும் பிடித்தூதி
நில்லாலேவாகாச வெளியில்தாக்கு
நிலைக்குமடா வித்தொழிலும் நிலைத்துபோச்சு
பொல்லர்தசிவனுமைப்போல் ஆணை ஆணை
பூதலத்தில்செப்பாதே புகழ்ந்துபாரே. (கஅ)

## வசியம்.

587. புகழ்ந்துபார்வசியமது செய்வீராகில்
புண்ணியனே ஆகாசம் வாய்வும்சேர்த்து
நிகழ்ந்துபாரக்கினியும் சேர்த்துக்கொண்டு
நீசெய்யும்தொழிலை அங்கே நிலைத்துவோது
மகிழ்ந்துமேபம்சகலமுமே வசியமாகும்
மன்னர்முதல்தேவரையும் வணங்குவார்கள்
இகழ்ந்துபாரித்தொழிலை வெளிவிடாதே
என்னதான்சொன்னாலு மியம்பொண்ணாதே. (கக)

## இதுவுமது.

588. இபம்புவாயவ்வெழுத்தை வசியம்பண்ண
என்மகனே அக்கினியைக் கூடச்சேரு
மயம்புவது அக்கினியை வசியப்பண்ண
மக்களேவாயுவெழுத்தை வசியம்பண்ண
தயம்புவது அவ்வெழுத்தை வசியப்பண்ண
தண்மையுள்ளபிரிதிவியை பிடித்துமாறு
சயம்புவதுபிரிதிவியை வசியப்பண்ண
சுத்தமுள்ளவக்கினியை ஓதிப்பாரே. (உ௰)

## இதுவுமது.

589. ஓதுவதுபெரிதல்ல மனமொன்றாக
உண்மைகொண்டுஐம்புலனை நிறுத்திக்கொண்டு
தேறுவதுசெய்தொழிலும் மனம்போலாகும்
திடமானபட்சிவித்தை வழிபிதப்பா
கூறுவதுவுலகிலுள்ள மார்க்கர்க்கப்பா
குணங்குறியும்சத்துருமித்துரு காணுமிட்டால்

பிறிவிடுமொருவரால் அடக்கொண்ணாது
மேலானமுனிவர்சொன்ன வாக்குத்தானே. (உக)

இதுவுமது.

590. வாக்குமனமொன்றாக நிறுத்தவேணும்
வழியானகுருவாக்கால் அறியவேணும்
ஏர்க்குமதுசத்தியமாய் நினைக்கவேணும்
என்மகனேசூக்ஷமதை அறியவேணும்
பாக்கியமாய்பழிபாவம் காணவேணும்
பண்பானபட்சிவித்தை பதியவேணும்
நோக்குவதுசிவன்பாதம் நோக்கவேணும்
நுண்மையுள்ளசுருக்கத்தை சொன்னேன்பாரே. (உஉ)

இதுவுமது.

591. சொன்னேனேபாவபுண்ணியம் அறியவேணும்
சூட்டாகக்கருமறைப்பை வெளியாய்ச்சொன்னேன்
கண்ணேகேள்கண்மணியே உலகம்பேயாம்
கருதாகவுலகத்தோர் பழிக்கஞ்சார்கள்
விண்ணுனசாஸ்திரத்தைப் பதினெண்பேரும்
விளம்பாமலுலகத்தில் மறைத்துவைத்தார்
தன்னாலேயெளியோர்க்கும் வேணுமென்று
தண்மையாய்ச்சொல்லிவைத்தேன் அடக்கம்பண்ணே. ()

இதுவுமது.

592. அடக்கமதுசெய்துகொண்டு அறிவாய்பாரு
அப்பனேதேவியுடசாபம்பொல்லாது
வெடக்கெடுத்தநாய்போலே உலகமீதில்
வீணருடன்பேசினால் வருவதென்ன
மடக்கொடியாள்ஆனையினால் மனம்வேறாகி
வஞ்சனைபொய்சூது கோபத்தைத்தள்ளு
தொடுக்குறிகள்அறிவாலே அறிந்துபாரு
சொன்னதினால்பாவம்வந்து சூழுந்தானே. (உச)

இதுவுமது.

593. சூழமேபாவபுண்ணியம் அறிந்துக்கொண்டு
சூக்ஷமென்றகருவையெல்லாம் அடக்கஞ்செய்து

வாழுமேஉலகத்தோ டொத்துவாழ்ந்து
வளமானமன்னரைக்கொண்டு பழக்கஞ்செய்து
சேளுமேவக்கினியில் மனதைப்பூட்டி
கொண்டாடியடிபணிந்து தாயைப்போற்றி
நாளுமேமதுதிசெய்து அக்கினியைப்போற்றி
நலம்பெறுவாயுலகத்தில் துயரம்போச்சே. (உரு)

இதுவுமது.

594. போச்சென்றுசுப்ரமணியர் தியானங்கேளு
புகழாவங்கீங் கென்றுசொல்லு
காச்சென்றுகங்கங் கென்றுஞ்செ ல்லு
கனமானமரிங்கென்று ரிங்ரிங்கென்று
வாச்சென்றுபாலசுப்பிர மணியதேவாநமாவென்று
வாகாகநாலுநாள் லட்சமோது
நற்சுண்டல்வடைதோசை யப்பமோடு
நலமானதேனுடனே பால்பழமும்வையே. (உசு)

இதுவுமது.

595. வையப்பாபுஷ்பமொடு புனுகுகெந்தம்
வளமானகஸ்தூரி பச்சைபூரம்வைத்து
நையப்பாமண்டலந்தா னுபசாரஞ்செய்
கனமானகுருவரும் வசியமாவார்
மெய்யப்பாசுப்ரமணியர் தியானம்வேணும்
மேலானவைதியனு டதியானம்வேணும்
ஐயப்பாயிவைவிட்டால் பக்ஷியேது
அன்பானயோகம்விட்டால் வீணுப்பாரே. (உஎ)

இதுவுமது.

596. வீணப்பாவீணுகப் புலம்புவார்கள்
வினையறியார்பொருளறியார் பட்டிமாடு
ஆணப்பாவாணுவத்தா லழிந்துபோவார்
அப்பனேஅதின்சூக்ஷம் கண்டுகேளு
மாணப்பாபக்ஷிகள்தன் வலுவோமெத்த
மகத்தானபக்ஷிகளின் காலங்கண்டு
தானப்பாவொவ்வொன்றை தனித்துநோக்கி
தன்மையாயுரைத்திடுவாய் சொல்லத்தானே. (உஅ)

எதிரியைவெல்வது

597. கொள்ளவேஎதிரிக்கி சத்துருவைக்கூட்டி
குணமாகச்செய்கிறவன் மித்துருவைச்சேர்த்து
அள்ளவேசத்துருவின் முகத்தைநோக்கி
அப்பனைசெய்தொழிலை முன்னேவைத்து
விள்ளவேயிருவரை ரூபங்கொண்டு
வீற்றிருந்துமந்திரத்தை ஓதும்போது
துள்ளவேயெடுத்துவிடும் எதிரியில்லை
துருசாகஅணுவளவும்நிக்ஷபமாய்ச்செய்யே. (உக)

பேதவியல்.

598. நிக்ஷபமாய்ஊணுக்குக் குள்ளனுவான்
நிலைத்ததோர்அரசுக்குக்கொடியனுவான்
பக்ஷமுள்ளநடைதனக்குச்சமானமாவான்
பகாமியநித்திரைக்கு மிகவும்குள்ளன்
அட்சமாமரணத்துக் கூனனென்று
அறிவினுல்பட்சிகளின் தொழிலைக்கண்டு
எட்சமயம்பேர்களுமே தெளிவாய்க்காண
இயம்பினேன்அறுநூற்றில் இயல்பாம்ஊணே. (கூ0)

இதுவுமது.

599. ஆமடா இன்னூலை பதனம்பண்ணு
அன்பானநல்லோர்கள் பதனஞ்செய்வார்
வாமடாயின்னூலைப் பெற்றுக்கொண்டு
வளமாகப்பூசைசெய்து பதனம்செய்து
காமடாமுக்காலைச் சொல்லும்தோணும்
கனமானயிந்நூலைக் கைவிடாதே
நாமடாகருத்துன்னித் தெளிந்துபாரு
நலமானகருமானச் சுருக்கம்முற்றே. (கூக)

வியாதிஅறியும்படி.

300 ஊணுக்குசிரசில்நோயாம் உறக்கத்தில்தலைகழுத்து
மேணியே அரசுநெஞ்சில் பிணியுண்டாம்
காணுமேசாவுதன்னில் அரையினில்காகங்காணும்
ஆணுவங்கொள்ளாதோன் அறிந்திடுமுண்மைதானே. (கூஉ)

பேதப்பட்சி-வெண்பா.

601. வல்லூருகாணவந்தான் வளர்ஆந்தைபொய்யுரைப்பான்
சொல்லாருங்காகம் திருடவந்தான்-பொல்லா
கோழியேபோர்க்குவந்தான் கோலமயில்காகம்
ஆழியாய்பேதம் அறி. (௩௩)

மச்சம் அறியும்படி.

602. வல்லூற்றைமுதுகு வளர்ஆந்தைவுச்சிகைக்கீழ்
பொல்லாதகாகம் புயமார்பு-நல்லாய்கேள்
கோழிமுகம்கண்டம் கோதைதொடைமுழங்கால்
பாழிலாமச்சமென் பார். (௩௪)

இதுவுமது.

603. வாழ்வதுதான்ரோமரிஷி சொன்னவாக்கியம்
மறவாதவொருநாளும் மனதுறுதிகொண்டு
ஆள்வதுதான்சத்தியமாய் எண்ணிக்கொண்டு
அப்பனேசாஸ்திரத்தைப் பழக்கம்பண்ணி
தாழ்வதுதான்வாராது சகலமுமேசித்தி
தன்மையென்றதேவியுமே அக்கினியாகும்
பாழ்வதுதான்போகாது பட்சிவித்தையப்பா
பஞ்சபட்சிஅறுநூறும் பலிக்குமுற்றே. (௩௫)

கருமானச்சருக்கப்படலம் முற்றிற்று.

ரோமமகாரிஷி அருளிச்செய்த
விநாடிபஞ்சபட்சி முற்றிற்று.

---

ஆக பாடல் - ௬௦௩.

---



உ

கடவுள் துணை.

# பஞ்சபட்சி பல்திரட்டு.



## முகவுரை.

உன்னிஒருவன் உரைத்தமுதலெழுத்தைப்
பன்னிப்பரவையாய்ப் பாவித்து-முன்னி
உதயத்திசைபட்சி உண்மைஉறைக்கக்
கதைமாவியப்பொருளே காப்பு. 1

## நூல்முதலியப்பொருள்.

பூமேவுநான்முகத்துப்புங்கவன்சிஷ்டிப்பெவையும்
மாமேவுபட்சிஐந்தாய்வாழுமே-சீர்மேவும்
வல்லூறுபேர்ஆந்தைவண்காகம்கோழிமயில்
எல்லாபிறப்பும்இது. 2

ஒன்றுதிசைக்குருவிஒன்றுவரும்ஓர்தூத
நின்றநிலைஆரூடத்தின்நேரும்நன்றி
வழுவாதுவந்தாய்ந்துவல்லார்கள்சொன்ன
முழுவாகடத்தின்முறை. 3

மொழிக்குமுதன்எழுத்தேமுன்உதிக்கும்அங்கே
பழிக்கும்அவன்தன்நிலையும்பார்த்து-வழிபெறவே
பேரால்வருவனவும்பேதம்அறிந்துணர்வுற்
றாராய்ந்துசொல்வதறி. 4

## பூருவபட்சத்தின் அட்சரப்பட்சி.

அம்முதல்நான்கும்வல்லூறில்முதல்இரண்டாந்தை
இம்முதல்இரண்டுகாகம்ஊன்கோழிஎம்முதல்ரெண்
டுற்றமயில்ஓம்முதல்ரெண்டும்குறில்ஆண்பெண்நெடிதாம்
ஒன்றாய்த்தம்பேடென்றுணர். 5

## அமரபட்சத்தின் அட்சரப்பட்சி

இம்முதல்இரண்டும்வல்லூறும்முதல்இரண்டாந்தை
ஓம்முதல்இரண்டுஉயர்காகம்அம்முதல்-நான்
காகும்இவைகோழிஆனமயில்எம்முதல்ரெண்
டாகும்அமரபட்சமே. 6

---

* ஈண்டுவெண்பாமுதலிய செய்யுட்களிற் பிரித்திருப்பது செய்சொல்லாதவேயன்றிச்சீரும்தளையுமாகப்பிரித்தன்றாம்.

பூருவபட்சம்பகல்வாரம்-எ-ற்கும்ஊண்பட்சி.

செவ்வாய் அருக்கன்வல்லூறாண்சிந்த திங்கள்புதன் ஆந்தை
கவ்வாய்வியாழங்காரண்டம்கருதும்வெள்ளிகோழி அதாம்
வவ்வார்சனியின்மயில்உண்ணும்மானேபூர்வப்பகல்அதனில்
இவ்வாறின் நூல்குறுமுனிவர்இயம்பலுற்றார்உலகுக்கே. 7

அமரபட்சம்பகல்வாரம் எ-ற்கு ஊண்பட்சி.

திங்கள்சதிமயில்ஆம்சேய் அருக்கன்கோழி அதாம்
பொங்குபுதன்காகம்போஜனம்ஆம்-மச்சையே
அந்தணனுக்காந்தை அணிபுகர்க்குவல்லூறு
சந்ததமும்புற்பகற்கேசாற்று. 8

பூருவபட்சம்இரவுவாரம் எ-ற்கும்படுபட்சி.

ஞாயிறுசெவ்வாய்காரண்டம்நல்லபுந்திமதிகோழி
மாயப்பெண்ணேமயில்ஆகும்வளரும்வெள்ளிவல்லூறும்
ஓயாஆந்தைசனிஉண்ணும்உயரும்தங்குல்உணர்க்கென்ன
ஆயும்வேதக்குறுமுனிவர் அருளால் அறைந்த அரும்பொருளே. 9

அமரபட்சம்இரவுவாரம்-எ-ற்கும் ஊண்பட்சி.

மந்தன்சோமன்கோழியின்ஊண்மானேவெள்ளிமயில்மண்ணும்
புந்திஆந்தைபோஜனம்ஆம்ரென்னிற்காகம்இறைஅருந்தும்
சிந்தைமகிழ்ந்தசேய்உரவிதினத்தில்வல்லூறமுதுசெய்யும்
அந்தித்தோன்றும்பிறப்பக்கத்தடைவுசொன்னோம்அறிநன்றே, 10

பூர்வபட்சவாரம்-எ-ற்கும்படுபட்சி.

அருக்கன்வெள்ளிமுனிவாணம்அணிசேர்செம்பொன்காரியுடன்
நெருக்கும்வல்லூறேமரணம்நெறியாய்காகம்மதிமரணம்
செருக்குஞ்செவ்வாய்கோழி அதாம்சேர்ந்தபுத்திமயில்மரணம்
கருக்கும்குழலாய்முற்பக்கம்கடிகை அறுபான்சாவாமே. 11

அமரபட்சம்-எ-ற்கும்-படுபட்சி.

கூறிடும்திங்கள்ஆந்தைகுலவுசெய்வல்லூறுகும்
மீறிய அருக்கன்காகம்தெள்ளியும்புதனும்அஞ்சை
ஏறியசனிவியாழம்கோழிஆம்இயம்புங்காலை
ஆறுபத்தாகும்கன்னல்அளவுசாமம்அமரபக்கம். 12

பூருவபட்சம்பகல்இரவு-உ-ற்கும்-பட்சிஒன்றன்தொழில்முறை.

உண்டுநடந்துஉலகாண்டுநித்திரையாய்த்
தண்டம்உரமுற்பகலிற்சாவாகும்-உண்டே
அரசாம்இறந்துவழிஅன்னேவரம்போம்
இரவாய்உரங்கும்இடை. 13

அமரபட்சம்பகல்இரவு-உ-ற்கும்பட்சி ஒன்றன்தொழில்.

உண்டுடனேசெத்துமுறங்கிஅரசாண்டு
மண்டிவழிநடக்கும்மாமயிலே-அன்றிரவில்
உண்டும்உறங்கிஉடனேகடந்திரந்து
கண்டரசன்ஆகும்எனக்காண். 14

பட்சம்-ரு-ற்குகடைநிலைப்பட்சிகள்,

அறிவானபூருவத்தின்மரணம்உண்ணும்
அப்பனேஅவ்விரல்தூக்கம்உண்ணும்
கரியானஅமதத்தில்நடைதான்உண்ணும்
கண்டுசொன்னேம்பின்இரவில்அரசன்உண்ணும்
வரியானஅட்சரங்கள்பிரித்துப்பார்த்தோர்
வகைஅறிவார்மற்றோர்கள்அறியமாட்டார்
நெறியாகச்சொன்னோர்கள்பெரியோர்ஐயா
நிட்சயமாய்க்கும்பமுனிநிகழ்த்தினோரே 15

பூருவபட்சம்பகல்சாமம்-ரு-ற்கும்பட்சிகளின்-ரு-ன்தொழில் முறை.

வலிஉண்ணஆந்தைவழிநடக்கக்காகம்
உலகாளும்கோழிஉறக்கம்கலாபமயில்
செற்றுப்போம்என்றேசெயல்உரைத்தால்பூருவத்தில்
உற்றபலன்ஆம்என்றுணர்.

நினைவின்மயில்உண்ணநேர்நடக்கவல்லூர்
தினிதாந்தையேஅரசன்அகத்தனியனாய்
கறுத்தகோதூங்கிவிழக்காசினியிற்கோழி
இறக்கம்முற்பக்கப்பகல். 17

அறிவானகோழிஅமுதுண்ணத்தோகை
விரிவாய்நடக்கவலிவேந்தாய்ச்செறிஆந்தை
நித்திரைஆம்காகம்நெடிதிறக்குபூருவத்தின்
நித்தபலன்ஆகுமநினை, 18

பூருவபட்சத்தின்பகலிற்காகம்பொசிக்க
ஊர்நடக்ககோழிநீலகாளத்-தேர்மயில்தான்
வல்லூறுறங்கமடிந்துவிடும்ஆந்தையது
நல்லாய்நவில்வதறி. 19

உண்ணப்படின்ஆந்தைஊர்நடக்கக்காக்கையது
மண்ணாளக்கோழிமயில்தூங்கப்பெண்ணே
தவியாதவல்லூறுதான்இறக்கும்கண்டாய்
இவைபூர்வப்பகல்ஆம்எண். 20

பூருவபட்சம்இரவுஜாமம் ரு-ற்குப்பட்சிகள்-ரு-ன்தொழில்முறை.

அமுதுசெய்யக்காக்கைஅடர்ஆந்தைசெல்ல
சமர்இடும்வல்லூறரசன்ஆகத்-திமிரய்உற்றுத்
தூங்கிவிழத்தோகையதுதுஞ்சுவிழுமேகோழி
ஈங்குமுறபக்கத்திரவினில். 21

தோகைஉண்ணக்கோழித்தொடர்ந்துபயணம்உறக்
காகம்அரசாளமுனிக்கண்டுயில்ச்சாகுமே
வல்லூறுமுற்பக்கமா இரவில்ஆம்என்றார்
சொல்லூறும்முன்னோர் துணிந்து. 22

ஆந்தைஉண்ணவல்லூறதுநடக்கத்தோகைமயில்
வேந்தனும்கோழிதுயிலும்-மாய்ந்துவிடும்
காகம்அதுபக்கத்திரவில்இவைதான்
ஆரும்என்றார்முன்னோர் அறிந்து. 23

கோழிஉண்ணக்காகம்குலாவிவழிநடக்க
ஏழுலகும்ஆந்தை இனிதாளத்தாழ்வில்லா
வல்லூறுதூக்கம்மடியும்முன் இரவில்
வல்லோர்உரைத்தவழி. 24

வல்லூறுதான்உண்ணவசனமயில்நடக்கப்
பல்ஆன்றகோழிபதிஆள-நல்லாய்க்கேள்
ஆகல்உறும்பாகம்அனல்செய் ஆந்தையாம்
எதில்முற்பக்கமிரவில். 25

அமரபட்சம் பகல்ஜாமம்-ரு-ற்கும்பட்சிகள் ரு-ன்தொழில்முறை.

மயில்உண்ணக்கோழி அதுமண்ஆளக்காகம்
பயிர்அழியன்நகைதான்ஓடச்சயனம்
சிகரம்உறும்வல்லூறுதான்செயவேசெய்யும்
பகரும்அமரபட்சத்தின்பகல். 26

ஆந்தைஉண்ணவல்லூறரசுசெயமாமயில்தான்
மாய்ந்துவிடக்கோழிவழிநடக்க-நேர்ந்ததொரு
காகமேநித்திரையாய்காணும்அமரபக்கத்
தாகும்பகலில் அறி. 27

அமுதுசெயக்கோழி அரசாளக்காகம்
மமதைஉறும்ஆந்தைமடியத் திமிரமுடன்
வற்புறும்வல்லூறேகமாமயில்உறங்கிவிடும்
பிற்பகலில்ஈங்கிதனைப்பேசு. 28

உணவுள்ளவல்லூறுகாளமஞ்ஞை
பிணம்ஆக்ககோழிபெரிதும்தணைஇன்றிக்
காக்கைநடந்துசெலக்கண்டாந்தைகண்டுயிலும்
போக்கும்பாலிற்புகல். 29

கொடுவுண்ணஆந்தைகுவலயம்தான்ஆள
மடிவாகவல்லூறுமஞ்ஞைநடைஅதுவாம்
ஒப்பரியகோழிஊக்குயேபிற்பக்கத்
தப்பகலில்ஆம்என்றறி. 30

அமரபட்சம் இரவுஜாமம்-டு-ற்கும்பட்சிகள

டு-ன் தொழில்முறை.

உண்டுஉண்ணமஞ்ஞைஉலகாளவல்லூறு
மண்டலத்தில்ஆந்தைமடியவேகண்டுதொடி
ஊக்குசெலக்கோழிஉறங்கிவிடும்மேதினியில்
ஏர்க்குமொருபின்இரவினில் 31

பொசிக்கவலியன்புவிஆளஆந்தை
நசிக்கநற்காகம்நடக்க-துசிக்கோரு
தோகைதுஞ்சும்பின்இரவில்தோகால்மலயம்உறு
வாகைசேர்மாமுனிவன்வாக்கு. 32

முனிஉண்ணக்காகம்முயன்றுளச்சேவல்
இனிசாகத்தோகமயில்ஏகத்-தனியான்
வலியனேகண்ணுறங்கும்மாதேஉலகிற்
பெலயினப்பின்இரவினில். 33

காகம்உண்ணக்கோழிஅதுகாசினியைஆளமயில்
சாகவதுவல்லூறுதான்நடக்க-யோகம்உள்ள
நித்திரையாம்பன்னிரவில்நிர்மலகழுத்திஆம்
பத்திரையாம்சொன்னநெறி. 34

போசனம்ஆகக்கோழி பூவுலகாளத்தோகை
நாசம்உறும்வல்லூறுநல்ஆந்தையோசனையாய்
தான்செல்லுகாகம்சயனம்அதாம்பின்னிரவில்
மான்செலும்கண்ணாய்மதி. 35

பூருவபட்சம்பகல்தொழில்முறை டு-ற்கும்நாழிகை.

ஊன்பட்சிக்கொன்றரைஆம்ஒன்றேகால்தான்நடைக்காகம்
ஏணில்அரசுக்கிரண்டு-வாணுதலாய்
தூங்கும்அதர்கோர்முக்கால்துஞ்சும்அதற்கோஅரையாம்
பாங்குடையமுற்பகலினில் 36

பூருவபட்சம்இரவுதொழில்முறை ரு-ற்கும்நாழிகை:

உண்பானுக்கொன்றேகால்தான்நடைக்கும்
குண்ணாளஅரசுக்கொன்றாய்மால்பெண்பாவான்
நித்திரைக்கொன்றென்றறையேநின்றதுபோற்கொன்றும்அதற்
கித்தலத்தின்முன் இரவினில். 37

அமரபட்சம்தொழில்முறை-ரு-ற்கும்நாழிகை,

ஊன்கடிகைரெண்டாகும்ஒத்தநடைஒன்றரைஆம்
ஆணின்அரசுமுக்கால்ஆனதோவீணின்
உறக்கம்அரைநாழிஉயிர்போக்கொன்றேகால்
பறக்கும்பிற்பக்கல்பகல். 38

அமரபட்சம்இரவுதொழில்முறை ரு-ற்கும்நாழிகை.

ஊண்எழுக்கால்போக்கெழுத்தால்ஊராள்வதோர்முக்கால்
மாணின்றுறங்கும்அதுமுக்கால் சேணின்று
சாகும்அதுநாற்கால்ஆகுமாம்கற்று
ஏகும்பிறக்கமிரவில். 39

பூருவபட்சத்தின் திதிபட்சி

பன்னொன்றொன்றுவலிபன்னிரண்டேரெண்டாந்தை
பன்முறைமூன்றெட்டுகாகம்அதாம்பன்னான்கு
நான்கொன்பதுகோழிப்பதினைந்தைந்தோரிருபத்
தான்மயில்பூருவத்தில் ஆம். 40

அமரபட்சத்தின் திதிபட்சி.

பதினைந்துபத்தைந்துவல்லூறுநான்கென்
பதுவதினன்காந்தைமூன்றெட்டும்மூன்று
வாயாசம்இரண்டேழ்பனிரெண்டுகோழிமயில்
தேய்வுபன்னொன்றுறுமே. 41

பூருவபட்சம்அமரபட்சம்-உ-க்கும்நட்சேத்திரபட்சி.

ஐந்தாறைந்தந்தாறச்சுவினிநேர்ஆறைந்
தைந்தாமறைர்தாகஇரேவதிநேர்முந்திய
பட்சமும்பின்பட்சமும்முறையேபகருவர்காண்
பட்சிஐந்தும்உள்ளபடி. 42

பூருவபட்சம் இராசிபட்சி.

அறிவுடையாய்ஆடரித்தேன்வல்லூறுரெண்டே
டுறுமமிதுனகன்னிமறையோன்பறைசிலைமீன்

---

* தளைபிறிக்குமிடத்துசொற்சொல்லாகப் பிரித்தலினாலேபிறிவு பட்டமெய்யையும்உயிரையும் ஒன்றுபடுத்தி உயிர்மெய்யிர்க்குந்தோன்றினமெய்யைக்கெடுத்தும்பிரித்துக்கொள்ள.

காகம்எருது துலேகோழிமகரம்கும்பத்
தோகைமுதற்பக்கம்இதாம்சொல். 43

அமரபட்சம்—இராசிபட்சி.

எருதுதலேமீனேவல்லூறியாழ்சிலேஆந்தை
அரிஅரிவைமான்காகம்ஆகும்மடியுடன்தேன்
வாரணம்ஆம்ஞொண்டுமயிர்பிற்பக்கத்
தாரணநூல்சொன்னதறிவு. 44

பூருவபட்சம்திசைபட்சி.

சொல்ஊறும்பூருவபக்கத்தில்தொல்கிழக்கு
வல்லூறுதெற்காந்தைவாயசம்மேற்கல்ஊறும்
கூந்தல்நல்லாய்வடக்குகோழிஆம்மதித்துஅது
வாமந்தமயில் ஆதமதி. 45

அமரபட்சம்திசைபட்சி.

அமரபக்கம்தன்னில்கிழக்காகம்
எமன்தன் திசைஅதுதான்கோழிகுமாரன்உறும்
வாகனமேற்காகம்வடக்காந்தைமத்திவலி
ஆகும்எனச்சொன்ஞர்அறிந்து 46

உவர்க்கால்திசைபட்சி.

மத்திபத்தில்வல்லூறுவாழ்ஆந்தைதெற்காகும்
ஒத்ததொருகிழக்காகம் இத்திசையில்
மேற்காகம்கோழிசிறந்தமயில்மேற்காகம்
எக்காலும்சாற்றுஇயல். 47

பூருவபட்சம்அங்கப்பட்சி.

மிதம்ஆகும்கூந்தல்விரல்உடன்தோள்மார்பு
துதிசேரகப்பட்டைகுய்யம்தோகைசதுர்ஆணி
செற்றிதோன்மார்பின்கீளநீள்பிரிஊருஇவை
உற்றதொருகோழிஒது 48

ஓதரியகாசிவிழிமுழங்கைஉந்திமுது
கோதில்முழங்கால்காகம்என்பரே போதுருவாய்
நல்லமுன்கைபின்புபக்கம்நாட்டும்நடுமுதுகு
வல்லகெண்டைஆந்தைஅதுஆம் 49

ஆமேகழுத்துமணிகட்டுகீழாம்கை
நாமேவலதுபக்கம்நல்மறங்கு-பூங்குழலாய்
வல்லூறுமுற்பக்கம்ஆம்அங்கப்பட்சிஅது
கொல்வாய்முழுதும்துணிந்து. 50

அமரபட்சத்தின் அங்கப்பட்சி.

துணிந்துரைப்பாய்கண்டம்மணிகட்டுந்தோளும்
மணந்தஇடைபூம்கணக்கால்வல்லூறுணர்ந்தபடி
நங்கைவயிறுநடுமுதுகுகெண்டைக்கால்
அறகுழலாய்ஆந்தைஎனல்ஆம். 51

குழல்ஆர்ந்தநல்லாய்கேள்மார்பின்கீழ்தொடை
எழில்ஆர்ந்தமுன்கையோதேனே முழங்கையோ
டான்றவிரலுடனேகைகீழ்வலபக்கம்
என்றஎழில்முதுகோடங்கு 52

ஈங்குருமநாசிவிறிவாய்இடப்பக்கம்
ஓங்கும்முழங்கால்காதஓதுவார் தீங்கில்நெற்றி
கைப்பட்டமார்புபிடரிதுடைகார்குழலான
செப்பும்உறும்கோழிஎனச்செப்பு. 53

செப்பும்தலைதோள்சிறந்தகைகீழ்கூந்தலுடன்
மெய்ப்புடையகுய்யன்வியன்மயில்ஆம்-பிறபக்கம்
தன்னில்தொடுகுறியாய் சற்றும்அங்கம்பட்சிஇவை
அன்னநடைமாதேஅறி. 54

அங்கபட்சியில்இன்னம்ஒருஅடைவுஅகாரசப்தம்.
உடையான் அங்கப்பட்சி.

காணும்அகாரம்பேரான்உடையகண்டம்முதல்
காணும்சிரசாந்தகைக்காக்வேணும்
கோருடப்புமயில்முன்பின்ஆகும்வலியன்
தாழ்வில்இருசரந்தான். 55

இகாரசப்தம்உடையான் அங்கப்பட்சி-

தானும்இகாரப்பேரான்உடையகண்டம்முடல்
காணுதலைக்காகம்கைக்கோழி-மானே
உடலேமயில்முன்பின்வல்லூறுகால்தான்
அடல்ஆந்தைஅந்தும்அனல்ஆம். 56

உகாரசப்தம்உடையான் அங்கப்பட்சி.

அண்டும்உகாரப்பேராப்பேரான்உடையசென்னிமுதல்
கண்டம்வரைக்கோழிஆந்தைமயிலாம்உண்டான
வல்லூறுடல்முன்பின்வாழுமேஆந்தைஅது
நல்லகால்காகம்எனநாட்டு 57

எகாரசப்தம்உடையான் அங்கப்பட்சி.

நாட்டும்எகாரப்பேருன்உடையசென்னிமுதல்
ஊட்டுநகைவல்லூறுடல்ஆந்தைஈட்டிடும்முன்

பின்ஆகும்காகம்பெருத்ததோர்கோழிகால்
நன்னுதலால்கண்டுநவில் (58)

ஓகாரசதம்உடையான்அங்கபட்சி.

நவிலும்ஓகாரத்தின்சென்னிவலியன்
கவரும்கைஆந்தைஉடல்காகம்புவிஅதனில்
தேனேமுன்பின்கோழிதேவர்க்கெல்லாம்அடுக்கும்
மானேமயில்கால்மதி (59)

பூருவபட்சத்தின்பட்சிநிறம்.

வல்லூறுபொன்நிறம்ஆம்வாள்ஆந்தைவெள்ளை அதாம்
சொல்லாரும்காகம்சிவப்பாகும்-நல்லாய்கேள்
கோழிநிறப்பச்சைகுளிர்தோகையேகருப்பு
நாழிமனக்கநவில் (60)

அமரபட்சத்தின்பட்சிநிறம்'

ஆந்தைசிவப்பாம்அணிகாகம்பொன்நிறமாம்
வாய்ந்தபச்சைவர்னமயில்ஆகும் ஏந்திழையீர்
வெள்ளை ஆம்கோழிவிளங்கும்வெருகறுப்பு
வல்லூறுகண்டுமதி. (61)

பூருவபட்சத்தின்பட்சிகுணம்

வல்லூறுப்பார்ப்பான்வளர்ஆந்தைதான்வணிதன்
செல்லாரும்காகம்செகத்தரசன்-நல்லாய்கேள்
கோழியாம்வேளாளன்கூறுமயில்சண்டாளன்
ஆழியாள்சொன்னதறி. (62)

அமரபட்சத்தின்பட்சிகுணம்.

பொன்மறையோன்ஆம்வலியன்போர்வேந்தன்ஆந்தைஆம்
துண்ணுஎழில்காகம்துலைவணின்கண்—மன்னும்
இழிகுலத்தோன்கோழியேஓதும்கால்பச்சை
இழிகுலத்தோன்என்றேஇசை. (63)

பூருவபட்சத்தின்பட்சிபூதம்.

அரியபுவில்லூறுறப்பாகும்ஆந்தை
கரியதொருகாகம்கனல்ஆம்பெரியகால்
தேனேநிகர்மொழியாய்செஞ்சூட்டின்வாரணந்தான்
வான்ஆகும்தோகைமயில். (64)

அமரபட்சத்தின்பூதம்.

வல்லூறுதேயுவாம்வல்ஆந்தைவாயுவாம்
பொல்லாகருங்காகப்பூமிஆம் நல்லாய்கேள்
நீர்ஆகும்கோழிதான்நீலமயில்காகம்ஆம்
கார்ஆர்மழலாய்கனி. (65)

பட்சம்-உ-ற்கும்பட்சிமுக்காலம்.
ஆந்தைமயில்முற்காலம்ஆனதொருவாரணந்தான்
சேர்ந்தநிகழ்காலம்செப்பிடுமே-வாய்ந்தொரு
வல்லூறுகாகம்வரும்காலம்காட்டுமே
வல்லோர்உரைத்தவழி. (66)

பட்சம்-உ-ற்கும்பட்சிதாதுமூலசீவன்கள்.
வல்லூறுமூலம்வளர்ஆந்தைசீவன்ஆங்
சல்லாபம்ஆம்காகம்தாதுவாம்- நல்லாய்கேள்
கோழிமூலத்தாதுகோலமயில்சீவதா
தாழியான்சொன்னதறி. (97)

பட்சம்-உ-ற்குபட்சி வடிவு.
வல்லூறுநீள்வட்டம்மால்ஆந்தைஐங்கோணம்
அல்ஆகும்காகம்அறுகோணம்மெல்லியதாய்
கோழியதுநாற்கோணம்கோலமயில்முக்கோணம்
ஆழியான்சொன்னதறி. (68)

பட்சம்-உ-ற்கும்பட்சிகால்.
வல்லூறுகால்ஆவன்காகம்நீர்க்கால்ஆம்
நல்லதிரல்ஆந்தை அகிர்நார்க்காலம்சொல்லில்
குறும்கோழிகொம்பால்குலவும்மயில்பட்சி
பெருங்கால்ஆம்என்றிதனைப்பேசு. (69)

பட்சம்-உ-ற்கும்பட்சிநிறம்.
வல்லூறுபாலைவளர்ஆந்தைவண்குறிஞ்சி
நல்லாய்க்கேள்காகம்அதுநல்லமருதம்-சொல்ஆழிய
வாரணமேமுல்லைவளருமயில்நெய்தல்
ஆரணநூல்சொன்னதறி. (70)

பட்சம்-உ-ற்கும்பட்சிலோகம்.
வல்லூறுபொன்ஆம்வளர்ஆந்தைவெள்ளிஅதாம்
சொல்ஆருங்காகம்அதுசெம்பாரும் நல்லாய்கேள்
கோழியேவெண்கலம்நும்கோலமயில்இரும்பாம்
ஆழியான்சொன்னதறி. (71)

பட்சம்-உ-ற்கும்பட்சிஆண்பெண்.
வல்லூறுகாகம்மயில்மூன்றும்ஆண்ஆகும்
நல்லறிவுகோல்நாம்சொன்னோம்நல்லாய்கேள்
ஆந்தைபொற்கோழிபெண்ஆகும்இதேதோழி
தேர்ந்தறிந்தும்சொல்லும்திரம். (72)

பட்சம்-உ-ற்கும்சுவை.
தித்திக்கும்ஆந்தைசிறுபுளிப்புகோழிஅதாம்
எத்துஒருகாகம்இனிதுவப்பாம் பத்திசெய்யும்
வல்லூறுகாறுநீமயில்கைக்கும்என்பரே
அல்லார்குழலாய்அறி. (73)

பட்சம்-உ-ற்கும் ஆள்வர்த்து.
வல்லூறுநிற்கின்முன் மாமறையோன் தான்மீண்டான்
வல்லகருங்காகம்வருகின்முன் மெல்லியதாய்
கோழிதான் ஊர்க்குள்வந்தான் கோமமஞ்ஞை ஆனை
நாழிகையிலேவருவான்நாடு. (74)

பட்சம்-உற்கும்வரவுகால அளவு.
கோழிக்குநான்குநாள் குவலயத்தில்மிக்க
வாழும்மடவல்லூறுக்கைந்துநாள்-தோழிகேள்
காகம்நாள்மூன்றுகும்கார் ஆந்தைநாள் இரண்டு
தோகைமயில்நாள் ஒன்றும்சொல். (75)

பட்சம்-உ-ற்கும்பட்சி பருவம்.
உண்ணுமது பலாபலன் உயர்நடை தானேகுமான்
பண்ணிமரசுவேபார்வேந்தன்-நண்புண்டைய
முற்றும் துயில்கிழவன் மோனமுடிந்தோன்சாவு
பற்றும்பருவப்பயன். (76)

பூருவபட்சத்தின்பட்சித்துரு
வலிசத்துருவாயசமும்கோழியாம்கோழி
காலபமும்தான் சத்துரு ஆகும்கலபம்வலி
வாயகம் அவற்குவல்லூறுந்தைகோழிக்கநந்தை
தாயசமும்மஞ்ஞைசத்துரு ஆம். (77)

அமரபட்சத்தின்பட்சித்துரு.
கோழிமுனிவல்லூறுக்காந்தைக்குமஞ்சைவலி
கோனமஞ்ஞையும்காகச்சத்துருவாம்-கோழிக்குக்
காகமுடன்வல்லூறும்பிறபகலில்சேர்கைக்குக்
காகமுடன் ஆந்தைஎனுங்காண். (78)

பூருவபட்சம் ஊணின்பலாபலன்.
போஜனம் ஆகில்பதிவாழும்போனோர்மீள்வர்போம்கவலை
காசினிவாழும்மழைபொழிவும்களவுஇல்லைகதிர்விளையும்
பேசில்கன்னிப்பேறுகும்பிணியும்தீரும்பெருவள்
மாசிசெழும்பொன்வானிடமன்னரைவெல்லாய்மாங்குயிலே. (79)

பூருவபட்சஅரசன்பலாபலன்.
யாத்திரைஆதிநிலைகுலையும்ஒண்ணுவெல்வர் இருநிதிபோம்
காத்திரமில்லாக்கதிர்விளையும்கன்னியவர்
மாத்திரன்சொல்லும்பொருள்கூடாவேட்கைதவிர்ந்துமனம்கூடா
சூத்திரம்சொன்னபசியாலேசொன்னார்பெரியோர்சுரிகுழலே. (80)

பூருவபட்சம் அரசின்பலாபலன்.
அரசேசெய்யீர்புவிப்பேறும் அரசராலேபலன்எய்தும்
முரசும் அதிரும்வரிசையுடன்மூடகருமம் தான்விலகும்
பரிசும்பெரியோர்திரள் இடுவர்பழயதணிபோம்பயம் இல்லை
புரைபோம்களவுந்தான்காணும்போர்க்கும்இல்லைபொற்கொடியே ()

பூருவபட்சம்நித்திரையின்பலாபலன்.
தூங்கும்ஆகில்நோய்மாறாதூரம்போனார்தம்மீளார்
அங்கேகருமம்நன்றாக அழிவைவாழ்க்கைத்தாழ்வாகும்
திங்கே அல்லாமல்மழைபொழியாய்ச்செந்நெல்விளையாச்செய்கருவி
ஒருமனமுந்தாராலேஉண்மையாகஉரைத்தோமே. (82)

பூருவபட்சம்மரணத்தின்பலாபலன்,
துஞ்சும்ஆகில்சாவுசொல்லும்கொலையாப்பிணியும்தான்எய்து
நெஞ்சில்நினைத்தபொருள்கூடாநிதியும்காணார்நிலைகுலைவார்
வஞ்சாநோயும்மிகவுண்டாம்மனையாள்வெருப்பள்உறவாகாள்
கஞ்சமலர்ஆர்குழலாளேகருத்தால்உரைத்தசெடுத்துரையே. (83)

அமரபட்சம்ஊணின்பலாபலன்
கெடுதியும்உடனேகாணார்கிளையுடன்வாழ்வுபேறும்
கடுதியபிணியும்தீரும்கலக்கமோசற்றும்இல்லை
அடைமழைபெருகஉண்டாய்அங்கமும்மலிவாம்கண்டாய்
முடிகியபயணம்இல்லைமொழியும்பிறபக்கஊணே (84)

அமரபட்சம்ஊணின்பலாபலன்
வெற்றியும்சுகமும்உண்டாம்வியாதியும்மாறும்பின்பு
பற்றியகருமம்கூடும்பயமில்லைஅங்கமும்தாழா
உற்றதோர்கெடுதிகாணும்உறுமமழைஉண்டுதூரத்
துற்றகற்காவுகூடச்சொல்லும்பின்நடக்கதோன்றில். (85)

அமாபட்சம்அரசின்பலாபலன்.
செயமொடுசுகமும்உண்டுசிறந்ததோற்பயணந்தன்னில்
புயல்இடும்மழையும்வுற்பம்புவிதனிற்கலகம்யில்லை
இயம்பினர்பெறலாம்வெற்றிஇலாபமும்நீளமதாகும்
பயம்விளையாதுதேய்வின்அரசதாம்பாமைஆகில் (86)

அமரபட்சம்நித்திரையின்பலாபலன்.
வன்னியபிணிஅலால்மற்றொருபிணிஅதிகம்ஆகும்
மன்னியமழையேஇல்லைவைத்தனகெடுதிஆகும்
துன்னியநெஞ்சில்தோஷம்தோன்றிடும்கருமம்செய்யும்
பன்னியபிற்பக்கத்தில்உறங்கும்அப்பறவையாகில். (87)

அமரபட்சம்மணத்தில்பலாபலன்.
காவினில்பயமும்உண்டுகலகம்ஆம்கருமம்எல்லாம்
தீவினைப்படுமம்தன்றிசெய்யும்நல்வினைகள்ஆகா
சாவினில்விழுந்தபட்சித்தாழ்பக்கம்முதிப்பதாலே
பூவினிற்சிறந்தமாதேபுகன்றநல்புள்ளின்நூலே. (88)

## உரோமரிஷிவிநாடி பஞ்சபட்சிமூலமும்,

பஞ்சபட்சிபலதிரட்டு மூலமும்.

முற்றிற்று.